ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:



பெருந்தேவித்தாயார் பேரருளாளன் – காஞ்சிபுரம்.

ஸ்வஸ்தி ஹஸ்திகிரிமஸ்தசேகர: ஸந்தநோது மயி ஸந்ததம் ஹரி: ।
நிஸ்ஸமாப்யதிகமப்யதத்த யம் தேவமௌபநிஷதீ ஸரஸ்வதீ ॥

– வரதராஜஸ்தவம் 1

இந்நூலினை ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தினர் அனைவரும் குறைந்த விலையில் பெற்றுப் பயன்பெறும் வண்ணம் தரமான அச்சுத் தாளினை கொடுத்து உதவியவர் நமக்கு பரம ஆப்தரும், ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேசங்களுக்கும், ஸம்ப்ரதாயத்திற்கும் பற்பல நற்பணி களைச் செய்துவருபவருமான ஸ்ரீ.S.A.R.ப்ரஸன்ன வேங்கடாசார்யர் சதுர்வேதி ஸ்வாமி (ஸ்ரீபாஷ்யகாரர் சாரிடபிள் டிரஸ்ட், சென்னை - 17.)

ஸ்ரீ:
ஆழ்வான் திருவடிகளே சரணம்.
ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ வரதராஜஸ்தவ வியாக்கியான அவதாரிகை

*மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங் குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வானருளிச் செய்த பஞ்சரத்நமென்று ப்ரஸித்தமான பஞ்சஸ்தவத்தில் வரதராஜஸ்தவம் நான்காவது ஸ்தோத்ரமென்பர் பெரியோர். ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தரபாஹுஸ்தவம், ஸ்ரீஸ்தவம் என்று பஞ்சஸ்தவங்களின் அடைவு காண்க.

இந்தவரத ராஜஸ்தவம் *தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளரான எம்பெருமானருடைய நியமனமடியாகத் தேவப்பெருமாள் விஷயமாய் அருளிச் செய்யப்பட்டதாகும். ஸ்ரீவைஷ்ணவத்வேஷியும் வீரசைவனுமான சோழராஜனுடைய கொடுங்கோன்மையினால் திருக்கண்களையிழந்து தென்னரங்கன் திருப்பதியிலிருப்பையு மிழந்து திருமாலிருஞ்சோலை மலையேற எழுந்தருளின ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவம் முதலாக மூன்று ஸ்தவங்களை யருளிச்செய்து, பிறகு சில ஆண்டுகள் கடந்த பின்பு சோழராஜன் மாண்டொழிந்தமை கேட்டு மகிழ்ந்து அழகர் ஸந்நிதியில் விடைபெற்றுக்கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலேற மீண்டெழுந்தருளின வளவிலே :—

திருநாராயண புரத்தேற எழுந்தருளியிருந்த எம்பெருமானர் கோயில்நின்றும் வந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவராலே சோழராஜஸதஸ்ஸில் ஆழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் நேர்ந்த ஆபத்தைக் கேட்டருளிப் பரமதுக்கபராகுலராய் 'ஆழ்வானைகிலும் உயிர் வாழ்ந்திருக்கப்பெற்றோமே' என்று திருவுள்ளம் தேறியிருந்து, சில வாண்டுகள் கடந்தபின்பு மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டானைக் கோயிலுக்குப் போகவிட்டருளி "கோயில் விசேஷங்களை யறிந்து வாரும்" என்று நியமித்தருள, அவரும் மிக விரைந்து கோயிலேற விடைகொண்டு, அப்போதே அங்கு வந்து சேர்ந்திருந்த ஆழ்வானை ஸேவித்து, சோழன் புழுத்து மாண்ட செய்தியுட்பட எல்லா வற்றையும் அறிந்துகொண்டு மீண்டு திருநாராயணபுரம் சென்று எம்பெருமானர் திருவடிகளிலே இவற்றை விண்ணப்பஞ்செய்ய, அது கேட்டு அவர் பெருமகிழ்ச்சியுடன் உடனே அங்கு நின்றும் புறப்பட்டு மிக விரைந்து கோயிலேற எழுந்தருளி முதலிகளும் தாமுமாக ஆழ்வான் திருமாளிகைக்குப் போந்தருள, ஆழ்வானும் எதிரேயெழுந்தருளி உடையவர் திருவடிகளிலே விழுந்து ஸேவித்துத் திருவடிகளைச் சிக்கனப் பிடித்துக்கொண்டு கிடக்க, உடையவரும் ஆழ்வானை வாரியெடுத்தணைத்துக்கொண்டு துக்காதிசயத்தாலே ஒரு வார்த்தையுமருளிச் செய்யமாட்டாமல் *உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து விம்மல் பொருமலாய் "வாரீர் ஆழ்வான்! இத்தர்சநத்துக்கு த்ருஷ்டிபூதரான உமக்குக் கண்போவதே!, இது என்னுடைய துஷ்கர்ம பலமன்றோ" என்றிங்ஙனே பலவாறாகப் புலம்பி வார்த்தையடைவிலே ஆழ்வானைத் தேற்றியருளித் தாமும் தேறி, அவரையுங்கூட அழைத்துக்கொண்டு மடமே எழுந்தருளி; அதின்மற்றைநாள், ஆழ்வான் திருமாலிருஞ்சோலை யாத்திரையிலே அருளிச்செய்திருந்த மூன்று ஸ்தவங்களையும் எம்பெருமானர் திருச்செவிசாத்திப் போரவும் திருவுள்ளமுகந்து ஆழ்வானை நோக்கி "உம்முடைய இவ்வருளிச் செயல்களாலே யன்றோ நம்முடைய திருவரங்கச் செல்வம் நிஷ்கண்டகமாகப்பெற்று நாமும் இங்கு வாழ்ந்திருக்கப் பெற்றோம்!, *ஸ்ரீ ஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான பேரருளாளர் *வரந்தரும் மாமணிவண்ணனாக ப்ரஸித்தராயிராநின்றார்; நீர் அவர் விஷயமாக ஒரு ஸ்தவம் விண்ணப்பம் செய்யும்; கண்கொடுத்தருள்வர்" என்றருளிச்செய்ய, "அடியேனுக்கு ஸ்வாமி திருவருளின் பலனான உட்கண்ணே போதும், பாழும் வெளிக்கண் வேண்டா" என்று ஆழ்வான் கூற, எம்பெருமானர், அப்படியன்று; தேவப் பெருமாள் விஷயமாக ஒரு ஸ்தவம் சொல்லியே யாகவேணும்" என்று பலகாலும் நிர்ப்பந்திக்க, ஆழ்வானும் ஆசார்ய நியமனத்தை சிரஸா வஹித்து இந்த ஸ்தவத்தை யருளிச்செய்தார்.

இதுதன்னில், *ததபி கிமபி ஹந்த துர்வாஸநா...என்கிற (90) ச்லோகத்தில் திருக்கண் வேணுமென் ப்ரார்த்தனை ஸூசிதமாகவுள்ளதென்பர் பெரியோர்.

பவ..இந்த ஸ்தவம் தலைக்கட்டினவாறே தேவப்பெருமாள் திருமுன்பே இதனை அரங்கேற்றுவிக்கவேணுமென்று ..ம்பற்றிய எம்பெருமானர் ஆழ்வானை யழைத்துக்கொண்டு பயணகதியிலே பெருமாள் கோயிலேற ..ள, ஆழ்வான் வரதராஜஸ்தவத்தைப் பேரருளாளன் திருமுன்பே விண்ணப்பஞ் செய்து தலைக்கட்டு ..ரிவிக்க எம்பெருமானர் சில அன்பர்களோடு வார்த்தையாடிக்கொண்டு பராக்காயிருக்க, பேரருளாளன் ..ளும், தச்செவி சாத்தி ப்ரஸந்நனாய் "வாரீர் ஆழ்வான்! நம் பக்கலிலே உமக்கு விருப்பமானதை வேண்டிக் ..ங்கள் இ என்று அருளிப்பாடிட்டு நியமிக்க; ஆழ்வான் உடையவர் திருவுள்ளப்படியே கண் வேணுமென்

அ—

ஹுதே "நான் பெற்ற பேறு நாலூரானும் பெறவேணும்" என்று ப்ரார்த்திக்க, 'அப்படியே பெறக்கடவன்' என்று பேரருளாளன் வரமளித்தருளினன்.

[நாலூரானென்பவன் ஒரு வைஷ்ணவன்; சோழராஜனிடத்தில் வால்லப்யம் பெற்றிருந்து, பெரிய நம்பிக்கும் ஆழ்வானுக்கும் மஹாவிபத்து விளைவதற்கு மூலகாரணமாயிருந்தவன் இவனே. இவ்வகையாலே மஹாபாபாதியாய்ப் போந்த இவனுக்கு நரகமே பலிக்குமென்று நிச்சயித்து வருந்திய ஆழ்வான் அந்த மஹாபாபியையும் கைவிடமாட்டாத ஆந்ருசம்ஸ்யத்தாலே அவனுக்கு நன்மை விரும்பினர். இந்த மஹாகுணம் ஆழ்வானுக்கு அஸாதாரணமென்று ப்ரஸித்தம்.]

ஆழ்வான் திருக்கண் வரம் வேண்டிக் கொள்ளவில்லையென்பதறிந்த எம்பெருமானர் திருவுள்ளமுளைந்து பெருமாளை நோக்கி "ஸர்வஜ்ஞரான தேவரீர் இப்போது என் நினைவைத் தலைக்கட்டவில்லையே!" என்றும், ஆழ்வானை நோக்கி "நீர் ஸ்வதந்திரராய் என் நினைவைத் தலைக்கட்டாதே என்னை வஞ்சித்து இங்ஙனே செய்தீரே!" என்றும் இருவரையும் வெறுத்து இனி யென்! என்று திகைத்து நிற்க, பேரருளாளன் "இராமாநுசா! ஆழ்வான் நம்மையும் உம்மையும் காணுமிடத்துக் கட்கண்ணாலே காணக்கடவர்" என்று வரமளித்தருள, எம்பெருமானர். க்ருதார்த்தராய் ஆழ்வானுடன் மீண்டு கோயிலேற எழுந்தருளினர்.

நூறு சுலோகங்கள் கொண்ட இந்த வரதராஜஸ்தவம் ஒவ்வொரு தசகமும் ஒவ்வொரு வகையான விருத்தத்தில் அமையப்பெற்றிராநின்றது. ஸ்ரீமத் வேதாந்த தேசிகனருளிச்செய்த தயாசதகம் இந்த ரீதியையே அடியொற்றியது; அதுதன்னிலும் ஒவ்வொரு தசகம் ஒவ்வொரு விருத்தமாக அமைந்துள்ளது.

நம் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அருளிச்செய்த ப்ரபந்தங்களெல்லாம் ரஹஸ்யத்ரயார்த்த விவரணமாய் அர்த்தபஞ்சக விசதீகரண ப்ரவணமாயிறேயிருப்பது. அந்த க்ரமத்திலே இந்த வரதராஜஸ்தவம் அர்த்தபஞ்சக வைசத்யத்திலே விசேஷித்து நோக்குடைத்தாயிருக்கும். ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்றும், அநந்யார்ஹசேஷத்வமே ஆத்மஸ்வரூபமென்றும், குணாநுபவஜநிதப்ரீதிகாரித கைங்கரியமே புருஷார்த்தமென்றும், அஹங்காரமமகாரங்கள் தத் விரோதியென்றும், தந்நிவ்ருத்திக்கும் கைங்கர்யஸித்திக்கும் ஸர்வேச்வரன் திருவடிகளே கண்ணழிவற்ற உபாயமென்றும், ஜிதேந்த்ரியத்வம் தொடக்கமாகக் கைங்கர்யமீறாக உபாய பலமென்றும் அருளிச்செயயப்பட்டதிறே இதில். திருவஷ்டாக்ஷரத்திற் போலே ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் பொதிந்துகிடக்கப் பெற்ற இந்ததிவ்யஸ்தோத்ரத்திற்கு அறிவிலியான அடியேனிடும் வியாக்கியானம் "பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும், பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ" என்கிற கணக்கிலேயாகத் தக்கது. ... *

அவதாரிகை முற்றிற்று.

# தனியன் வியாக்கியானம்

ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்ய: நமஉத்திமதீமஹே।
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்களஸூத்ரதாம்॥

வேதத்திற்குத் தாலிபோன்ற திவ்ய ஸூக்திகளை அருளிச்செய்த ஆழ்வானையே நாம் எப்போதும் வணங்குவோம் என்பது இதன் கருத்து. இவருடைய ஸ்ரீஸூக்திகள் வேதமாதின் கழுத்தில் தாலிபோன்றிருத்தலாவது என் என்னில்:—உலகத்தில் பெண்களுக்குக் கணவனிருக்கிறுன் என்பதை நாம் எது கொண்டு தெரிந்து கொள்ளுகிறோம்? என்னில்; பெண்களின் கழுத்தில் தாலியைக் கொண்டே; அதுபோல, ஆழ்வானுடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே வேத மாதுக்குக் கணவனுளன் என்று நிச்சயிக்க வேண்டியதாகும். எனவே, வேதவேத்யனை பரதெய்வம் ஸ்ரீமந் நாராயண னொருவனே யென்று நிர்ணயிப்பதில் ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகள் நிகரற்ற ஆற்றல் வாய்ந்தவை என்றதாயிற்று. அன்னவரை அநுக்ஷணமும் நாம் தொழ ப்ராப்தம். அஃதில்லையாயினும் ஒருகால் நம: என்கிற உக்திமாத்ரமும் அமையுமென்று இத்தனியனுல் காட்டப்பட்ட தாயிற்று. *

தனியன் உரை முற்றிற்று.

ஸ்ரீ:

    

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்,

கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.

கூரத்தாழ்வான் திருவாய்மலர்ந்தருளிய

## பஞ்சஸ்தவத்தில்

நான்காவதான

# வரதராஜஸ்தவம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் இயற்றிய

## தத்வார்த்த சிந்தாமணி வியாக்கியானத்துடன்.

**श्रीमल्लक्ष्मणयोगिनो नियमनं मूर्ध्ना दधत्सादरं श्रीवत्साङ्कगुरूत्तमो गुणनिधिर्देवाधिराजस्तवम् ।**
**दिव्यं यं विरचय्य दृष्टिमतुलां लेभे स एष स्तवो जिह्वाग्रे मम दोषगन्धविधुरो नित्यं समुज्जृम्भताम् ॥**

**हृता यया हृद्या गुणगणसमृद्धा सुमधुरा गभीरा सौहार्दं मनसि विदधाना विजयते ।**
**यदीया श्रीसूक्तिस्स खलु भगवान् भद्रचरितो गुरुः श्रीवत्साङ्को निवसतु मदीये हृदि सदा ॥**

**श्रीकांचीपरवादिभीकरगुरुश्रीवंशलब्धोदयः दासः श्रीगुरुवैष्णवाङ्घ्रिनलिनेष्वण्णङ्गरार्याह्वयः ।**
**व्याख्यास्यन् मणिप्रवालसरणौ हस्त्यद्रिनाथस्तवं दोषेष्वाग्रहमिद्धाविरस्तु सुधियां निर्मत्सराणां सताम् ॥**

**प्रतिपदमर्थनिरूपणमादौ विरचय्य तदनु तात्पर्यम् ।**
**विशदीकरवाणि तथा यथा नु जिज्ञासुहृदयमानन्देत् ॥**

---

**(मूलम्.) स्वस्ति हस्तिगिरिमस्तशेखरः सन्तनोतु मयि सन्ततं हरिः ।**
**निस्समाभ्यधिकमभ्यधत्त यं देवमौपनिषदी सरस्वती ॥ १ ॥**

**ஸ்வஸ்தி ஹஸ்திகிரிமஸ்தசேகர: ஸந்தநோது மயி ஸந்ததம் ஹரி: ।**
**நிஸ்ஸமாப்யதிகமப்யதத்த யம் தேவமௌபநிஷதீ ஸரஸ்வதீ ॥ 1 ॥**

### பதவுரை

| | | | |
|---|---|---|---|
| ஔபநிஷதீ | உபநிஷத்துக்களிலுள்ள | நிஸ்ஸம அப்யதிகம் | ஒத்தாரும் மிக்காருமில்லாதவனாக |
| ஸரஸ்வதீ | வாக்கானது | அப்யதத்த | ஓதிற்றோ, |
| யம் தேவம் | யாதொரு எம்பெருமானை | | |

| | | | |
|---|---|---|---|
| ஹஸ்திகிரிமஸ்த சேகர: | ஹஸ்திகிரியின் சிகரத்திற்கு ஆபரணமாயுள்ள | ஸந்ததம் | எப்போதும் |
| ஸ: ஹரி: | அந்த ப்ரணதார்த்திஹர வரதன் | ஸ்வஸ்தி | நன்மையை |
| மயி | அடியேன் மீது | ஸந்தநோது | நிரம்பச் செய்யவேணும். |

*** வேதாந்த வாக்யங்களாலே ஒப்புயர்வற்றவனாக ஓதப்பட்டுள்ள எம்பெருமான் திருவத்தி மாமலைக்கு சிரோ பூஷணமாக விளங்கா நின்றான்; அத்தேவபிரான் உபய விபூதியிலும் அடியேனுக்கு நன்மையை நல்கவேணும் என்றதாயிற்று. * ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அடியேன் உடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யப் பெற வேணுமென்பது பரமதாற்பரியம்.

**[ஹஸ்திகிரீத்யாதி.]** * திங்நாகைரர்ச்சிதஸ் தஸ்மிந் புரா விஷ்ணுஸ் ஸநாதந:, ததோ ஹஸ்தி கிரிர் நாம க்க்யாதி ராஸீத் மஹாகிரே: * என்று ஹஸ்திகிரி மாஹாத்மியத்தின் முதலத்யாயத்திலே சொல்லப்பட்ட படி முற்காலத்தில் திக்கஜங்கள் வந்து இத்திருமலையிலே எம்பெருமானை ஆராதித்ததனால் **ஹஸ்திகிரி** யென்று திருநாமமாயிற்றென்பர்.

**[சேகர:]** **சிரஸ்ஸுக்கு** அலங்காரம் என்றபடி. சிரஸ்ஸுக்கு வாசகமாக **மஸ்த** சப்தம் **இங்குத் தனியே யிருப்பதால்.** **சேகர சப்தம்** அலங்கார மாத்திரத்தைச் சொல்லி நிற்கும்; **கரிகலப. என்னுமதுபோல பதங்களை [illegible]**.

**[ஸந்தநோது] ஸம்யக் விஸ்தாரயது என்றபடி. [நிஸ்ஸமாப்யதிகம்]** * ந தத்ஸமச் சாப்யதி **கச்ச த்ருச்யதே * என்பது உபநிஷத்து. * ஒத்தாரும் மிக்கார்களும் தன்தனக்கின்றி** நின்றான் * **என்றும். * ஒத்தார்மிக்காரை யிலையாய மாமாய * என்றும் ஆழ்வார்கள் பாசுரம்.** ஒத்தார் இல்லை **யென்றபோதே மிக்கார் இல்லையென்னுமிடம் ஸித்தமாயிருக்க,** அதனைத் தனிப்படச் சொல்லவேணுமோ **வென்று சிலர்** சங்கிப்பர்கள், அர்த்தாத்ஸித்திப்பதைக் காட்டிலும் ஸுஸ்பஷ்டமாகவே ஸித்திப்பது **விசேஷமாதலால்** சொல்லிற்று என்று உணர்க. அன்றியும், ஒத்தார் இல்லையென்றால், **அநந்வயாலங் கார ரீதியிலே** தனக்குத்தானே ஒத்தவனாக ஆகக்கூடுமாதலால் * ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாக **ரோபம:** '' என்றாற்போலே "பேரருளானன் பேரருளாளனோடு ஒத்தவன்'' என்றும் சொல்லுவதற்கு ப்ரஸக்தியுண்டு; ஆகவே இந்த விதத்தில் ஒத்தார் இருந்தாலும் மிக்கார் இல்லை—என்கிறதாகவுங் கொள்ளலாம். **ஔபநிஷதீ**—தத்திதவ்ருத்தி. .... .... (1)

**श्रीनिधिं निधिमपारमर्थिनां अर्थितार्थपरिदानदीक्षितम् ।**
**सर्वभूतसुहृदं दयानिधिं देवराजमधिराजमाश्रये ॥ २ ॥**

**ஸ்ரீநிதிம் நிதிமபாரமர்த்திநாம் அர்த்திதார்த்த பரிதாநதீக்ஷிதம் ।**
**ஸர்வபூதஸுஹ்ருதம் தயாநிதிம் தேவராஜமதிராஜமாச்ரயே ॥ 2 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ நிதிம் | ச்ரிய: பதியாய் | ஸர்வ பூத ஸுஹ்ருதம் | ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அன்பனாய் |
| அர்த்திநாம் | யாசிப்பவர்களுக்கு | | |
| அபாரம் | அளவற்ற | தயா நிதிம் | கருணாநிதியாய் |
| நிதிம் | நிதியாயிருப்பவனாய் | அதிராஜம் | அனைவர்க்கும் மேற்பட்ட தலைவனாயிரா நின்ற |
| அர்த்தித அர்த்த பரிதாநதீக்ஷிதம் | வேண்டின பொருளைக் கொடுத்தருள்வதையே விரதமாகக் கொண்டவனாய் | தேவராஜம் | தேவபிரானை |
| | | ஆச்ரயே | அடிபணிகின்றேன். |

**பெருந்தேவி மணவாளனாய், அர்த்திகளுக்கு கொள்ளக்குறையாத நிதியாயிருப்பவனாய், கேட்டார் கேட்ட பொருள்களையெல்லாம் அளித்தருள்வதையே விரதமாகக் கொண்டவனாய் ஸகல ப்ராணிகளுக்கும் நன்மையையே ஆசம்ஸிப்பவனாய், பிறர்படும் இடர்கண்டு ஐயோ! என்று இரக்கங் கொள்ளுமவனாய், *அயர்வறுமமரர்களதிபதியான பேரருளாளனைப் பணிகின்றே னென்கை. .... .... (2)

**नित्यमिन्द्रियपथातिगं महः योगिनामपि सुदूरगं धियः ।**
**अप्यनुश्रवशिरस्सु दुर्ग्रहं प्रादुरस्ति करिशैलमस्तके ॥ ३ ॥**

**நித்யமிந்த்ரியபதாதிகம் மஹ: யோகிநாமபி ஸுதூரகம் திய: ।**
**அப்யநுச்ரவசிரஸ்ஸு துர்க்ரஹம் ப்ராதுரஸ்தி கரிசைலமஸ்தகே ॥ 3 ॥**

| | | | |
|---|---|---|---|
| **நித்யம்** | சாச்வதமானதாய் | துர்க்ரஹம் | அளவிட்டு அறியக்கூடாததான |
| **இந்த்ரியபத அதிகம்** | சக்ஷுராதி இந்திரியங்களின் வழியைக் கடந்ததாய் | மஹ: | (தேவ பிரானுகிற ஒரு) தேஜஸ்ஸானது |
| **யோகிநாம்** | யோகிகளுடைய | | |
| **திய: அபி** | புத்திக்கும் | கரி சைல மஸ்தகே | ஹஸ்திகிரிசிகரத்தில் |
| **ஸுதூரகம்** | அதி தூரத்திலுள்ளதாய் | | |
| **அநுச்ரவ சிரஸ்ஸு** | வேதாந்தங்களிலும் | ப்ராதுரஸ்தி | விளங்கா நின்றது. |

*** பேருளாளன் ஒரு விலக்ஷண தேஜஸ்ஸு; இது மற்ற ஸூர்யன் அக்னி முதலிய தேஜஸ்ஸுக்களைப்போல் ஒரு கால விசேஷத்திலே நசிப்பதல்லாமல் சாச்வதமாயுள்ளது. நமது மாம்ஸ சக்ஷுஸ்ஸாலே காணக்கூடாதது. இந்திரியங்களை அடக்கியாளவல்ல யோகிகளினுடைய புத்திக்கும் எளிதில் எட்டாதது. ஆனந்த குணமொன்றைத் துதிக்கத் தொடங்கிப் பிற்காலிந்த உபநிஷத்துக்கும் எட்டாதது. அப்படிப்பட்ட மிக அற்புதமான ஒரு தேஜஸ்ஸானது ஹஸ்திகிரிமஸ்தகத்தில் ஸர்வஸுலபமாக ஸேவை ஸாதிக்கின்றது என்கை. ... ... (3)

**वल्लिका श्रुतिमतल्लिकामयी येन पल्लवितविश्वशाखया ।**
**स्वश्रिया करिगिरेरनुक्रियां वष्टि मृष्टवरदं तमाश्रये ॥ ४ ॥**

**வல்லிகா ச்ருதிமதல்லிகாமயீ யேந பல்லவிதவிச்வசாகயா ।**
**ஸ்வச்ரியா கரிகிரேரநுக்ரியாம் வஷ்டி ம்ருஷ்டவரதம் தமாச்ரயே ॥ 4 ॥**

| | | | |
|---|---|---|---|
| ச்ருதி மதல்லிகா மயீ | ச்ரேஷ்டமான வேதமாகிற | ஸ்வ ச்ரியா | தனது சோபையினாலே |
| வல்லிகா | கொடியானது | கரிகிரே: | ஹஸ்தி கிரியினுடைய |
| யேந பல்லவித விச்வ சாகயா | யாவனொரு தேவபிரானுகிற தளிரை யுடைத்தான ஸகல சாகைகளையுமுடைய (கரிகிரிபக்ஷத்தில்) யாவனொரு தேவபிரானாலே தளிர் பெற்ற எல்லாக்கிளைகளையுமுடைத்தான | அநுக்ரியாம் | அநுகாரத்தை (ஸாம்யத்தை) |
| | | வஷ்டி | விரும்புகின்றதோ |
| | | தம் ம்ருஷ்ட வரதம் | அந்த பூர்ண வரதனை |
| | | ஆச்ரயே | ஆச்ரயிக்கின்றேன். |

*** ச்ருதியை ஒரு லதையாக ரூபணம் பண்ணி, கரிகிரிக்கும் ச்ருதிக்கும் ச்லேஷத்தாலே ஸாம்யம் சொல்லுகிறது. ச்ருதியாகிற லதையும் **வரதேந பல்லவித விச்வசாகையா**யிருக்கும்; ஹஸ்திகிரியும் **வரதேந பல்லவித விச்வசாகமா**யிருக்குமென்று சப்தச்லேஷம், அதாவது, ச்ருதிலதா பக்ஷத்தில் **'யேந'** என்கிற த்ருதீயைக்கு "தாந்யேந தநவாந்" என்ற விடத்திற்போல அபேதம் அர்த்தமாகக் கொள்ளவேணும். சாகா சப்தமானது காண்வ காடக காலாபாதி சாகா விசேஷங்களைச் சொல்லுகிறது. ஸாமாந்யமாக லோகத்தில் சாகைகளுக்கு அழகு பல்லவங்களினாலாகையாலே இந்த வேத சாகைகளுக்கும் பல்லவத்தினால் அழகு சொல்ல வேணும். இங்கு பல்லவஸ்தாநீயன் எம்பெருமான்; வேதசாகைகள் எம்பெருமானாலே ஸஞ்ஜாத பல்லவங்களாயிருக்கின்றன வென்றால் வேதங்களெல்லாம் பகவத் பரங்களாயிருந்துகொண்டு அழகாக விளங்குகின்றன வென்றபடி.

இனி, கரிகிரிபக்ஷத்தில் **சாகா** சப்தம் மரக்கிளைகளைச் சொல்லுகிறது. அவை பேருளாளனாலே பல்லவிதமாகையாவது ஹஸ்திகிரியிலுள்ள ஸகலவ்ருக்ஷங்களும் பேருளாளனுடைய நித்யஸந்நிதியாலே

ததீய திவ்ய கடாக்ஷத்தையே தாரகமாகக்கொண்டு செழிப்புற்று விளங்குகையாம். இவ்வகையாலே ஹஸ்திகிரியும் வேத மௌலியும் பரஸ்பர ஸாம்யாபந்நமாகிறது. எம்பெருமானுடைய பாரம்யத்தை ப்ரகாசப் படுத்தும் விஷயத்தில் ஹஸ்திகிரியானது வேதத்தை யொத்திருக்கின்ற தென்றவாறு.

மதல்லிகா சப்தம் ச்ரேஷ்ட வாசகம்; ச்ரேஷ்ட ப்ரமாணமான ச்ருதி யென்றபடி. **[ம்ருஷ்ட வரதம்]** பரிசுத்தனான வரதனை என்னவுமாம். ... ... (4)

**यं परोक्षमुपदेशतस्त्रयी नेति नेति परपर्युदासतः ।**
**वक्ति यस्तमपरोक्षमीक्षयति एष तं करिगिरिं समाश्रये ॥ ५ ॥**

**யம் பரோக்ஷமுபதேசதஸ் த்ரயீ நேதி நேதி பரபர்யுதாஸத: ।**
**வக்தி யஸ் தமபரோக்ஷமீக்ஷயதி ஏஷ தம் கரிகிரிம் ஸமாச்ரயே ॥ 5**

| | |
|---|---|
| த்ரயீ | வேதமானது (ப்ருஹதாரண்யகம்) |
| இதி ந இதி ந (இதி) | இவ்வளவனல்லன் இவ்வளவனல்லன் (என்று) |
| பர பர்யுதாஸத: உபதேசத: | மேன்மேலும் மறுத்துக் கொண்டு போவதாகிற உபதேசத்தால் |
| யம் | யாவனொரு வரதனை |
| பரோக்ஷம் | இந்த்ரியங்களுக்கு வெளிப்படாதவனாய் [அபரிச்சிந்நனாய்] |
| வக்தி | சொல்லி நின்றதோ |
| தம் | அந்த வரதனை |
| ய ஏஷ: | யாதொரு இந்த ஹஸ்திகிரி |
| அபரோக்ஷம் ஈக்ஷயதி | ஸாக்ஷாத்தாக ஸேவை ஸாதிப்பிக்கின்றதோ |
| தம் [ஏதம்] கரிகிரிம் | அந்த இந்த ஹஸ்திகிரியை |
| ஸமாச்ரயே | ஆச்ரயிக்கின்றேன். |

*** கீழ் ச்லோகத்தில் வேதத்துக்கும் ஹஸ்திகிரிக்கும் ஒருவாறு ஸாம்யம் வருணிக்கப்பட்டது; இனி வேதத்திலுங்காட்டில் ஹஸ்திகிரிக்கு ஏற்றம் கூறப்படுகிறது.

ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் (4-3-1.) *த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே* என்று தொடங்கி ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபமான ஸமஸ்த ப்ரபஞ்சத்தையும் ப்ரஹ்மத்தின் ரூபமாகப் பராமர்சித்து, மேலே (6) * **तस्य ह वा एतस्य पुरुषस्य रूपं यथा माहारजनं वासः** * இத்யாதியாலே ஆகார விசேஷத்தையும் சொல்லி, * **अथात आदेशो नेति नेति न ह्येतस्मादिति नेत्यन्यत् परमस्ति** * என்று, கீழ்க் கூறிய ரூபமென்ன ஆகாரமென்ன இவற்றோடு கூடிய ப்ரஹ்மம் இவ்வளவேயன்று, இவ்வளவேயன்று, ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் அந்த ப்ரஹ்மத்திற் காட்டில் பரமான [சிறந்ததான] வஸ்து வேறொன்று கிடையாது என்று ஸர்வோத்க்ருஷ்டமாகச் சொல்லி வைத்தும், அந்த ப்ரஹ்மத்தைப் பரோக்ஷமென்றதே யொழிய ப்ரத்யக்ஷமாகக் காட்டித் தந்ததில்லை; இந்த ஹஸ்திகிரியோ வென்றால், அப்படி ஸர்வாதிசாயியான பரப்ரஹ்மத்தை ஸகலஜந ஸாக்ஷாத்காரயோக்யமாகக் காட்டித் தாராநின்றது; ஆகவே அந்த வேதத்தில் அலைந்து வருந்துவதை விட்டு இந்த ஹஸ்திகிரிதன்னையே பற்றி உஜ்ஜீவிப்போமென்றபடி.

"**परपर्युदासतः उपदेशतः**" என்றது **परपर्युदासरूपेण उपदेशेन** என்றபடி. உதாஹரித்த ச்ருதி வாக்யத்தில் * **अथात आदेशः** * என்றவிடத்தில் "**आदेशः-उपदेशः क्रियत इत्यर्थः**" என்று பாஷ்யமாகையால் அவ்வர்த்தத்திற்கு வ்யஞ்ஜகமாக '**उपदेशतः**' என்றருளிச் செய்தார்.

"**प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः**" (3-2-21) என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் இந்த ச்ருதிவாக்யார்த்தம் சிக்ஷிக்கப்பட்டிருக்கின்றமை காண்க. ... (5)

**एष ईश इति निर्णयं त्रयी भागधेयरहितेषु नो दिशेत् ।**
**हस्तिधामनि न निर्णयेत कः देवराजमयमीश्वरस्त्विति ॥ ६ ॥**

**ஏஷ ஈச இதி நிர்ணயம் த்ரயீ பாகதேயரஹிதேஷு நோ திசேத் ।**
**ஹஸ்திதாமநி ந நிர்ணயேத க: தேவராஜமயமீச்வரஸ் த்விதி ॥ 6 ॥**

| | |
|---|---|
| த்ரயீ | வேதமானது |
| ஏஷ: ஈச: இதி நிர்ணயம் | தேவபிரான்ஸர்வேச்வரன் என்கிற நிர்ணயத்தை |
| பாகதேய ரஹிதேஷு | [வேதார்த்தத்தை நன்றாக ஆராய்ந்து அறியமாட்டாத] தௌர்ப்பாக்ய சாலிகளிடத்தில் |
| மா திசேத் | உண்டுபண்ணாமல் போனால் போகட்டும்; |
| ஹஸ்தி தாமநி து | ஹஸ்திகிரியாகிற ஸ்தானத்திலே போனென்றால் |
| தேவராஜம் | தேவபிரானை (ஸேவித்து) |
| அயம் ஈச்வர: இதி | இவனே ஸர்வேச்வரனென்று |
| க: ந நிர்ணயேத | எவன் நிச்சயிக்கமாட்டான்? |

*** "தேவபிரானே ஸர்வேச்வரன்" என்கிற அர்த்தம் வேத வேதாந்தங்களில் நிச்சயிக்கப்பட்ட விஷயம் என்பது முதல் ச்லோகத்திலேயே குறிப்பிடப்பட்டது; ஆனால், இவ் வர்த்தமானது வேதாந்தங்களில் அனைவராலும் எளிதாகத் தெரிந்துகொள்ள முடியாது; ஜாயமாந கால கடாக்ஷம், ஆசார்ய கடாக்ஷம் முதலிய பாக்யமுள்ளவர்களுக்கே இப் பொருள் விளங்கும். அப்படிப்பட்ட பாக்ய மில்லாத பாஹ்ய குத்ருஷ்ட்யாதிகளுக்கு இப் பரமார்த்தம் தோன்றாது. சிலர் ஈச்வரனே யில்லையென்று பிதற்றுவர்; சிலர் பஸ்மதாரியைத் தலைவனென்று கொண்டு தடுமாறுவர். வேதமானது அனைவரிடத்திலும் வாத்ஸல்ய முடையதாகையால், பாக்யசாலிகள், தௌர்ப்பாக்யசாலிகள் என்னும் வாசியின்றிக்கே எல்லோர்க்கும் இப் பரமார்த்தத்தைத் தோற்றுவிக்க வேண்டியது அதற்குக் கடமையா யிருந்தும், அந்த வேதம் பக்ஷபாதம் பாராட்டி இராமாநுசனடியார்களான சில பாக்யசாலிகளுக்கே பரத்வ ஸித்தாந்தத்தைத் தெளிவித்ததே யொழிய மற்றுள்ள *கருவிலே திருவிலாதார்க்கு இதைத் தெளிவியாதொழிந்தது. ஒழிக; அது பற்றி நாம் வருந்தவேண்டியதில்லை; அக் குறை தீர இந்த ஹஸ்திகிரியானது அந்த ஸித்தாந்தத்தை ஸர்வ ஜந ஸுலபமாகச் செய்கின்றதென்கிறார். எனவே, வேதத்தில் குதர்க்கம் கூறுகின்றவர்களும் ஹஸ்திகிரியிலே பேருளாளனை ஸேவிக்கப் பெற்றவாறே, 'பேருளாளனல்லது பரதெய்வமில்லை என்று தாமே பரவசமாகக் கையெழுத்திடும்படி ஆய்விடுகிறது—என்றபடி.

'ஹஸ்திகிரௌ' என்றுதல் 'ஹஸ்திகிரிதாமநி' என்றுதல் சொல்லாதே 'ஹஸ்திதாமநி' என்றது ஏகதேசக்ரஹணம். ஹஸ்தீச கரீச இத்யாதி ஸ்தலங்களிலும் இங்ஙனம் கொள்க. சதுர்த்த பாதத்தில் தேவராஜம் என்ற பதத்திற்கு அடுத்தபடியாக 'த்ருஷ்ட்வா' என்றோ 'ஸம்ஸேவ்ய' என்றோ ஒருல்யபந்த பதம் அத்யாஹரித்துக் கொள்வது நலம். ... ... ... ... ... (6)

है कुदृष्ट्यभिनिविष्टचेतसां निर्विशेषसविशेषताश्रयम् ।
संशयं करिगिरिर्नुदत्यसौ तुङ्गमङ्गलगुणास्पदे हरौ ॥ ७ ॥

**ஹை குத்ருஷ்ட்யபிநிவிஷ்டசேதஸாம் நிர்விசேஷஸவிசேஷதாச்ரயம் ।**
**ஸம்சயம் கரிகிரிர் நுதத்யஸௌ துங்கமங்கலகுணாஸ்பதே ஹரௌ ॥ 7 ॥**

| | |
|---|---|
| துங்கமங்கலகுண ஆஸ்பதே ஹரௌ | சிறந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான எம்பெருமானிடத்தில் |
| குத்ருஷ்டி அபிநிவிஷ்ட சேதஸாம் | குத்ஸிதமான யோசனைகளிலே பொருந்தின மனஸ்ஸை யுடைய துர்வாதிகளுக்கு [உண்டாயிருக்கிற] |
| நிர்விசேஷ ஸவிசேஷதா ஆச்ரயம் ஸம்சயம் | இவன் குணமுடையவனா குணமில்லாதவனா என்கிற இரண்டு கோடிகளைப்பற்றிய ஸந்தேஹத்தை |
| அஸௌ கரிகிரி: நுததி ஹை | இந்த ஹஸ்திகிரியானது போக்கடிக்கின்றது; இது ப்ரஸித்தம். |

*** வேதத்திற்காட்டிலும் ஹஸ்திகிரியே சிறந்ததென்பதை நன்கு விவரிக்கிறார். எம்பெருமான் அநந்த கல்யாண குணங்களுக்கு ஆஸ்பதமாயிருப்பவன்; அப்படிப்பட்ட எம்பெருமானை வேதமானது சில விடங்களில் குணசாலியாகவும் சில விடங்களில் குண சூந்யனாகவும் சொல்லி வைத்தது. அதனால் விருத்தார்த்தமாகத் தோன்றுமிடங்களில் ந்யாய ஸஞ்சாரம் செய்து அவிருத்தார்த்த நிர்ணம் பண்ண வேணும். நிஷ்கல்மஷமான ஞானத்தை யுடையவர்கள் ந்யாய ஸஞ்சாரம் பண்ணினால்—'எம்பெருமான் குணசாலிதான், ஆனால் சில வேதவாக்யங்கள் அவனை நிர்க்குணனாகச் சொல்லுகின்றனவே, அவற்றிற்குக் கதியென்ன வென்றால்; அந்த நிர்க்குண ச்ருதிகள் ஹேயகுண சூன்ய னென்பதைச்

சொல்லுகின்றனவே யொழிய குணமாத்ர சூன்யதையைச் சொல்லுகின்றன வல்ல' என்று நிர்ணயிப்பர்கள். குத்ருஷ்டிகளோ வென்றால், இப்படி ந்யாயஸஞ்சாரம் பண்ணித் தெளியமாட்டாமல் ஈச்வரனை நிர்க்குணனாகவே நிர்ணயித்தொழிந்தனர். மற்றும் சில மந்தப்ரஜ்ஞர்களாயும் பீருக்களாயுமுள்ளவர்கள் கீழ்ச் சொன்ன இரண்டு வகை நிஷ்கர்ஷங்களில் ஒன்றையும் அவலம்பிக்கமாட்டாமல், "ஐயோ! ச்ருதிகள் இரண்டு வகையாகவும் சொல்லுகின்றனவே; எதையும் நாம் நிர்த்தாரணம் செய்யக் கூடவில்லையே; உண்மையில் அவன் குணசாலியோ? குணசூன்யனோ? தெரியவில்லையே!" என்று மயங்கித் தடுமாறி நிற்பர்கள்.

அப்படிப்பட்ட ஸம்சயாத்மாக்கள் ஹஸ்திகிரியில் வந்து தேவபிரானை ஸேவித்தவாறே அவனுடைய ஸகல கல்யாண குணகணங்களையும் நன்றாக அநுபவிக்கப்பெற்று, "ஐயோ இந்த எம்பெருமானையோ நாம் குண விஷயத்தில் ஸம்சயித்தது! ஹா ஹா! நம் புத்தியின் கொடுமையென்கொல்!" என்று கதறும்படியாகும்; ஆகவே ஸம்சயங்களை விளைக்கவல்ல வேதங்களிற் காட்டிலும் ஸம்சயத்தை அடியறுக்கவல்ல இந்த ஹஸ்திகிரியே பரமப்ராப்யமென்றவாறு. ... ... (7)

**न्यायतर्कमुनिमुख्यभाषितैः शोधितैस्सह कथंचन त्रयी ।**
**जोषयेद्धरिमनंहसो जनान् हस्तिधाम सकलं जनं स्वयम् ॥ ८ ॥**

**ந்யாயதர்க்கமுநிமுக்யபாஷிதை: சோதிதைஸ் ஸஹ கதஞ்சந த்ரயீ ।**
**ஜோஷயேத்தரிமநம்ஹஸோ ஜநாந் ஹஸ்திதாம ஸகலம் ஜநம் ஸ்வயம் ॥ 8 ॥**

| | | | |
|---|---|---|---|
| த்ரயீ | வேதமானது | ஹரிம் ஜோஷயேத் | எம்பெருமானை [பரதத்வமாக] உணர்த்தும்; |
| சோதிதை: | நன்றாக சோதிக்கப்பட்ட | ஹஸ்திதாம [து] ஸ்வயம் | ஹஸ்திகிரியோ வென்றால் தானாகவே |
| ந்யாய தர்க்க முநி முக்யபாஷிதைஸ் ஸஹ | மீமாம்ஸாந்யாயங்களென்ன; தர்க்கமென்ன, [வ்யாஸபராசராதி] முனிவர்களுடைய சொற்களாகிய புராணங்களென்ன, ஆகிய இவற்றோடு கூடிக்கொண்டு | ஸகலம் ஜநம் | [பாபிகள் புண்யசாலிகள் என்ற வாசியற] அனைவர்க்கும் |
| கதஞ்சந | கஷ்டப்பட்டு | [ஹரிம் ஜோஷயதி] | எம்பெருமானை ஸேவை ஸாதிப்பிக்கின்றது. |
| அநம்ஹஸ: ஜநாந் | புண்யசாலிகளான சில பேர்களுக்கு | | |

*** "ஸர்வே வேதாயத்பதமாமநந்தி" வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய: "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்றித்யாதிகளாலே 'வேதத்தில் பரதத்வமாக ப்ரதிபந்நன் ஸ்ரீமந் நாராயணனே" என்று ஓதப்பட்டிருந்தாலும், நாம் ஒவ்வொரு வேதவாக்யத்தையும் தனித் தனியாகப் பார்த்து அர்த்தத்தை நிச்சயிப்போமென்று புகுந்தால் கார்யமாகிறதில்லை; வேதமானது ஸஹாயாந்தரமில்லாமல் நமக்கு யதார்த்தத்தை வெளியிடுவதில்லை. 'மீமாம்ஸாந்யாயங்களையும் தர்க்கத்தையும் ஸாத்விக புராணங்களையும் ஸஹாயமாகக் கொண்டு ப்ரவர்த்தித்தால்தான் வேதார்த்தம் விளங்கும். இன்னும் சிறிது யோசித்தால் அந்த ஸஹாயங்களுக்கும் வேறொரு ஸஹாயம் தேவை யென்னவேணும். [சோதிதை:] எந்த ந்யாய தர்க்க புராணங்களை நாம் அநுகூலமாகக் கொள்ளுகிறோமோ, அந்த ந்யாய தர்க்க புராணங்களைக் கொண்டே ப்ரதி பக்ஷிகளும் தமது அபார்த்தங்களை ஸாதிப்பதனால், வேதார்த்த நிச்சயத்திற்கு ஸஹாயமாகக் கொள்ளவேண்டிய ந்யாய தர்க்க புராணங்களுக்கும் 'சோதனம் என்கிற ஸஹாயம் ஆவச்யகம். அதாவது அந்த ந்யாயதர்க்காதிகள் ஆபாதத: நமக்கு விபரீதார்த்தங்களைத் தோற்றுவிக்க வொண்ணாதபடி ஆழ்வாராசார்யர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு அவற்றை சோதிக்கவேணும். ஆக இவ்வளவு பரிச்ரமத்தை ஸஹிக்க வல்லவர்கள் யாரோ சில பரமைகாந்திகளே யாவர். அப்படிப்பட்டவர்களுக்கு வேதத்தின் உண்மைப் பொருள் மஹதா ப்ரயாஸேந விளங்குமே யன்றி ஸர்வ ஜநங்களுக்கும் ஸாதாரணமாக விளங்காது. ஹஸ்திகிரியோவென்றால் அங்ஙனன்றி அனைவர்க்கும் அநாயாஸமாகவே பரம்பொருளை ப்ரகாசிப்பிக்கிறது. எனவே, மஹா ப்ரயாஸப்படுத்திச் சிலர்க்கு மாத்திரம் எம்பெருமானைத் தெரிவிக்கிற வேதத்திற் காட்டில் அவனை எளிதாக அனைவர்க்கும் ஸேவை ஸாதிப்பிக்கிற திருவத்திமாமலையே சிறந்தது என்றதாயிற்று. ... ... ... (8)

अद्भुतं महदसीमभूमकं किंचिदस्ति किल वस्तु निस्तुलम् ।
इत्यघोषि यदिदं तदग्रतः तथ्यमेव करिधाम्नि दृश्यते ॥ ९ ॥

அத்புதம் மஹதஸீமபூமகம் கிஞ்சிதஸ்தி கில வஸ்து நிஸ்துலம் ।
இத்யகோஷி யதிதம் ததக்ரத: தத்யமேவ கரிதாம்நி த்ருச்யதே ॥9॥

| | | | |
|---|---|---|---|
| அத்புதம் | ஆச்சர்யகரமாயும் | யத் கில அகோஷி | யாதொரு வஸ்துவானது வேதாதிகளில் ப்ரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ |
| மஹத் | அபரிச்சிந்நஸ்வரூபத்தையுடையதாயும் | தத் இதம் | அந்த இந்த வஸ்து |
| அஸீம பூமகம் | எல்லையில்லாத வைபவத்தை யுடையதாயும் | கரிதாம்நி | கரிகிரியில் |
| [அத ஏவ] | இப்படி இருப்பதனாலேயே | அக்ரத: | இதோ |
| நிஸ்துலம் | ஒப்பற்றதாயும் | தத்யமேவ | வாஸ்தவமாகவே |
| கிஞ்சித் வஸ்து அஸ்தி இதி | ஒரு வஸ்து இருக்கின்றதென்று | த்ருச்யதே | காணப்படுகிறது. |

*** "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தெ —யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்-ஏஷ ஸர்வபூதாந்தராத்மா" "எப்பால் யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து அப்பாலவன்" இத்யாதி ப்ரமாணசதங்களாலே ஒப்புயர்வற்றதாகக்கூறப்பட்டுள்ள ஸ்ரீமந் நாராயணனென்கிற ஒரு பரம்பொருள் இப்போது ஹஸ்திகிரியில் யதார்த்தமாகவே அனைவராலும் ஸேவிக்கப்படுகின்றது. [தத்யமேவ] ப்ரமாணங்களில் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்டிருக்கிற வைபவங்களை வாசித்தவர்கள் 'இப்படிப்பட்டவைபவத்தையுடைத்தாய் லோகவிலக்ஷணமான ஒரு வஸ்து உண்மையாயிருக்குமா?வேதங்கள் கவிகட்டுகிறப்போல் ஒன்று பத்தாக வர்ணிப்பதாயிருக்குமே யொழிய உண்மையில் இவ்வளவு வைபவமுடைய ஒரு வஸ்து இருக்கக்கூடுமென்று எம் நெஞ்சில் தோன்றவில்லையே!' என்று அதிசங்கித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஹஸ்திகிரியில் வந்து ஸேவித்தவாறே வேதம் சொன்னது ஒக்கும்! ஒக்கும்!! ஒக்கும்!!! என்று இசைந்து வியக்கும்படியாக அத்யாச்சர்யமான வைபவத்துடனே பேரருளாளன் ஸேவை ஸாதிக்கிறானென்றபடி. ... ... (9)

संवदेत किल यत् प्रमान्तरैः तत् प्रमाणमिति ये हि मेनिरे ।
तन्मतेऽपि बत मानतां गता हस्तिनाऽद्य परवस्तुनि त्रयी ॥ १० ॥

ஸம்வதேத கில யத் ப்ரமாந்தரை: தத் ப்ரமாணமிதி யே ஹி மேநிரே ।
தந்மதேபி பத மாநதாம் கதா ஹஸ்திநாஅத்ய பரவஸ்துநி த்ரயீ ॥ 10 ॥

| | | | |
|---|---|---|---|
| யத் | ["ப்ரமாணமாக அபிமாநிக்கப்படுகிற] யாதொன்றானது | அத்ய | இப்போது |
| ப்ரமாந்தரை: | வேறு ப்ரமாணங்களோடு | ஹஸ்திநா | ஹஸ்திகிரியினாலே |
| ஸம்வதேத தத் கில ப்ரமாணம் இதி | இணங்குமோ அதுவன்றோ ப்ரமாணமாகும்" என்று | த்ரயீ | வேதமானது |
| யே | யாவர் சிலர் | பரவஸ்துநி | பரம்பொருளாகிற எம்பெருமான் விஷயத்தில் |
| மேநிரே | எண்ணினார்களோ | மாநதாம் | ப்ராமாண்யத்தை |
| தந்மதே அபி | அவர்களின் மதத்திலும் | கதா | அடைந்தது ; |
| | | பத! | [ஸந்தோஷக் குறிப்பு] |

***"ஆதௌ வேதா: ப்ரமாணம்" என்று சொல்லுகிற வைதிகர்கள் எந்த ப்ரமாணத்தைக்கொண்டு வேதத்துக்கு ப்ராமாண்யத்தை உபபாதிக்கின்றனரென்றால் அதனுடைய ப்ராமாண்யம் மற்றொரு ப்ரமாணத்தைக்கொண்டு உபபாதிக்கத் தக்கதல்ல என்கிறார்கள். 'வேதபாஹ்யர்கள் இந்த வைதிக வாதத்தை அங்கீகரிப்பதில்லை. அவர்கள் சொல்லுவதென்னவென்றால், "ஸ்வத: ப்ரமாணமென்று ஒன்றும் கிடை.

யாது ; ஒன்றை நாம் ப்ரமாணமாகக் கொள்ள வேணுமானல் அதற்கிணங்க மற்றொரு ப்ரமாணம் காட்டப் படவேணும். அப்படிக் காட்ட முடியாவிட்டால் அது ப்ரமாணமாகமாட்டாது; ஏவஞ்ச (ச்லோ.) "ப்ரமாணாந்தரஸம்வாதோ யஸ்ய ஸம்பவிதும் க்ஷம:, தஸ்யைவ ஸ்யாத் ப்ரமாணத்வம் நாந்யஸ்யேத்யவதார்யதே." என்கிறார்கள். அந்த பாஹ்யவாதிகளை நாம் கண்டிக்கவேணுமானல் அவர்கள் சொல்லும் வாதத்தை யங்கீகரித்துக் கண்டிப்பதே யழகு; அங்ஙனம் செய்யும்போது 'வேதம் ஸ்வத:ப்ரமாணம்' என்கிற வாதத்தை விட்டிட்டு அதற்கு ஸம்வாதமாக ஒரு ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக் காட்டினல் உடனே அந்த வாதிகள் "ப்ரமாணாந்தரஸம்வாதஸத்த்வாத் வேதா: ப்ரமாணமேவ" என்று கையெழுத்திட்டுப் போவர்கள். அப்படி வேதத்துக்கு ப்ராமாண்யத்தை ஸ்தாபிக்கக்கூடிய ப்ரமாணாந்தரம் எதுவென்றால், ஹஸ்திகிரியேயாம். வேதத்திற் சொல்லப்படுகிற அர்த்தங்கள் [அதாவது - ஈச்வரனொருவனுண்டு; ஸ்ரீமந் நாராயணனே தத்வம்; அவனுக்கு குணங்களுண்டு; விக்ரஹமுண்டு; விபூதியுண்டு இத்யாதிகள்] ஹஸ்திகிரியில் கையிலங்கு நெல்லிக்கனிபோல் காணப்படுகிறபடியால் வேத ப்ராமாண்யத்தை ஒப்புக் கொள்ளாத பாஹ்யர்களையும் ஹஸ்திகிரியானது ஒப்புக்கொள்ளச் செய்கிறது என்றபடி.

இதனல் எம்பெருமானுக்கு வேதங்களில் கூறப்பட்டுள்ள விசேஷங்களெல்லாம் ஒன்று தவறாமல் பேரருளாளன் பக்கல் ஸேவிக்கலாயிருக்குமென்ற தாகிறது.

[ஸம்வதேத] "வ்யக்தவாசாம் ஸமுச்சாரணே" என்னும் பாணிநிஸூத்ரத்தால் வததாது ஆத்மநே பதியாய்த்து. ஒரு ப்ரமாணத்துக்கு உபபாதகமாக மற்றொரு ப்ரமாணத்தை உதாஹரித்தால் அதற்கு ஸம்வாத ப்ரமாணமென்று பெயர். இவ்விடத்தில் ஹஸ்திகிரியானது ஸம்வாத ப்ரமாணமாக ஆயிற்று. **[ப்ரமாந்தரை:]** அந்யா: ப்ரமா:-ப்ரமாந்தராணி, தை:; "ஆதச்சோபஸர்க்கே." என்ற ஸூத்ரத்தால் ஆங்ப்ரத்யயாந்தமாக நிஷ்பந்நமான ப்ரமாசப்தம் 'ப்ரமிதௌப்ரமா" என்ற அமரகோசத்தின்படி யதார்த்தஜ்ஞானவாசகமே யொழிய 'ப்ரமாகாணம் ப்ரமாணம்' என்னப்பட்ட ப்ரமாணபர்யாய மல்லவென்றும் 'ப்ரமாணாந்தரை:' என்ன வேண்டியிருக்க 'ப்ரமாந்தரை:' என்ற இது சேருமோ? என்றும் சிலர் மயங்குவர். ப்ரமா சப்தம் ப்ரமாணவாசியுமாயுள்ளதென்று சப்த ரத்நாவளிகாரன் சொல்லி வைத்தான். அங்ஙனே ப்ரயோகங்களும் உண்டு. இங்கு ப்ரமாசப்தம் ப்ரமாணபர்யாயமாக வ்யாக்யாதம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் "தச்சார்வாக மதேபி ரங்கரமண! ப்ரத்யக்ஷவத் ஸா **ப்ரமா**' என்று ப்ரமாசப்தத்தை ப்ரமாணபர்யாயமாக அருளிச் செய்தார். "தந்மதேபி கில" என்றும் பாடமுண்டு. **[ஹஸ்திநா]** ஹஸ்திகிரிணா என்றபடி; ஏகதேசக்ரஹணம். ***ஸ்வஸ்தி ஹஸ்திகிரி*** என்று தொடங்கி இதுவரை பத்து ச்லோகங்களும் ரதோத்ததா வ்ருத்தம். .... ... .... .... (10)

**गुणायत्तं लोके गुणिषु हि मतं मङ्गलपदं विपर्यस्तं हस्तिक्षितिधरपते! तत् त्वयि पुनः ।**
**गुणास्सत्यज्ञानप्रभृतय उत त्वद्गततया शुभीभूयं याता इति हि निरणैष्म श्रुतिवशात् ॥ ११ ॥**

**குணாயத்தம் லோகே குணிஷு ஹி மதம் மங்கலபதம்**
**விபர்யஸ்தம் ஹஸ்திக்ஷிதிதரபதே தத் த்வயி புந: ।**
**குணாஸ் ஸத்யஜ்ஞாநப்ரப்ருதய உத த்வத்கததயா**
**சுபீபூயம் யாதா இதி ஹி நிரணைஷ்ம ச்ருதிவசாத். ॥ 11 ॥**

| | | | |
|---|---|---|---|
| லோகே | உலகத்தில் | ஹஸ்தி க்ஷிதிதர பதே | ஹஸ்திகிரிநாதனே ! |
| குணிஷு | குணசாலிகளிடத்தில் | | |
| மங்கலபதம் | 'இவர்கள் நல்லவர்கள்' என்ற சொல்லானது | தத் | அந்த விஷயமானது |
| குணாயத்தம் ஹி மதம் | குணங்களைப் பற்றியதாக வன்றோ எண்ணப்பட்டிருக்கிறது ; | த்வயி புந: | உன்னிடத்திலோ வென்றால் |

| | | | |
|---|---|---|---|
| விபர்யஸ்தம் | மாறுபாடாயிருக்கிறது ; [குணத்தைப்பற்றி வந்ததல்ல] | த்வத்கததயா | உன்னை யடைந்திருப்பதனால் |
| ஹி | ஏனென்றால் | சுபீபூயம் யாதா: இதி | மங்களத்தன்மையை அடைந்தன வென்று |
| ஸத்யஜ்ஞாந ப்ரப்ருதய: | ஸத்யம் ஞானம் முதலிய | ச்ருதிவசாத் | வேதங்களைக் கொண்டு |
| குணா: | குணங்களானவை | நிரணைஷ்ம | நிர்ணயித்தோம். |

*** உலகத்தில் நாம் பல பேர்களைப் பார்த்து 'இவன் நல்லவன், இவன் நல்லவன்' என்கிறோம்; அந்த நன்மையை நாம் எதுகொண்டு சொல்லுகின்றோமென்றால் அவனிடத்திலுள்ள நல்ல குணங்களைக் கொண்டேயாம். இரக்கம், ஒழுக்கம், வணக்கம், பொறுமை முதலிய நற்குணங்களைக் கொண்டுதான் நாம் ஒருவனை நல்லவனென்கிறோம். இது உலகவியற்கை. தேவபிரானிடத்திலோ இது நேர் விபரீதமாயிராநின்றது. ஏனென்றால், மங்களபதமானது எம்பெருமானிடத்திலும் ப்ரயோகிக்கப் படுகின்றது ; குணங்களிடத்திலும் ப்ரயோகிக்கப் படுகிறது ; *மங்கலம் பகவாந் விஷ்ணு:* *பாவத்கமங்கல குணா:* இத்யாதிகாண்க. எம்பெருமான் ஸ்வத ஏவ மங்களமயனாகையால் அதுகாரணமாக அவனை மங்களமென்பதே யொழிய, மங்கள குணங்கள் அவனிடத்திலிருப்பது காரணமாகவல்ல. இனி குணங்களை மங்களமென்பது எது கொண்டு? என்றால், மங்களமயனான எம்பெருமானோடு இவை ஸம்பந்தம் பெற்றமையால் தான். எந்த குணங்கள் எம்பெருமானோடு ஸம்பந்தம் பெற்றனவோ, அவையே மங்களமென்றும், எவை பெறவில்லையோ அவை ஹேயமென்றும் வேத மூல ப்ரமாணத்தால் நாம் அறுதியிட்டிருப்பதால் உலக ரீதியை நாம் எம்பெருமானிடத்தில் பாவிக்கலாகாதென்கை.

"ஸர்வஸ்ய சைவ குணதோ ஹி விலக்ஷணத்வம்" என்ற ஸ்ரீவைகுண்டஸ்தவஸூக்தியும் "குணஜம் குணிநோ ஹி மங்கலத்வம் ப்ரமிதம்" என்ற ஸுந்தரபாஹுஸ்தவஸூக்தியும் காண்க. சுபஸ்ய பாவ:-சுபீபூயம், 'புவோ பாவே' என்னும் பாணிநிஸூத்ரத்தால் க்யப். இந்த ச்லோகம் முதல் "அநந்யாதீநத்வம்" என்னுமளவாகவுள்ள தசகம் சிகரிணீவ்ருத்தம். ... ... ... ... (11)

**निराबाधं नित्यं निरवधि निरंहो निरुपमं सदा शान्तं शुद्धं प्रतिभटमवद्यस्य सततम् ।**
**परं ब्रह्माम्नातं श्रुतिशिरसि यत् तद्वरद ते परं रूपं साक्षात् तदिदमपदं वाङ्मनसयोः ॥ १२ ॥**

**நிராபாதம் நித்யம் நிரவதி நிரம்ஹோ நிருபமம்**
**ஸதா சாந்தம் சுத்தம் ப்ரதிபடமவத்யஸ்ய ஸததம் ।**
**பரம் ப்ரஹ்மாம்நாதம் ச்ருதிசிரஸி யத் தத் வரத தே**
**பரம் ரூபம் ஸாக்ஷாத் தகிதமபதம் வாங்மநஸயோ: ॥ 12 ॥**

| | | | |
|---|---|---|---|
| நிராபாதம் | விகாரமற்றதாயும் | யத் பரம் ப்ரஹ்ம | யாதொரு பரப்ரஹ்மமானது |
| நித்யம் | காலபரிச்சேதமற்றதாயும் | ச்ருதி சிரஸி | வேதாந்தத்தில் |
| நிரவதி | தேசபரிச்சேதமற்றதாயும் | ஆம்நாதம் | ஓதப்பட்டிருக்கிறதோ |
| நிருபமம் | வஸ்து பரிச்சேதமற்றதாயும் | ஹே வரத ! | ஓ பேரருளாளனே ! |
| நிரம்ஹ: | ஹேயகுணமற்றதாயும் | தே | உன்னுடைய |
| ஸதா சாந்தம் | நித்யாநுகூலமாயும் [நித்ய போக்யமாயும்] | ததிதம் ஸாக்ஷாத் பரம் ரூபம் | சிறந்த நிஜஸ்வரூபமாகிற அந்த இந்த ஸ்வரூபமானது |
| சுத்தம் | ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாத சுத்த ஸத்வமாயும் | வாங்மநஸயோ: அபதம் | [வாயால் வருணிப்பதற்கும் நெஞ்சால் நினைப்பதற்கும் ஒண்ணாதபடி] மனமொழிகளுக்கு எட்டாதது. |
| ஸததம் | எப்போதும் | | |
| அவத்யஸ்ய | தோஷத்துக்கு | | |
| ப்ரதிபடம் | எதிர்த்தட்டாயும் | | |

***வேதத்தில் கூறப்பட்ட பரப்ரஹ்மஸ்வரூபத்தை பூர்வார்த்தத்தாலருளிச் செய்து உத்தரார்த்தத்தில் அந்த ஸ்வரூபம் ஸாக்ஷாத் நீ தான் ; இப்படிப்பட்ட உன்னை வாய்கொண்டு துதிப்பதும் நெஞ்சு கொண்டு சிந்திப்பதும் முடியாதகாரிய மென்கிறார்.

[நிராபாதம்] உலகத்தில் ஒவ்வொரு கார்ய வஸ்துவுக்கும் மூன்று வகைக் காரணங்களுண்டு; உபாதானம், ஸஹகாரி, நிமித்தமென்பவை. ஒரு குடத்தை உண்டுபண்ண வேண்டுமானால் அதற்கு மண் உபாதான காரணமாகவும், தண்டசக்ராதிகள் ஸஹகாரி காரணமாகவும், குலால காலாத்ருஷ்டாதிகள் நிமித்த காரணமாகவும் ஏற்பட்டிருக்கின்றன; இவ்வாறாகவே ஒவ்வொரு கார்ய வஸ்துவுக்கும் பார்த்துக்கொள்வது. உலகங்கட்கெல்லாம் எம்பெருமான் காரணமென்னும்போது, அவன் எவ்வகைக் காரணமாக நிற்கிறானென்றால் மூவகைக் காரணமும் அவனொருவனே யென்பது வேதவைதிக ஸித்தாந்தம்; இதன்மேலே ஒரு பூர்வபக்ஷம் கிளர்கின்றது. அதாவது, உலகத்தில் எந்த வஸ்துவை நாம் உபாதாந காரணமாகக் காண்கிறோமென்றால் எதுவானது தானே கார்யவஸ்துவாக விகாரப்படுகிறதோ அதைத்தான் நாம் உபாதாந காரணமென்கிறோம். குடத்துக்கு மண்ணை உபாதாந காரணமென்பதும், வஸ்த்ரத்துக்கு நூலை உபாதாந காரணமென்பதும் அக்காரணவஸ்துக்களே கார்யவஸ்துவாக விகாரப்படுகின்றதாலன்றோ! அதுபோல ஈச்வரன் ஜகத்திற்கு உபாதாந காரணமானால் ஈச்வரனே ஜகத்தாக விகாரமடைகிறானென்று கொள்ளவேணும். ஆனபின்பு ஸ்வரூபதோ விகாரமடைகிற ப்ரக்ருதியென்ன, ஸ்வபாவதோ விகாரமடைகிற ஜீவாத்மாவென்ன, இவ்விரண்டையும் போலவே ஈச்வரனும் விகாரியென்று ஒப்புக்கொள்ள வேணுமென்பதாகப் பூர்வபக்ஷம் கிளரும். அதற்கு ப்ரத்யாக்க்யானம் கூறும்போது ''இவன்றானே ஜகத்தாய்ப் பரிணமிக்கையாலே உபாதாநமுமா யிருக்கும். ஆனால் நிர்விகார னென்னும்படி என்னென்னில், ஸ்வரூபத்துக்கு விகாரமின்மையாலே. ஆனால் பரிணாம முண்டாம்படி யென்னென்னில், விசிஷ்ட விசேஷண ஸத்வாரகமாக ; ஒரு சிலந்திக்குண்டான ஸ்வபாவம் ஸர்வசக்திக்குக்கூடா தொழியாதிறே!'' என்றருளிச்செய்து எம்பெருமான் நிர்விகாரன் என்றே ஸ்தாபித்தார்கள். அந்த நிர்விகாரத்வத்தை இங்கு (நிராபாதம்) எனபதனாலே அருளிச்செய்கிறார்.

[நித்யம்இத்யாதி] நிருபமம் என்கிற விசேஷணமானது 'நிரம்ஹ:' என்றதற்குப் பிறகு கிடந்தாலும் அர்த்தச்சேர்த்தியைப்பற்ற 'நிரவதி' என்னும் விசேஷணத்துக்கு அடுத்ததாக அந்வயித்துக் கொள்ள வேணும். த்ரிவித பரிச்சேத ராஹித்யத்தைச் சொல்லுகின்ற அநந்தசப்தார்த்தத்தை அடைவே மூன்று விசேஷணங்களால் விவரிக்கின்றார். (நித்யம்) 'இன்ன காலத்திலுள்ளான். காலாந்தரத்திலில்லை' என்கிற கால பரிச்சேதத்தையுடையவனல்லன். (நிரவதி) எல்லையில்லாமையாவது ஸகல சேதநாசேதநங்களுக்கும் வ்யாபகமாய்க் கொண்டு விபுவாயிருக்கையாகையாலே 'இன்னதேசத்திலுள்ளான் ; தேசாந்தரத்திலில்லை,' யென்கிற தேசபரிச்சேத மின்மையைச் சொல்லுகின்றது. (நிருபமம்) இன்ன வஸ்துபோலே என்கிற வஸ்துபரிச்சேத மில்லாதவனென்கை. தத்வத்ரய வ்யாக்க்யானத்தில் மணவாளமாமுனிகள் ஸர்வாந்தர்யாமியாகையாலே ஸர்வத்துக்கும் தான் ப்ரகாரியாய் தனக்கு ப்ரகார்யந்தரமில்லாதபடி யிருக்கையாலே இன்ன வஸ்துபோலே என்கிற வஸ்துபரிச்சேதமின்றியிலேயிருக்கை' என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம்.

(நிரம்ஹ:, சுத்தம்) என்ற இரண்டு விசேஷணங்களாலும் அகில ஹேய ப்ரத்யநீகத்வமும் கல்யாணைகதாநத்வமுமாகிற உபய லிங்கம் சொல்லப்படுகிறது. 'நிரம்ஹ:' என்றாலும் 'அவத்யஸ்ய ப்ரதிபடம்' என்றாலும் ஹேயப்ரத்யநீகத்வமாகிற ஒரு அர்த்தமே ப்ரதிபந்நமாகிறபடியால் புநருக்தி வாராதோ வென்னில், ஒரு விசேஷணம் தான் ஹேய குண சூன்யனென்பதைக் காட்டுகிறது. மற்றொரு விசேஷணம்—தன்னைச் சேர்ந்தவர்கட்கும் ஹேய ஸம்பந்தமுண்டாகாதபடி நோக்கும் திறமையைக் காட்டுகிறதென்று கொள்க. (ஸதா சாந்தம்) சீறுபாறென்றிராமல் நித்யாநுகூலமாய், அத ஏவ நித்ய போக்யமா யிருக்குமென்றபடி. ஆக, பூர்வார்த்தத்தால் ப்ரஹ்மஸ்வரூபவைலக்ஷண்யத்தை அருளிச் செய்தாராயிற்று.

இனி, உத்தரார்த்தத்தில், இப்படிப்பட்ட ஸ்வரூபம் பேரருளாளனுடைய ஸ்வரூபத்திற் காட்டில் அபிந்நமென்றும், வாசா வருணிப்பதற்கும், மநஸா சிந்திப்பதற்கும் முடியாததென்றும் தலைக்கட்டுகிறார். (10)

**प्रशान्तानन्तात्मानुभवजमहानन्दमहिमप्रसक्तस्तैमित्यानुकृतवितरङ्गार्णवदशम् ।**
**परं यत्ते रूपं स्वसदृशदरिद्रं वरद तत् त्रयी पिस्प्रक्षन्ती परनिरसने श्राम्यति परम् ॥११॥**

**ப்ரசாந்தாநந்தாத்மாநுபவஜமஹாநந்தமஹிம-**
**ப்ரஸக்தஸ்தைமித்யாநுக்ருதவிதரங்கார்ணவதசம் ।**
**பரம் யத் தே ரூபம் ஸ்வஸத்ருசத்ரித்ரம் வரத தத்**
**த்ரயீ பிஸ்ப்ரக்ஷந்தீ பரநிரஸநே ச்ராம்யதி பரம் ॥ 13**

| | |
|---|---|
| ஹேவரத | வரதராஜனே ! |
| ப்ரசாந்த அநந்த ஆத் மாநுபவஜ மஹாநந்த மஹிம ப்ரஸக்த ஸ்தைமித்ய அநுக்ருத விதரங்கார் ணவ தசம் | ப்ரசாந்த—மிக அனுகூலமாயும், அநந்த—அபரிச்சிந்நமாயுமிருக்கிற, ஆத்ம—ஸ்வ ஸ்வரூபத்தினுடைய, அநுபவஜ—அநுபவத்தாலே யுண்டாகிற, மஹாநந்தமஹிம-அதிக ஆநந்தாதிசயத்தாலே, ப்ரஸக்த—நேர்ந்த, ஸ்தைமித்ய—நிச்சலமாயிருக்கும் தன்மையாலே, அநுக்ருத—அநுகரிக்கப்பட்ட, விதரங்க—ஓய்ந்திருக்கிற அலைகளையுடைய, அர்ணவ—ஸமுத்திரத்தினுடைய, தசம்—அவஸ்தையையுடைத்தானதாயும். |
| ஸ்வஸத்ருச தரித்ரம் | தன்னோடொத்த வேறென்றை யுடைத்தாகாததாயும் |
| பரம் | ஸர்வோத்தமமாயுமிருக்கிற |
| யத் ரூபம் | யாதொரு ஸ்வரூபமானது |
| தே [அஸ்தி] | உனக்கு இராநின்றதோ |
| தத் | அந்த ஸ்வரூபத்தை |
| பிஸ்ப்ரக்ஷந்தீ | ஸ்பர்சிக்க வேணு மென்று விரும்பாநின்ற |
| த்ரயீ | வேதமானது |
| பரநிரஸநே பரம் ச்ராம்யதி | ஹேயமான அவயவம் விகாரம் முதலியவற்றை மறுப்பதில் மாத்திரம் சிரமப்படுகிறது. |

*** "அதிபதிதாவதிஸ்வமஹிமாநுபவப்ரபவத்ஸுகக்ருத நிஸ்தரங்கஜலதீயிதநித்யதசம்" என்கிற ஸுந்தர பாஹுஸ்தவ ச்லோகத்தின் பூர்வார்த்தத்தையும் இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தையும் ஏகார்த்தகமாகக் கொள்க. எம்பெருமானுக்கு நித்யோதித தசை யென்றும் சாந்தோதிததசை யென்றும் இரண்டு அவஸ்தைகளுண்டு. அகில ஹேயப்ரத்யநீகமாய் கல்யாணைகதாநமாயிருக்கிற ஸ்வஸ்வரூபத்தின் வைபவத்தைத் தான் அநுபவித்து மகிழும் தசை, நித்யோதித தசையெனப்படும். தன் விபூதியை அநுபவித்து மகிழும் தசை சாந்தோதிததசை யெனப்படும். இங்கு நித்யோதித தசாவிசிஷ்டமான பகவத் ஸ்வரூபத்தைப் பற்றிப் பேசுகிறார். 'ப்ரசாந்த' என்பதும் 'அநந்த' என்பதும் ஆத்மாவுக்கு விசேஷணம். ஆத்மாவாவது ஸ்வஸ்வரூபம், அது ப்ரசாந்தமாயிருக்கையாவது மிகவும் அநுகூலமாயிருக்கை. இப்படி அத்யந்தாநு கூலமாயும் அபரிச்சிந்நமாயுமுள்ள ஸ்வஸ்வரூபத்தின் அனுபவத்தாலே உண்டாகிற யாதொரு ஆநந்தமுண்டு, அதன் பெருமையால் நிச்சலமாயிருக்கும் நிலைமை யாதொன்றுஉண்டு, அதனால் அலை ஓய்ந்த கடலின் அவஸ்தை அநுகரிக்கப்பட்டதாகிறது. அதாவது எம்பெருமான் தன்னைத்தான் அனுபவிப்பதனால் தான் அடைகிற ஆநந்தமானது தன்னை ஸ்தப்தனாகச் செய்து 'அலை ஓய்ந்த கடல் தானோ இது' என்னும்படி யாக்கிவிட்டதென்றபடி. இப்படிப்பட்ட சிறந்த ஸ்வரூபம் பேரருளாளனுடைய ஸ்வரூபத்திற் காட்டிலும் வேறு பட்டதல்ல. 'ததேவேதம் ரூபம்' என்கிற அர்த்தம் த்ருதீய பாதத்தில் போதரும்.

அப்படிப்பட்ட ஸ்வரூபத்தை வேதமானது ப்ரதிபாதிக்கத் தொடங்கி "நிஷ்கலம், நிஷ்க்ரியம்"... "யத்தத்ரேச்ய மக்ராஹ்யம்" இத்யாதிபாலே, "பகவத்ஸ்வரூபத்துக்கு ஹேயமான அவயவங்களும் விகாரமுமில்லை; அது கண்ணால் காணக்கூடாதது; கர்மேந்த்ரியங்களான பாண்யாதிகளால் பிடிக்கக்கூடாதது" என்றிப்படி பரநிரஸநத்தையே விசேஷமாகப் பண்ணிப்போந்ததே யொழிய, உள்ள குணங்களை ஆழ அனுபவித்து மகிழவில்லை என்கிறது நான்காவது பாதம்.

பரநிரஸநமாவது:—'அது இல்லை, இது இல்லை' என்றிப்புடைகளிலே சொல்லுகையாகிற ஹேயாவயவ விகாராதி ஸம்பந்த நிரஸநம். ஒரு விலக்ஷண வஸ்துவை அனுபவிக்க இழிந்தவன் அதில் உள்ள குணங்களைப் புகழ்ந்து அனுபவிப்பது அழகோ? இதில் அந்த தோஷமில்லை, இந்த தோஷமில்லை' என்று இல்லாதவற்றை எடுத்துக் கழிக்கை அழகோ? இல்லாத வற்றை எடுத்துக் கழிப்பதும் ப்ரசம்ஸையே

யாயினும் அநுபவிக்க இழிந்தவன் உள்ள குணங்களை வாயாரப் புகழ்வதே அழகிது; பரமிரஸநம் ஸ்வல்ப மாக இருக்கவேணும். பகவத் ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கப் புகுந்த வேதமோவென்றால் நஞ்கடிதமான வாக்யங்களையே விசேஷமாக ஓதியிருக்கிறதே யொழிய உள்ள குணங்களை அவ்வளவாகச் சொல்லமாட் டிற்றில்லை யென்கிறார். இதனால் பகவத் ஸ்வரூபத்தின் வாசாமகோசரமான வைலக்ஷண்யம் வ்யஞ்ஜித மாகிறது. .... ... ... ... ... (13)

**न वक्तुं न श्रोतुं न मनितुमथोपासिसिषितुं न च द्रष्टुं स्प्रष्टुं तदनु न च भोक्तुं हि सुशकम् ।**
**परं यद्वस्तूक्तं ननु वरद साक्षात्तदसि भोः कथं विश्वस्मै त्वं करिगिरिपुरस्तिष्ठस इह ॥ १५ ॥**

**ந வக்தும் ந ச்ரோதும் ந மநிதுமதோபாஸிஸிஷிதும்**
**ந ச த்ரஷ்டும் ஸ்ப்ரஷ்டும் ததநு ந ச போக்தும் ஹி ஸுசகம் !**
**பரம் யத் வஸ்தூக்தம் நநு வரத ஸாக்ஷாத் தத்ஸி போ :**
**கதம் விச்வஸ்மை த்வம் கரிகிரிபுரஸ் திஷ்டஸ இஹ ॥ 14 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | வரதனே ! |
| யத் பரம் வஸ்து | யாதொரு பரதத்வமானது |
| வக்தும் ந ஸுசகம் | உபதேசிக்கக் கூடாததாகவும் |
| ச்ரோதும் ந ஸுசகம் | கேட்கக்கூடாததாகவும் |
| மநிதும் ந ஸுசகம் | மனனம் பண்ணக் கூடாததாகவும் |
| அத | அதற்குமேல் |
| உபாஸிஸிஷிதும் நஸுசகம் | உபாஸிக்க விரும்பக் கூடாததாகவும் |
| த்ரஷ்டும் ச ந ஸுசகம் | காணக்கூடாததாகவும் |
| ஸ்ப்ரஷ்டும்ச ந ஸுசகம் | தொடக்கூடாததாகவும் |
| ததது | அதற்குமேல் |
| போக்தும் ச ந ஸுசகம் | அநுபவிப்பதற்குக் கூடாததாயும் |
| உக்தம் | [ச்ருதிகளில்] சொல்லப்பட்டுள்ளதோ |
| தத் | அந்த பாதத்வமானது |
| ஸாக்ஷாத் த்வம் அஸி நநு | ஸாக்ஷாத் நீயேயன்றோ ஆகிறாய் ; |
| த்வம் | [இப்படி ஸர்வதா துர்லபனான] நீ |
| இஹ | இவ்வுலகத்திலே |
| கரிகிரிபுர: | கரிகிரியின் முன்னே |
| கதம் | எப்படி |
| விச்வஸ்மை திஷ்டஸே | ஸர்வஜனங்களுக்கும் தன் கருத்தை வெளியிட்டுக்கொண்டு நிற்கிறாய் ? |

வேதாந்தத்தில் "ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:" இத்யாதி வாக்யங்களானவை பரம் பொருளை ச்ரவணம் பண்ணவேணுமென்றிப்படி ஓதிவைத்து, மற்றோரிடத்தில் அந்த உபநிஷத்துக்களே *ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா* இத்யாதி வாக்கியங்களால்-அப் பரம்பொருள் ஒரு இந்த்ரியத்துக் கும் விஷயமாக மாட்டாதென்றோதிவைத்தன. அங்ஙனம் ஓதப்பட்ட பரம்பொருள் எதுவென்றால், ஸாக்ஷாத் பேரருளாளனாகிய நீயேகாண். அப்படி ஒரு இந்த்ரியத்துக்கும் விஷயமாக மாட்டாதவனாக ஓதப் பட்டுள்ள நீ இந்நிலவுலகில் ஸர்வஸுலபனாய் அவதரித்து ஹஸ்திகிரியின்முன்னே தன்னை வெளியிட்டுக் கொண்டு நிற்பது என்னே? என்கிறார்.

(வக்தும்) வசனமாவது-எம்பெருமான் இப்படிப்பட்டவனென்று உபதேசித்தல். ச்ரவணமாவது ஒருவனுபதேசிக்க அதனைச் செவி சாத்துதல். மனனமாவது-கேட்ட அர்த்தங்கள் நெஞ்சிலே பதியும் படி சிந்தனை செய்தல், உபாஸிஸிஷையாவது தைலதாரைபோல் அவிச்சிந்நஸம்ருதி ஸந்ததியாகிற உபா ஸனையைச் செய்ய விரும்புதல். உபாஸிக்க விரும்புதற்கே முடியாதென்றால், உபாஸிக்க நிதராம் முடியா தென்பது கிம்புநர்ந்யாயஸித்தம். உபாஸிஸிஷிதும் என்று ஸந்நந்தமாகப்ரயோகித்தவிது—விவிதிஷந்தி என்கிற சுருதிச்சாயையாலே என்னலாம்.

தர்சநமாவது-அந்த ஸ்ம்ருதி ஸந்தானத்தாலே விளையக்கூடிய ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான வில க்ஷண ஸாக்ஷாத்காரம். ஸ்பர்சமாவது-ஸாக்ஷாத்காரத்திற்குப் பிறகு "பெருநிலங்கடந்த நல்லடிப்போது

....தழுவுவன்'' என்றாப்போலே ஆசைகிளர்ந்து தொடுகை. இனி, போக்தும் என்றது—சொல்லிச் சொல்லாத இந்த்ரியங்களுக்கு விஷயமாகக் கூடிய அநுபவத்தை யெனக் கொள்க. ஆக, ஒருவித அநுபவத்திற்கும் முடியாதது பகவத்ஸ்வரூபமென்கை. (திஷ்டஸே) பரஸ்மைபதியாகிய ஷ்டா-தாதுவை இங்கு ஆத்மநேபதியாக ப்ரயோகித்திருப்பது ''ப்ரகாசநஸ்தேயாக்க்யயோச்ச'' என்கிற ஸூத்ரத்தை அவலம்பித்தாம். விசவஸ்மை என்ற சதுர்த்தி. ''ச்லாக ஹ்நுங்ஸ்தாசபாம் ஜ்ஞீப்ஸ்யமாநஃ'' என்ற ஸூத்ரத்தை அடியோற்றியாம். நிற்பதனாலே: தன் கருத்தை உலகத்தார்க்கு உணர்த்துகிறாயென்றபடி. இங்குத் தன் கருத்தாவது-'நரன் உங்களை வாரிப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போக வந்திருக்கிறேன்'-என்பதாம். வேதவேதாந்தங்களுக்கும் துர்க்ரஹனான நீ ஸர்வஸுலபனாக இங்ஙனே அவதரித்து நிற்கிற இது என்ன ஸௌலப்ய ஸௌசீல்ய-பரமகாஷ்ட்டை! என்று ஈடுபடுகிறபடி. (14)

**प्रकृष्टं विज्ञानं बलमतुलमैश्वर्यमखिलं विमर्यादं वीर्यं वरद परमा शक्तिरपि च ।**
**परं तेजश्चेति प्रवरगुणषट्कं प्रथमजं गुणानां निस्सीम्नां गणनविगुणानां प्रसवभूः ॥ १५ ॥**

**ப்ரக்ருஷ்டம் விஜ்ஞானம் பலமதுலமைச்வர்யமகிலம்**
**விமர்யாதம் வீர்யம் வரத பரமா சக்திரபி ச ।**
**பரம் தேஜச்சேதி ப்ரவரகுணஷட்கம் ப்ரதமஜம்**
**குணாநாம் நிஸ்ஸீம்நாம் கணநவிகுணாநாம் ப்ரஸவபூः ॥ 15 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| ப்ரக்ருஷ்டம் விஜ்ஞானம் | சிறந்த ஞானமென்ன |
| அதுலம் பலம் | ஒப்பற்ற பலமென்ன |
| அகிலம் ஐச்வர்யம் | அநவதிகமான ஐச்வர்யமென்ன |
| விமர்யாதம் வீர்யம் | எல்லையற்ற வீர்யமென்ன |
| பரமா சக்திரபி ச | ச்ரேஷ்டமான சக்தியென்ன |
| பரம் தேஜச்ச | சிறந்த தேஜஸ்ஸென்ன |
| இதி | ஆகிற [இவையாகிற] |
| ப்ரதமஜம் ப்ரவரகுணஷட்கம் | முதல் மூர்த்தியான பரவாஸுதேவ மூர்த்தியிலேயுள்ள சிறந்த ஆறு குணங்களானவை |
| நிஸ்ஸீம்நாம் | எல்லையற்றதுகளும் |
| கணநவிகுணாநாம் | எண்ணக்கூடாததுகளுமான |
| குணாநாம் | கல்யாண குணங்களுக்கு |
| ப்ரஸவபூ: | பிறப்பிடம். |

***ஜ்ஞானசத்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களென்கிற சிறந்த ஆறு குணங்களும் பரவாஸுதேவமூர்த்தியிலே புஷ்கலங்களென்றும், எம்பெருமானுக்கு மற்றுமுள்ள அநந்த கல்யாண குணங்களுள் இந்த ஆறு குணங்களே சிறந்தவையென்றும், இக்குணங்களடியாகத் தான் இவற்றின் சாகோபசாகைகளாக மற்ற குணங்கள் பெருகுகின்றன வென்றும் சொல்லிற்றாயிற்று. ஜ்ஞானம் பலம் என்ற ஒவ்வொரு குணத்துக்கும் ப்ரக்ருஷ்டம், அதுலம் இத்யாதி விசேஷணங்கள் இட்டது, மற்றையோருடைய ஜ்ஞாநாதிகளை வ்யாவர்த்திப்பிக்க.

இந்த ஆறு குணங்களுக்கும் இன்ன இன்ன கார்யத்திலே விநியோகமென்னுமிடம் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் ''யுகபதநிசமக்ஷை:'' இத்யாதி ஸப்தச்லோகங்களிலே விசதம். அங்கே எமது வியாக்கியானம் கண்டு தெளிவது.

அஸங்க்யேயங்களாயுள்ள குணகணங்களுக்கு இந்த ஆறு குணங்களும் ஊற்றுவாய் என்னுமிடம் ''தவாநந்தகுணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா:'' இத்யாதி ப்ரமாண ஸித்தம்.

(ப்ரதமஜம்) குணங்களுக்குள்ளே முதன்மையாயுள்ளது என்றும் பொருளாகலாமாயினும் அது அழகியதன்று.

'கணநவிகுணாநாம்' என்பதனால் தனித்தனியாக எண்ண முடியாதவை யென்பதும், நிஸ்ஸீம்நாம் என்பதனால் ஒரு பெரிய ராசியாகவும் எண்ணமுடியாதவை யென்பதும் போதரும், மண் மணல் முதலிய

வற்றைத் தனித் தனியாக எண்ணக் கூடாதாயினும் 'ஒரு கூடை மண்' 'ஒரு வண்டி மணல்' என்று ஒரு ராசியாக எண்ணக் கூடும்; பகவத் குணங்கள் அப்படியும் எண்ணமுடியாதவை யென்கை. (15)

गुणैष्षड्भिस्त्वेतैः प्रथमतरमूर्तिस्तव बभौ ततस्तिस्रस्तेषां त्रियुगयुगलैर्हि त्रिभिरभुः ।
व्यवस्था या चैषा ननु वरद साविष्कृतिवशात् भवान् सर्वत्रैव त्वगणितमहामङ्गलगुणः ॥ १६ ॥

குணைஷ் ஷட்பிஸ்த்வேதை: ப்ரதமதரமூர்த்திஸ்தவ பபௌ
ததஸ் திஸ்ரஸ் தேஷாம் த்ரியுக யுகளைர் ஹி த்ரிபிரபு: ।
வ்யவஸ்தா யா சைஷா நநு வரத ஸாவிஷ்க்ருதிவசாத்
பவாந் ஸர்வத்ரைவ த்வகணிதமஹாமங்களகுண: ॥ 16 ॥

| | | | |
|---|---|---|---|
| த்ரியுக | மூவிரண்டு குணங்களையுடைய | த்ரிபி: யுகளை: | மூவிரண்டுகளாலே |
| வரத | வரதனே ! | அபு: | ப்ரகாசித்தன ; |
| தவ | உன்னுடைய | ஏஷா வ்யவஸ்தா யா | இப்படிப்பட்ட வ்யவஸ்தை யாதொன்றுண்டு |
| ப்ரதமதர மூர்த்தி: | எல்லா மூர்த்திகளுக்கும் முதன்மையரன பரவாஸுதேவ மூர்த்தியானது | ஸா | அந்த வ்யவஸ்தையானது |
| ஏதை : | இந்த [கீழ்ச்சொன்ன] | ஆவிஷ்க்ருதி வசாத் | [குணங்களை] வெளியிடுதல் பற்றியாம் : |
| ஷட்பி : குணை: | ஆறு குணங்களால் | பவாம்ஸ்து | நீயோ வென்னில் |
| பபௌ | விளங்கிற்று ; | ஸர்வத்ரைவ | எல்லா மூர்த்திகளிலுமே |
| தத: திஸ்ர: [மூர்த்தய:] | அதற்குமேல் மூன்று மூர்த்திகள் | அகணிதமஹா மங்கள குண : | எண்ணிறந்த சிறந்த கல்யாண குணங்களையுடையையாயிரா நின்றாய். |
| தேஷாம் | அந்த குணங்களுடைய | | |

***(குணைரித்யாதி) அதிமாநுஷஸ்தவத்தில் 'ஜ்ஞாநம் பலம் விபுலம்' என்ற ச்லோகத்தில் சுருங்கச் சொன்னதை இங்கு விவரித்து அருளிச் செய்கிறார். பரவாஸுதேவ மூர்த்தி, ஸங்கர்ஷண மூர்த்தி, ப்ரத்யும்ந மூர்த்தி, அநிருத்த மூர்த்தி என்று சதுர்விதமான மூர்த்திகளில் ப்ரதமமான வாஸுதேவ மூர்த்தியில் கீழ் ச்லோகத்திற் சொல்லப்பட்ட ஜ்ஞானபலைச்வர்ய வீர்யசக்தி தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்களும் ப்ரகாசிக்கின்றன. மற்ற ஸங்கர்ஷணாதி மூன்று மூர்த்திகளில் ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு குணம் விழுக்காடு [அதாவது-ஸங்கர்ஷண மூர்த்தியில் ஜ்ஞானமும் பலமும், ப்ரத்யும்ந மூர்த்தியில் ஐச்வர்யமும் வீர்யமும், அநிருத்த மூர்த்தியில் சக்தியும் தேஜஸ்ஸுமாக] ப்ரகாசிக்கின்றன வென்பது பூர்வார்த்தத்தின் கருத்து.

ததஸ் திஸ்ர: "வ்யூஹங்கள் நாலென்றும், மூன்றென்றும் சாஸ்த்ரங்கள் சொல்லும். நாலு வ்யூஹமுண்டாயிருக்க வ்யூஹ வாஸுதேவ ரூபத்திற்குப் பரரூபத்திற்காட்டில் அநுஸந்தேய குண பேதமில்லாமையாலே த்ரிவ்யூஹமென்கிறது. இப்பக்ஷத்தை குணைஷ் ஷட்பிஸ் த்வேதை: என்கிற ச்லோகத்திலே ஸங்க்ரஹித்தார்கள்." என்ற ரஹஸ்யத்ரயஸார-தத்வத்ரய சிந்தநாதிகார ஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

இங்ஙனே சொன்னால் பகவந்மூர்த்திகளிலேயே குணவைகல்யம் கொள்வது குறையாகுமே யென்று சங்கித்து உத்தரார்த்தத்தாலே பரிஹரிக்கிறார். (வ்யவஸ்தேத்யாதி) ஒவ்வொரு மூர்த்தியிலே இரண்டிரண்டு குணங்கள் என்று வகுக்கப்பட்ட வ்யவஸ்த்தையானது குணங்களின் ஸத்தாப்ரயுக்தமன்று; ஆவிஷ்கார ப்ரயுக்தம். அதாவது; ஒவ்வொரு மூர்த்தியிலே ஈரிரண்டு குணங்களைத்தான் கார்ய வசாத் ப்ரகாசப் படுத்துகிறான் என்பதைப் பற்றச் சொல்லிற்றேயன்றி, இரண்டு குணங்கள் தவிர மற்ற குணங்கள் அந்த மூர்த்திகளில் இல்லை யென்பதைப் பற்றச் சொல்லிற்றல்ல என்கை. எல்லா மூர்த்திகளிலும் உன்னுடைய ஸகல குணங்களும் புஷ்கலமாயிருக்கின்றமையை அபலாபம் பண்ணமுடியாது. இரண்டிரண்டு குணங்கள் தான் ஆவிஷ்கரிக்கப்படுகின்றன. மற்றவை அநுத்பூதங்களாய்ப் பதிந்திருக்கின்றன என்றபடி.

த்ரியுக! — த்ரீணி யுகாநி யஸ்ய ஸ: இரண்டிரண்டாக வகுக்கப்பட்ட மூன்று குண ஸமுதாயங்களை உடையவன் என்றபடி. பூர்வார்த்த முடிவில் [அபு:] என்ற பாடத்தை அறியாமல் பலர் 'அபூத்' என்று ஓதுவது பிழை. [அபாத், அபாதாம, அபு:] (16)

**इयं वैयूही वै स्थितिरथ किलेच्छाविहृतये विभूतीनां मध्ये सुरनरतिरश्चामवतरन् ।**
**सजातीयस्तेषामिति तु विभवाख्यामपि भजन् करीश त्वं पूर्णो वरगुणगणैस्तान्स्थगयसि ॥ १७**

**இயம் வையூஹீ வை ஸ்திதிரத கிலேச்சா விஹ்ருதயே**
**விபூதீநாம் மத்யே ஸுரநரதிரச்சாமவதரந் ।**
**ஸஜாதீயஸ் தேஷாமிதி து விபவாக்க்யாமபி பஜந்**
**கரீச ! த்வம் பூர்ணோ வரகுணகணைஸ் தாந் ஸ்தகயஸி ॥ 17 ॥**

| | |
|---|---|
| ஹே கரீச | ஹஸ்திகிரிநாதனே! |
| இயம் ஸ்திதி: | [கீழ்க் கூறிய] வ்யவஸ்தையானது |
| வையூஹீ வை | வ்யூஹத்தைப்பற்றியதாம்; |
| அத கில | அதற்கு மேல் |
| இச்சா விஹ்ருதயே | இஷ்டப்படி விளையாடுவதற்கு |
| விபூதீநாம் | [உன்னுடைய] விபூதியாகிய |
| ஸுரநரதிரச்சாம் மத்யே | தேவ மநுஷ்ய திர்யக்குகளின் நடுவில் |
| அவதரந் | அவதரித்தவனாய் |
| விபவாக்க்யாம் பஜந் | விபவாவதார மென்னும் திருநாமத்தை அடைந்தவனாய் |
| வரகுணகணை: | சிறந்த குணங்களின் சமூகங்களால் |
| பூர்ணோபி | நிறைந்தவனாயிருந்தாலும் |
| தேஷாம் | அந்த தேவ மநுஷ்ய திரியக்குகளுக்கு |
| ஸஜாதீய இதிது | ஸஜாதீயன் என்ற காரணத்தால் |
| தாந் | அந்த குணஸமூகங்களை |
| ஸ்தகயஸி | மறைத்துக்கொண்டிருக்கிறாய். |

***கீழ் ச்லோகத்தில் சொல்லப்பட்ட வ்யவஸ்த்தையானது வ்யூஹத்தைப் பற்றியது. அதாவது—ஸங்கர்ஷணாதி மூர்த்தித்ரயத்திலும் ஈரிரண்டு குணங்கள் விளங்குகின்றன வென்று சொன்ன ஏற்பாடு வ்யூஹவிஷய மென்கை. அதற்குமேல் விபவாவதாரத்தின்படி சொல்லப்படுகிறது. உன் விபூதியான தேவஜாதியில் ஒருவனாகவும் மநுஷ்ய ஜாதியில் ஒருவனாகவும் இப்படிப் பலபல யோனிகளில் பிறவாநின்ற நீ விபவாவதாரமென்னும் பெயரையடைந்தவனாய் இவ்வவதாரங்களிலும் ஸகல கல்யாண குணகண பரிபூர்ணனாயிருந்தும் அவர்களோடு ஒரு கோர்வையாகப் பிறந்த காரணத்தினால் வேறுபாடு தோன்றாமைக்காக அக்குணங்களை மறைத்துக் கொண்டிருக்கிறாய் என்றபடி. கோவர்த்தனோத்தாரணம் ஸேதுபந்தம், அம்ருதமதநம் முதலிய சில ஸமய விசேஷங்களில் தன் அபார சக்தி விசேஷத்தை ஆவிஷ்கரித் தருளினபடியால் மற்ற காலங்களில் அந்த சக்திவிசேஷத்துக்குறுப்பான குணங்கள் அந்தர்ஹிதங்களாயிருக்கின்றன என்பது அறியலாயிற்றென்கை.

விபவமென்பது விபூதி - ஸஜாதீயராய், தனது விபூதியான மநுஷ்யாதி ஜாதிகளில் ஒருவனாக அவதரித்தமையால் அந்த அவதாரத்துக்கு விபவமென்னும் பெயராயிற்று. அன்றிக்கே, தன் விபவங்களோடு கூடியே அவதரிக்கையென்னும் கருத்தாய் ஸகல கல்யாண குணகண விசிஷ்ட வேஷத்தை உட்கொண்டபடியாம்.

[இச்சாவிஹ்ருதயே] அஸ்மதாதி ஜந்மங்களுக்கு ஹேது கருமமாகிறாப்போலே பகவதவதாரங்களுக்கும் கருமமே ஹேதுவாமோ? என்னும் சங்கையை நிரஸிக்கிறார். 'மனிசரும் மற்றும் முற்றுமாய் மறைப்பிறவி பிறந்த' என்று பஹுவிதமாகச் சொல்லப்படுகிற பகவதவதாரங்களுக்கு ஹேது 'இப்படி பவதிப்பேனம்' என்னும் ஸ்வேச்சையேயாறிய ஹேத்வந்தரமில்லையிறே.

[ஸுரநரதிரச்சாம் மத்யே அவதரந்] ஸுதர்சநத்தவேதர் பேதமான பத்மநாபாதி விபவமும், உபேந்த்ர த்ரிவிக்ரம ததிபக்த ஹயக்ரீவ நரநாராயண ஹரிக்ருஷ்ண மத்ஸ்ய கூர்ம வராஹாத்யவதார விசேஷங்களும், தன்னுடைய ஸங்கல்பத்தில் பண்ணின குப்ஜாம்ராவதாரமும் இவை போல்வன எண்ணிறந்த அவதாரங்கள் இங்கு அநுஸந்தான விஷயம். (17)

परो वा व्यूहो वा विभव उत वाऽर्चावतरणः भवन् वाऽन्तर्यामी वरवरद यो यो भवसि वै ।
स स त्वं सन्नैशान् वरगुणगणान् बिभ्रदखिलान् भजद्भ्यो भास्येवं सततमितरेभ्यस्त्वितरथा॥

பரோ வா வ்யூஹோ வா விபவ உத வார்ச்சாவதரணః
பவந் வாந்தர்யாமீ வரவரத யோ யோ பவஸி வை !
ஸ ஸ த்வம் ஸந்நைசாந் வரகுணகணாந் பிப்ரதகிலாந்
பஜத்ப்யோ பாஸ்யேவம் ஸததமிதரேபயஸ்த்விதரதா ॥ 18 ॥

| | |
|---|---|
| வரவரத | சிறந்த வரங்களைக் கொடுக்கும் பேரருளாளனே! |
| த்வம | நீ |
| பரோ வா | பரவாஸுதேவனுகவோ |
| வ்யூஹோ வா | வ்யூஹமூர்த்தியாகவோ |
| விபவோ பவங் வா | விபவாவதாரமாகப் பிறந்தவனுகவோ |
| உத | அல்லது |
| அர்ச்சாவதரணோ பவங் வா | அர்ச்சையாக அவதரித்தவனுகவோ |
| அந்தர்யாமீ வா | அந்தர்யாமியாகவோ |
| யோ யோ பவஸி வை | எவ்வெவனுக இருக்கிருயோ |
| ஸ ஸ ஸங் | அவ்வவனுய்க் கொண்டு |
| ஐசாங் | ஈச்வரனுக்குரிய |
| அகிலாங் வர குணகணாங் | சிறந்த குண ஸமூஹங்களெல்லாவற்றையும் |
| பிப்ரத் | தன்னிடத்திலுடையவனுய் |
| ஏவம் | இப்படி ஸகலகுண விசிஷ்டவேஷனுக |
| ஸததம் | எல்லா அவஸ்தைகளிலும் |
| பஜத்ப்ய: பாஸி | ஆச்ரிதர்களுக்குத் தோற்றுகிருய்; |
| இதரேப்யஸ் து | அநாச்ரிதர்களுக்கோ வென்ருல் |
| இதரதா | வேறுவிதமாக [குணசூன்யனுக] |
| பாஸி | தோற்றுகிருய். |

***கல்யாண குணங்களின் ஆவிர்ப்பாவத்திற்கும் திரோபாவத்திற்கும் விஷயவிபாகம் கூறுகிருர் இதில். வரதனே! 'இன்ன அவதாரத்தில்தான் உன் குணங்கள் பூர்ணங்கள், இன்ன அவதாரத்தில் இல்லை' என்பது கிடையாது. பரவ்யூஹவிபவாந்தர்யாம்யர்ச்சாவதாரங்களில் எவ்வெவனுக நீ இருக்கிருயோ அவ்வவ்விருப்புகளில் ஸர்வேச்வரத்வஸ்வரூபாநுபந்திகளான ஸகல கல்யாண குணங்களும் பரிபூர்ணங்களாகவே யிருக்கின்றன. ஆனல் அக்குணங்கள் ஆச்ரிதர்க்குத் தோற்றும் ; அநாச்ரிதர்க்குத் தோற்ருதென்கிருர்.

பகவத் ஸ்வரூபமானது பரத்வம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரமென்று ஐந்து ப்ரகாரத்தோடே கூடியிருக்கும். அதில் பரத்வமாவது 'நலமந்தமில்லதோர் நாடு' என்கிற ஸ்ரீவைகுண்டத்திலே நித்யர்க்கும் முக்தர்க்கும் அநுபவ விஷயனுய்க் கொண்டு ஷாட்குண்ய பரிபூர்ணனு யெழுந்தருளியிருக்குமிருப்பு. வ்யூஹத்துக்கு விநியோகம் லீலா விபூதியிலே யாகையாலே இவ் விபூதியினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிக்கைக்காகவும், புபுக்ஷுக்களான ஸம்ஸாரிகளை அநிஷ்டநிவ்ருத்த்யாதிகளைப் பண்ணி ரக்ஷிக்கைக்காகவும், முமுக்ஷுக்களாய் உபாஸிக்குமவர்களுக்கு ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வமாகத் தன்னை வந்து சேருகைக் குடலான அநுக்ரஹத்தைப் பண்ணுகைக்கு உடலாகைக்காகவும், ஸங்கர்ஷண ப்ரத்யும்நாநிருத்தர்களாய்க்கொண்டு நிற்கும் நிலை-வ்யூஹமெனப் படும். இந்த வ்யூஹத்திலே வாஸுதேவரையும் கூட்டி சதுர் விதமாகச் சொல்லுவதுமுண்டு. வாஸுதேவ ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்தர்களென்கிற இந்த வ்யூஹ சதுஷ்டய மூர்த்திகளுக்கே வைகாநஸ சாஸ்த்ரங்களில், புருஷ, ஸத்ய, அச்யுத, அநிருத்த பதங்களாலே வ்யபதேசமாம். இவற்றுள் ப்ரதம வ்யூஹமாகிய வாஸுதேவ ரூபம் பரரூபத்தில் காட்டில் குணதிகளாலே எள்ளளவும் பேதியாது. ஆகவே தான் பரவாஸுதேவனென்றும் வ்யூஹவாஸுதேவனென்றும் வ்யவஹாரம். பரவாஸுதேவனுக்கு நித்யோதிதனென்றும் வ்யூஹ வாஸுதேவனுக்கு சாந்தோதித னென்றும் ஸாம்ப்ரதாயிக வ்யபதேசமாகும். பரவாஸுதேவனுடைய ஸங்கல்பம் நித்யவிபூதி நிர்வாஹகமென்றும் வ்யூஹ வாஸுதேவனுடைய ஸங்கல்பம் லீலாவிபூதி நிர்வாஹக மென்றும் சொல்லுவர்கள்.

விபவமாவது இதரஜாதீயமாய்க்கொண்டு ஆவிர்ப்பவிக்கை. இதுதான் எண்ணி முடிக்கப் போகாதபடி அநந்தமாய் கௌண முக்ய பேதத்தாலே இரண்டு வகையாகப் பிரிந்திருக்கும்.

ஆவேசாவதாரம் கௌணம், ஸாக்ஷாதவதாரம் முக்க்யம். ஆவேசந்தான் ஸ்வரூபா வேச மென்றும் சக்த்யாவேச மென்றும் த்விவிதமாயிருக்கும். அதில் ஸ்வரூபாவேசமாவது ஸ்வேநரூபேண ஆவேசிக்கை. அதாவது பரசுராமாதிகளான சேதனருடைய சரீரங்களிலே தன்னுடைய அஸாதாரண விக்ரஹத்தோடே ஆவேசித்து நிற்கை. சக்த்யாவேசமாவது-கார்ய காலத்திலே விதி சிவாதிகளான சேதனர் பக்கலிலே சக்திமாத்ரத்தாலே ஸ்புரித்து நிற்கை. அந்தர்யாமித்வமாவது-சேதனருடைய உள்ளே ப்ரவேசித்து ஸகல ப்ரவ்ருத்திகளுக்கும் நியந்தாவாயிருக்கை. இதுதான் ஆத்மாவினுள்ளே தன் ஸ்வரூபத்தாலே வ்யாபித்து நின்று நியமிக்குமதும், ஸவிக்ரஹனுய்க்கொண்டு ஹ்ருதயத்திலே வ்யாபித்திருந்து நியமிக்குமதும் என இருவகைப்பட்டிருக்கும். அர்ச்சாவதாரம் ப்ரஸித்தமேயாம்.

ஆக, இந்த பஞ்ச ப்ரகாரங்களுள்ளும் பரிபூர்ணமான திருக்குணங்களையுடையையாய் அக்குணங்களை அன்பர்களான ஆச்ரிதர்களுக்கு ஸேவைஸாதிப்பித்து, மற்றையோர்க்கு மறைத்திடுகின்றாய்— என்கிறது உத்தரார்த்தத்தில். .... ... ... ... ... (18)

**दयाक्षान्त्यौदार्यम्रदिमसमतासौहृदधृतिप्रसादप्रेमाज्ञाश्रितसुलभताद्या वरगुणाः ।**
**तथा सौन्दर्याद्यास्तव वरदराजोत्तमगुणाः विसीमानोऽसंख्याः प्रणतजनभोगं प्रसुवते ॥ १९ ॥**

**தயாக்ஷாந்த் யௌதார்யம்ரதிமஸமதாஸௌஹ்ருதத்ருதி-**
**ப்ரஸாதப்ரேமாஜ்ஞாச்ரிதஸுலபதாத்யா வரகுணா꞉ ।**
**ததா ஸௌந்தர்யாத்யாஸ் தவ வரதராஜோத்தமகுணா꞉**
**விஸீமாநோஸங்க்யா꞉ ப்ரணதஜநபோகம் ப்ரஸுவதே ॥ 19 ॥**

| | |
|---|---|
| ஹேவரதராஜ | வரதராஜனே ! |
| தவ | உன்னுடைய |
| விஸீமாந: | எல்லை யற்றதுகளும் |
| அஸங்க்யா: | எண்ணிறந்தவைகளுமான |
| தயா க்ஷாந்தி ஔதார்ய ம்ரதிம ஸமதா ஸௌஹ்ருத த்ருதி ப்ரஸாத ப்ரேம ஆஜ்ஞா ஆச்ரித— ஸுலபதாத்யா: | தயை, பொறுமை, ஔதார்யம், ஸௌகுமார்யம், ஸமத்வம், ஸுஹ்ருத்வம், உறைப்பு, கனிவு, அன்பு, ஆணை, ஆச்ரித ஸௌலப்யம் முதலிய |

| | |
|---|---|
| வரகுணா: | சிறந்த [ஆத்ம] குணங்களும் |
| ததா | அப்படிப்பட்ட |
| ஸௌந்தர்யாத்யா: | ஸௌந்தர்யம் முதலிய |
| உத்தம குணா: | சிறந்த [தேஹ] குணங்களும் |
| ப்ரணத ஜநபோகம் | ஆச்ரித ஜநங்களுக்கு மகிழ்ச்சியை |
| ப்ரஸுவதே | உண்டுபண்ணுகின்றன. |

*** உன்னுடைய ஆத்ம குணங்களையும் தேஹ குணங்களையும் அவலம்பமாகக் கொண்டு அடியார்கள் மகிழ்கின்றனர் என்கிறார். பூர்வார்த்தத்தில் அருளிச் செய்யப்பட்ட பதினொரு குணங்களும் ஆத்ம குணங்கள். உத்தரார்த்தத்தில் அருளிச் செய்யப்பட்ட ஸௌந்தர்யமும் ஆத்ய சப்தஸங்க்ருஹீதங்களான ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாதி குணங்களும் திவ்யமங்கள விக்ரஹ குணங்களாம்,

[தயா] பிறர் படும் துன்பத்தைக் கண்டு தானும் வருந்துகை [க்ஷாந்தி தண்டனைக்குரிய தோஷங்களையும் பொறுத்தருளுகை. [ஔதார்ய] ஆச்ரிதருடைய அபேக்ஷிதங்களைத் தானே இரந்து கொடுக்கை. [ம்ரதிமா] ஸௌகுமார்யகுணம். இது உபய கோடிப்ரவிஷ்டம். திருவுள்ளத்தில் ஸௌகுமார்யமாவது இளகியிருக்கை,

[ஸமதா] ஜாதி குணவ்ருத்தாதி நிம்நோந்நதத்வங்களைக் கணிசியாமல் அவரவர்களுக்கு ஆச்ரயணீயத்வத்தில் ஸமனுயிருக்கை. 'ந த்யஜேயம் கதஞ்சந' [ஸௌஹ்ருத] ஆச்ரிதர்க்கு ஸர்வமங்களாந்வேஷண பரனுகை. பகதத்தன் விட்ட சக்தியை அர்ஜுநனைத் தள்ளித் தன்னந்தப்புரத்திலே யேற்றாப்போலே ஆச்ரிதர்க்கு நேரும் தீங்குகளைத் தானேறிட்டுக் கொண்டு அநுபவிக்குமவனிறே.

[த்ருதி꞉] "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரது செய்யார்" என்கிறபடியே பிராட்டி சிதகுரைத்தாலும் கைவிடகில்லாமல் ரக்ஷணத்தில் திண்ணியனுயிருக்கை. இக் குணம் 'உறைப்பு' எனப்படும், "ந த்யஜேயம் கதஞ்சந" என்னுமவனிறே.

[ப்ரஸாத:] எப்போதும் தெளிந்த முகமாயிருக்கை. அதாகிறது ஹிம்ஸிப்பதாக வருமளவிலும் ரஸாவஹனுயிருக்கை. பாரதஸமரத்திலே சக்ரோத்தாரணத்தினன்று அர்ஜுநனிளைத்துக் கைவாங்கின்வாறே கண்ணபிரான் பண்டு பண்ணியிருந்த ப்ரதிஜ்ஞையை யழித்துத் திருவாழியைக் கொண்டு பீஷ்மரைத் தொடர்ந்தவளவிலும், "ஏஹ்யேஹி புல்லாம்புஜ பத்ரநேத்ர" என்றுரிறே பீஷ்மர். [ஆஜ்ஞா] செங்கோல் செலுத்துகை. [ஆச்ரிதஸுலபதா]*தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவமாய்க்கொண்டு அடியார்களுக்கு எளியனுகை. ஆத்யசப்தத்தாலே ஸௌசீல்யம் முதலிய குணங்களைக் கொள்க.

[ப்ரணதஜநபோகம் ப்ரஸுவதே] எல்லாக் குணங்களும் ஒரு வ்யக்திக்கே போக ஹேதுவாகா தொழிந்தாலும், 'வாத்ஸல்யாதிகளுக்கு விஷயம் அநுகூலர்; சௌர்யாதிகளுக்கு விஷயம் ப்ரதிகூலர்; இவற்றிற்குக் காரணமான ஜ்ஞானசக்த்யாதிகளுக்கு எல்லாரும் விஷயம்; ஜ்ஞாநம் அஜ்ஞர்க்கு; சக்தி—அசக்தர்க்கு; க்ஷமை-ஸாபராதர்க்கு, க்ருபை-துக்கிகளுக்கு. வாத்ஸல்யம்; ஸதோஷர்க்கு; சீலம்—மந்தர்க்கு; ஆர்ஜவம் - குடிலர்க்கு; ஸௌஹார்தம் - துஷ்டஹ்ருதயர்களுக்கு; மார்தவம்-விச்லேஷபீருக்களுக்கு; ஸௌலப்யம்-காணவாசைப்பட்டவர்களுக்கு" என்கிற இவ்வடைவில் ப்ரணதஜந போகப்ரதமாகக் குறையில்லை. ... ... ... (19)

**अनन्याधीनत्वं तव किल जगुर्वैदिकगिरः पराधीनं त्वां तु प्रणतपरतन्त्रं मनुमहे ।**
**उपालम्भोऽयं भोः श्रयति बत सार्वज्ञ्यमपि ते यतो दोषं भक्तेष्विह वरद नैवाकलयसि ॥ १० ॥**

**அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர:**
**பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே ।**
**உபாலம்போயம் போ: ச்ரயதி பத ஸார்வஜ்ஞ்யமபி தே**
**யதோ தோஷம் பக்தேஷ்விஹ வரத நைவாகலயஸி ॥ 20 ॥**

| | | | |
|---|---|---|---|
| போ வரத! | வரதனே! | உபாலம்ப: | தூஷணமானது |
| வைதிககிர: | வேதவாக்குகளானவை, தவ-உனக்கு | தே | உன்னுடைய |
| அநந்யாதீநத்வம் | பிறர்க்கு வசப்பட்டிராமையாகிற ஸ்வாதந்த்ரியத்தை | ஸார்வஜ்ஞ்யம் அபி | ஸர்வஜ்ஞத்வத்தையும் |
| ஜகு: | சொல்லியுள்ளன; | ச்ரயதி | பற்றுகிறது; |
| வயம் து | நாங்களோ வென்றால் | பத | ஆச்சர்யம்! |
| ப்ரணத பரதந்த்ரம் | அடியவர்களுக்குப் பரவசனன | யத: | ஏனென்றால், |
| | | இஹ | இவ்விபூதியிலுள்ள |
| த்வாம் | உன்னை | பக்தேஷு | பக்தர்களிடத்தில் |
| பராதீநம் | பரதந்த்ரனுக | தோஷம் | குற்றத்தை |
| மநுமஹே | எண்ணுகிறோம்; | | |
| அயம் | இப்படிப்பட்ட | நைவ ஆகலயஸி | சிறிதும் பார்க்கிறுயில்லையிறே. |

*** வ்யாஜஸ்துத்யலங்காரமர்யாதையிலே பேரருளாளனுடைய ஆச்ரித பாரதந்த்ரிய குணத்தையும் வாத்ஸல்ய குணத்தையும் அருளிச் செய்கிறுர்.

"தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்" என்றிங்ஙனே சொல்லுகிற ச்ருதிகளை உதாஸித்து 'பாரதந்த்ரியத்தையே வடிவாகவுடையவன் நீ' என்று அறுதியிடுவேனென்கிறுர். அர்ச்சகபராதீனத்வம் அர்ச்சா ஸ்தலங்களுக்கெல்லாம் ஸாதாரணமாயிருந்ததே யாகிலும் பேரருளாளன் பக்கலிலே ஆச்ரித பாரதந்த்ரியம் நெடுவாசி பெற்றிருக்கும். அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து திருக்கச்சி நம்பிகள் பக்கலிலே ஸர்வாத்மநா பரதந்த்ரனுயிருந்ததும், உயிர் நிலையான எம்பெருமானரையும் தாரை வார்த்து தத்தம் பண்ணும்படி திருவரங்கப் பெருமாளரையர்க்குத் தோற்று நின்றதும் முதலிய வ்ருத்தாந்தங்களை இங்கு அநுஸந்திப்பது.

ஆக இப்படி நீ பரதந்த்ரனுயிருக்கையாலே ஸ்வாதந்த்ரியம் உனக்கு வந்தேறி யென்றும் பாரதந்த்ரியமே இயற்கைவடிவென்றும் நிலையிடா நின்றேமென்மை, ஆச்ரிதர் பக்கலிலே பரதந்த்ரனுயிருப்பதும் அநாச்ரிதர் பக்கலிலே ஸ்வதந்த்ரனுயிருப்பதும் ஆக இரண்டு குணங்களும் எம்பெருமா

னுக்கு ப்ரமாணஸித்தமாயிருக்க, இந்த ச்லோகத்தில் ஸ்வாதந்த்ரியத்தை இல்லை செய்து பாரதந்த்ரியத்தைப் பேசினபடி யென்னென்னில்; இருட்டறையில் விளக்குப்போல இங்கே நன்கு விளங்குவது பாரதந்த்ரியமே யாகையாலும், 'ஸ்வாதந்த்ரியம் குடிபோய்த்து' என்னும்படி பேரருளாளப் பெருமாளாய் நிற்கையாலும் ஆழ்வான் தாம் இந்த குணத்திலே ஈடுபட்டு வித்தரானமையாலும் சொல்லிற்று.

இனி உத்தரார்த்தத்தாலே வாத்ஸல்ய குணத்தை அநுபவிக்கிறர் : உன்னுடைய அநங்யாதீநத்வத்துக்குக் கண்ணழிவு சொன்னப்போலே, ஸர்வஜ்ஞத்வத்துக்கும் கண்ணழிவு சொல்ல ப்ராப்தியுண்டே; ஸர்வஜ்ஞத்வ ஹாநிக்கு ஹேது சொல்லுகிறர் [யதோ தோஷமித்யாதியாலே.] உலகத்திலுள்ள ஸர்வ பதார்த்தங்களையும் அறியுமவனன்றே ஸர்வஜ்ஞதயா வ்யபதேச்யனவன். 'குன்றனைய குற்றம் செய்யினும்' என்றபடி ஆச்ரிதர்கள் மலைமலையாகச் செய்யும் குற்றங்களைக் காணுதிருக்கிற வுன்னை அஜ்ஞனென்னப் பொருந்து மத்தனை போக்கி ஸர்வஜ்ஞனென்னப் போமோ? பக்தர்களின் தோஷங்கள்தான் அல்ப ஸ்வல்பமன்றியே மலைமலையாயிருக்க அவற்றை அறியாதொழிவது உனக்கு 'அவிஜ்ஞாதா' என்கிற திருநாமத்துக்கு உபஷ்டம்பகமாகுமே யொழிய ஸர்வஜ்ஞத்வாநுகுணமாகாது காண் என்கிறர்.

ஆகவித்தாலே, ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில் "அவிஜ்ஞாதா" என்ற திருநாமம் வ்யாக்க்யாதமாயிற்று.

ஆக இந்த ச்லோகம் உபாலம்பத்வய கர்ப்பிதமாயிருந்தாலும் தாத்பர்யவ்ருத்தியினுல் எம்பெருமானுடைய ஆச்ரிதபாரதந்த்ர்யம் வாத்ஸல்யம் என்கிற கல்யாண குணங்களை ப்ரசம்ஸித்தபடியாகத் தேறுகையாலே வ்யாஜஸ்துதியலங்கார மாகிறது. .. .... (20)

**पाणिपादवदनेक्षणशब्दैः अम्बुजान्यपदिशन् वरद त्वम् ।**
**बाहुभिस्त्वतिविशालतमालान् आञ्जनं करिगिरेरसि शृङ्गम् ॥ २१ ॥**

**பாணிபாதவத நேக்ஷணசப்தை: அம்புஜாந்யபதிசந் வரத த்வம் ।**
**பாஹுபிஸ் த்வதிவிஸாலதமாலாந் ஆஞ்ஜநம் கரிகிரேரஸி ச்ருங்கம் ॥ 21 ॥**

| | |
|---|---|
| ஹேவரத | ஓ வரதனே! |
| பாணிபாதவதந ஈக்ஷணசப்தை: | திருக்கை திருவடி திருமுகம் திருக்கண் என்னும் திரு நாமங்களாலே |
| அம்புஜாநி | தாமரை மலர்களையும் |
| பாஹுபி: | புஜங்களினலே |
| அதிவிசால தமாலாம்ஸ்து | மிகப் பெரிய பச்சிலை மரங்களையும் |
| அபதிசந் | மறைத்துக்கொண்டிரா நின்ற |
| த்வம் | நீ |
| கரிகிரே: | ஹஸ்திகிரிக்கு |
| ஆஞ்ஜநம் | அஞ்சனமயமான |
| ச்ருங்கம் | சிகரமாக |
| அஸி | ஆகின்ருய். |

*** இனி அறுபத்திரண்டாம் சுலோகமளவாக வடிவழகு வர்ணநத்திலே ஊன்றுகிறர். அது தன்னிலும் முதலிட்டு நான்கு சுலோகங்களாலே திவ்யமங்கள விக்ரஹ சோபையை ஸமுதாய ரூபேண அநுபவித்து, மேல் (ஆதிராஜ்யமதிகம்) என்று தொடங்கி ப்ரத்யங்க சோபையை அநுபவித்து இனியராகிறர்.

ப்ரதமதசகத்திலே பேரருளாளனையும் ஒரு பொருளாக மதியாதே, அவனுகந்து வர்த்திக்கும் திருவத்திமாமலையையே பரமப்ராப்யமாக அநுஸந்தித்தருளின விவர், அத்திருமலையை விட்டுப் பேரருளாளனுடைய வடிவழகிலே ஊன்றுவானென்? என்று விசிகித்ஸை பண்ணுவார்க்குத் தெளிவு பிறக்கும்படி

ஒரு சமத்காரமாக அருளிச் செய்கிறார் ; பேரருளாளனைத் திருவத்தி மாமலையிற்காட்டில் வேறு பட்டவனாக நான் ப்ரதிபத்தி பண்ணுகிறிலேன் ; திருமலையில் ஏகதேசமென்னலாம்படி யிராநின்றானென்கிறார்.

ஆழ்வார் *கிளரொளியிளமையில் "திருமலையதுவே யடைவது திறமே" "போதவிழ் மலையே புகுவது பொருளே" என்று திருமாலிருஞ் சோலைமலைதன்னையே ப்ராப்யமாக அருளிச்செய்து போந்து *முடிச்சோதியில் அத்திருமலைதன்னை விட்டு அழகருடைய வடிவழகிலே ஆழங்கால்பட்ட படியை உபபாதிக்கப்புகுந்த நம் ஆசார்யர்கள்,—"திருமலையை அநுபவித்துக் கொண்டு வாராநிற்கச்செய்தே 'வடமாமலை யுச்சியை' என்னுமாபோலே திருமலையில் ஏகதேச மென்னலாம் படியாய் கல்பகதரு பஹுசாகமாகப் பணைத்துப் பூத்தாற்போலே நிற்கிற அழகருடைய ஸௌந்தர்யத்தை யநுபவிக்கிறார்" என்றிறே அருளிச் செய்தது.

பேரருளாளனைப் பர்வதத்தின் ஏகதேசமாகச் சொன்னால் அதற்கு ஏற்ற லக்ஷணங்கள் அமைந்திருக்க வேணுமே யென்ன, அவ்வமைப்பை ரூபகச்சாயையிலே அருளிச் செய்கிறார் [பாணிபாதேத்யாதி] தாமரைக்காடும் தமாலவ்ருக்ஷங்களுமாயிறே மலை முகடிருப்பது; "கைவண்ணம் தாமரை வாய் கமலம் போலும் கண்ணிணையு மரவிந்த மடியுமஃதே' என்னும்படியான பேரருளாளனும் திருக்கைகள், திருக்கண்கள், திருமுகம், திருவடிகள் என்னும் அவயவாபதேசத்தாலே தாமரைமலர்கள் நிறைந்து திகழ நிற்பதாலும், புஜதண்டங்களென்னும் வ்யாஜத்தாலே தமாலவ்ருக்ஷங்கள் விளங்க நிற்பதாலும், ஆக இந்த நேர்த்தியையிட்டு இவன்றன்னையே கரிகிரி ச்ருங்கமென்கிறதாய்த்து. மலைமுகடுதான் மேகஸமூஹங்களுக்கு இருப்பிடமாய்க் கொண்டும் ஸ்வபாவமாகவும் கறுத்திருக்குமிறே. *நீலமேகநிபனான பேருளாளனுக்கு அவ்வாகாரத்திலும் ஒரு குறையில்லையே. இது தோன்றவாய்த்து [ஆஞ்ஜனம்] என்றது.

[பாணீத்யாதி.] அல்லி போலே உள்ளங்கையும். இதழ்போலே விரல்களும், தாதுபோலே ரேகைகளும், விலக்ஷணமான கந்தமும், ம்ருதுவான ஸ்பர்சமும், புறவிதழ்போலே ச்யாமமான புறங்கையில் பசுமையும் ஏவமாதியான லக்ஷணங்களையுடைத்தா யிருக்கையாலே பாணியானது அம்புஜ மென்னலாம்படியிருக்குமாய்த்து. இப்படியே மேலும் கண்டு சொள்வது.

[பாஹுபிரித்யாதி.] கீழ் பாணியென்றது 'பஞ்சசாகச் சய : பாணிঃ' என்ற கோசத்தின்படி விரல்களோடே கூடி மணிக்கட்டளவான பாகத்தைச் சொல்லும். பாஹுசப்தம் புஜத்தைச் சொல்லும். தோளுக்குக் கீழ்ப்பட்ட தண்டாகாரமான பாகத்தைச் சொல்லும். இவன் தோள் நிழலிலே ஒதுங்கினவர்களுக்கு மதிளுக்குள்ளே யிருப்பாரைப் போலே பயம் கெட்டிருக்கலாம்படி வலியுடைத்தாய், ஒதுங்கினவர்கள் சுருங்கி நிழலே விஞ்சியிருந்து ச்ரமஹரமாயிருக்கையாலே அதிவிசால தமாலங்களாக பாஹுவை வர்ணிக்கக் கடவதிறே. "கற்பகக்காவன நற்பலதோளன்" என்று ஆழ்வார்கள் வாய்வெருவுவர்கள். "பாஹுபிঃ" என்ற பஹுவசனம் சதுர்ப்புஜத்வத்தைப்பற்ற.* அர்த்திதார்த்தபரிதான தீக்ஷிதனுக்கு இரண்டு கை போராதே. எம்பெருமான்றனக்கு ஸந்தோஷம் விஞ்சினால் "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய்" என்னும்படி அவயவங்கள் ஸஹஸ்ரசாகமாகப் பணைக்குமிறே.

இந்த ச்லோகம் முதல் "அஞ்ஜநக்ஷிதிப்ருதோ யதிநாம" என்னும் சுலோகமளவாகவுள்ள இந்த தசகம் ஸ்வாகதாவ்ருத்தம். .... .... .... (21)

त्वामुदारभुजमुन्नसमायत्कर्णपाशपरिकर्मसदंसम् ।
आयताक्षमभिजातकपोलं पारणीयति वरप्रद दृङ् मे ॥ २२ ॥

த்வாமுதாரபுஜமுந்நஸமாயத்கர்ணபாசபரிகர்மஸதம்ஸம் ।
ஆ யதாக்ஷமபிஜாதகபோலம் பாரணீயதி வரப்ரத த்ருங் மே ॥ 22 ॥

| | |
|---|---|
| ஹே வரப்ரத | ஓ வரதனே |
| மே த்ருக் | அடியேனுடைய கண்ணனது |
| உதாரபுஜம் | ஔதார்யமுள்ள பாஹுவை யுடையவனும் |
| உந்நஸம் | உந்நதமான திருமூக்கை யுடைய வனும் |
| ஆயத கர்ணபாச | நீண்டு சிறந்த செவிகளை அலங்காரமாகக் கொண்ட நல்ல |
| பரிகர்ம ஸதம்ஸம் | திருத்தோள்களையுடையவனும் |
| ஆயதாக்ஷம் | [செவியளவும்] நீண்ட திருக்கண் களையுடையவனும் |
| அபிஜாத கபோலம் | ஆபிஜாத்யம் பொருந்திய கண்ட ஸ்தலங்களை யுடையவனுமான |
| த்வாம் | உன்னை |
| பாரணீயதி | பூர்ணநுபவம் பண்ண விரும்பு கின்றது. |

*** தம்முடைய திருக்கண்களானவை பேரருளாளனுடைய ஒவ்வொரு திவ்யாவயவத்திலும் ஈடு பட்டு அவ்வழகு பொலிந்து நின்ற அவனை அப்படியே விளாக்குலைகொள்ளப் பாரித்திருக்கின்ற படியை அருளிச்செய்கிறார் இதில்.

[உதாரபுஜம்] "உதாரோ தாத்ருமஹதோ:" என்று சொன்னனிறே அமரன். "அலம்புரிந்த நெடுந்தடக்கை" என்னுமாபோலே அர்த்திகள் அலம் என்னும்படி இட்டு நீண்ட கையன். கொடுக் கையே வினைநீராக வளர்ந்த கை அர்த்திகளிருக்குமிடமளவும் செல்ல நீண்ட கை. "பாஹுச்சாயாம வஷ்டப்த:"என்கிறபடியே லோக மடங்க ஒதுங்கிலும் விஞ்சியிருக்கும்படியிறே புஜத்தின் பெருமை.

[உந்நஸம்] "மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ" வென்று நித்யஸந்தேஹ ஜநகமாயிறே*கோலநீள் கொடிமூக்கிருப்பது. உபோஷிதனுயிருந்தவன் வயிறுரவுண்பதையிறே பாரணையென்பது. "உண்ணுநாள் பசியாவதொன்றில்லை" என்றிருக்குமாழ்வான் "கண்டு கொண்டென் கண்ணிணையாரக் களித்து" என்கிறபடியே எம்பெருமானுடைய திருமேனியை ஸேவிக்கப்பெறும் நாளை த்வாதசியாகவும் அது பெறாத நாளை "அன்றெனக்கவை பட்டினி நாளே" என்கிறபடியே ஏகாதசியாகவும் திருவுள்ளம்பற்றியிருக்கிறராகையாலே நித்யத்வாதசியாகவேணுமென்று பாரிக்கிறார். (22)

**नीलमेघनिभमञ्जनपुञ्जश्यामकुन्तलमनन्तशयं त्वाम् ।**
**अब्जपाणिपदमम्बुजनेत्रं नेत्रसात्कुरु करीश ! सदा मे ॥ २३ ॥**

**நீலமேகநிபமஞ்ஜநபுஞ்ஜ ச்யாமகுந்தளமநந்தசயம் த்வாம் ।**
**அப்ஜபாணிபதமம்புஜநேத்ரம் நேத்ரஸாத்குரு கரீச ஸதாமே ॥ 23 ॥**

| | |
|---|---|
| ஹே கரீச | ஓ ஹஸ்திகிரி நாதனே! |
| நீலமேக நிபம் | கருமுகில் போன்றவனாய் |
| அஞ்ஜந புஞ்ஜ ச்யாம குந்தலம் | மைவண்ண நறுங் குஞ்சிக் குழலை யுடையவனாய் |
| அநந்தசயம் | திருவனந்தாழ்வான் மீது பள்ளி கொள்பவனாய் |
| அப்ஜ பாணி பதம் | தாமரை போன்ற திருக் கைகளையும், திருவடிகளையும் உடையவனாய் |
| அம்புஜ நேத்ரம் | தாமரை போன்ற திருக்கண்களை யுடையவனான |
| த்வாம் | உன்னை |
| ஸதா | எப்போதும் |
| மே | அடியேனுக்கு |
| நேத்ரஸாத் குரு | சக்ஷுர்விஷய மாக்கியருள். |

*** "த்வாம் மே த்ருக் பாரணீயதி" என்று கீழ் அருளிச் செய்ததையே விசததமமாக அருளிச் செய்கிறார். *கார்காலத்தெழுகின்ற கார்முகில்போல் வண்ணனாய், *மைவண்ண நறுங்குஞ்சி குழல் பின் தாழத் திகழுமவனாய், *ஐவாயரவணைமேல் ஆதிப்பெருமானாய், *விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை பாதம் கைகள் கண்கள் விளங்குமவனாய்ப் பேரருளாளப் பெருமானாயிருக்கிற நீ *அல்லு நன்பகலு மிடை வீடின்றி நல்கியென்னை விடாதே "காவிபோல் வண்ணர்வந்து என் கண்ணுளே தோன்றினரே" என்னும்படி *கண்ணுள் நின்றகலாதருள வேணுமென்கிறார்.

[நீலமேக நிபம்] "முகிலுருவம் எம்மடிகளுருவம் தானே."—தாபத்ரயா துரர்க்குத் தாப ஹரமாய் விரஹதாபாதுரர்க்கு அந்தத் தாபத்தையு மாற்றக் கடவதாயிருக்கும் வடிவிறே.

[அஞ்ஜநபுஞ்ஜேத்யாதி:] *நீலமேகநிபமென்கிறவடிவும் ஸ்படிகமென்னும்படியாய்த்து திருக்குழலின் இருட்சியிருந்தபடி. "ஒண்சுடர்க்கற்றை" என்று சொல்லுகிற தேஜோரூபமான திருமேனியில் நின்றும் கிளம்பினதொரு மைபோலே யிருக்கை. இத்திருக்குழலை ஸேவிக்கப்பெற்றவர்களுக்கு ஸர்வமும் ப்ரகாசிக்கும்படி ஸித்தாஞ்ஜனமாயிருக்கை.

*பிங்கலஜடோ தேவ:* என்றும் 'ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ' என்றும் சொல்லுகிற ப்ரஹ்மருத்ரர்களின் மயிர்போலே கண்கொண்டு காணவொண்ணாதாயிருக்கை யன்றிக்கே 'சுரியும் பல் கருங்குஞ்சி யெங்கள் சுடர் முடியண்ணல் தோற்றமே' என்கிறபடியே கண்டவர்கள் கண்களிலே அஞ்ஜன மெழுதினாற்போலே குளிர்ந்து ச்யாமளமாயிருக்கை.

[அனந்தசயம்] இவ்விடத்துக்குப் பொருள் சொல்லுவார் "அனந்த: சயே யஸ்யஸ:" என்று வ்யதிகரண பஹுவ்ரீஹியைக்கொண்டு ,'திருக்கையிலே திருவனந்தாழ்வானை யுடையவன்' என்று சொல்லிப் போருவது ஒன்றுண்டு. இவ்வர்த்தம் ஆழ்வான் திருவுள்ளத்திற்கு இசைந்ததுமன்று; ஸங்கதமுமன்று; பெரியோர் ஆதரிப்பதுமன்று ; *அரவணை மேற்பள்ளிகொண்ட முகில்வண்ணனென்னுமிவ் வர்த்தமே சாலப்பொருந்தும். "அத்தியூரான் புள்ளையூர்வான், அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான்" என்று பூதத்தாழ்வாரும் "பணிபதி சயநீயாத் உத்தித: த்வம் ப்ரபாதே" என்று வேதாந்த வாரியரும் அருளிச்செய்துள்ள விடங்களுக்குரிய நிர்வாஹம் இவ்விடத்திற்கு மொக்கும்.

[அப்ஜபாணிபதம் அம்புஜநேத்ரம்] பாணி பாத நேத்ரமென்னும் மூன்று திவ்யாவயவங்களுக்கும் ஒரு தாமரையையே ஒப்புச்சொல்லுகிறாராகில் ஒரு ஸமஸ்தபதமாகவே ப்ரயுக்தமாகலாமே ; உபமான வ்யக்தி பிந்நபிந்நமாயிருந்தாலன்றோ பதபேதம் பண்ணவேணும். "அப்ஜபாணி பதலோசந ரம்யம்" என்றாற்போலே சொல்ல வடுக்குமே ; ஒரு அர்த்தத்தையே 'அப்ஜ' என்றும் 'அம்புஜ' என்றும் பிந்நபதங்களாலே சொல்லுவதில் குண விசேஷமென்? என்று சிலர் கேட்பர், "கண்ணும் வாயும் கைத்தலமுமடியிணையும் கமல வண்ணம்" என்று சேர அநுபவித்தவர் தாமேயிறே ஒரு போக்யதாநுஸந்தான காஷ்டையிலே நின்ற வாறே "கைவண்ணம் தாமரை, வாய் கமலம் போலும், கண்ணிணையு மரவிந்தம், அடியும.்.தே" என்று வாய்வெருவிற்று. இவ்வாழ்வான் தாமும் ஸுந்தர பாஹுஸ்தவத்திலே "அப்ஜ பாதமரவிந்தலோசநம் பத்மபாணிதலம்" என்று வாய்வெருவினபடி கண்டீரே.

[த்வம் ஸதா மே நேத்ரஸாத்குரு] "அவ்வண்ணத்தவர் நிலைமைகண்டும் தோழீ! அவரை நாம் தேவரென்றஞ்சினோமே" என்னும்படி அஞ்சி அகலவேண்டாதே *கண்டுகொண்டேன் கண்ணிணை ஆரக் களிக்கும்படி ஸதா தர்சநம் தந்தருள வேணுமென்கிறார். .... .... (23)

**त्वक्च दृक्च निपिपासति जिह्वा विह्वला श्रवणवत् परवृत्तौ ।**
**नासिका त्वयि करीश तथेति प्राप्नुयां कथमिमां स्विदवस्थाम् ॥ २४ ॥**

**த்வக் ச த்ருக் ச நிபிபாஸதி ஜிஹ்வா விஹ்வலா ச்ரவணவத் பரவ்ருத்தெள ।**
**நாஸிகா த்வயி கரீச ததேதி ப்ராப்நுயாம் கதமிமாம் ஸ்விதவஸ்தாம் ॥ 24 ॥**

| | |
|---|---|
| ஹே கரீச | ஒ ஹஸ்திகிரி நாதனே! |
| த்வக் ச | த்வகிந்த்ரியமும் |
| த்ருக் ச | சக்ஷுரிந்த்ரியமும் |
| நிபிபாஸதி | மிகவும் பானம் பண்ண விரும்புகின்றது; |
| ஜிஹ்வா | ரஸநேந்த்ரியமானது |
| ச்ரவணவத் | ச்ரோத்ரேந்த்ரியத்தோடொப்ப |
| பர வ்ருத்தெள | இந்த்ரியாந்தரங்களின் வியாபாரத்தில் |
| விஹ்வலா | சாபல்யமுடையதாய் |
| [பவதி] | ஆகிறது. |
| நாஸிகா | க்ராணேந்த்ரியமும் |
| ததா | அப்படியே இந்த்ரியாந்தர வ்ருத்தியை விரும்பி நிற்கிறது. |
| இதி இமாம் அவஸ்தாம் | என்று சொல்லக்கூடிய [முக்தி தசையில் விளையக்கூடிய] இந்த அவஸ்தையை |
| அஹம் | அடியேன் [இந்த விபூதியிலே] |

| | | | |
|---|---|---|---|
| த்வயி | உன் விஷயத்திலே | கதம்ஸ்வித் ப்ராப்நுயாம் | எங்ஙனேயோ அடைந்திடுவேன்? |

* * * நம்மாழ்வார் *செய்ய தாமரைக் கண்ணனிலே "தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்ப தென்று கொல் கண்கள்" என்ற கண்விடாய் மாத்திரமே யன்றிக்கே மற்றை இந்திரியங்களும் விடாய்த்து ஓரிந்த்ரியத்தினுடைய வ்ருத்தியை மற்றை இந்த்ரியமாசைப்பட்டும், மற்றை இந்த்ரியங்களினுடைய வ்ருத்தியை மற்றை இந்த்ரியமாசைப்பட்டும், அவை யெல்லாவற்றினுடைய வ்ருத்தியையும் தாம் ஆசைப்பட்டும், தம்மிலும் விடாய்த்த கரணங்களும், கரணங்களிலும் விடாய்த்த தாமுமாய்; க்ஷாம காலத்தில் பஹுகுடும்பியானவன் தன் பசிக்கு ஆற்றமாட்டாதே ப்ரஜைகள் பசிக்கு ஆற்றமாட்டாதே அவற்றின் வாயில் சோற்றைத் தான் பறித்து ஜீவிப்பது, தன் வாயில் சோற்றை அவை பறித்து ஜீவிப்பதாய் 'என் பசிக்கு என் செய்வேன்? என் ப்ரஜைகளின் பசிக்கு என் செய்வேன்?' என்று படுமா போலே தாமும் தம்முடைய கரண க்ராமமுமாக நோவுபட்டுக் கூப்பிட்டார்—* முடியானேயில். இப்படி இந்த்ரியங்கள் தனித்தனியே சேதநஸமாதியாலே விடாய்க்கும்படியான அவஸ்தைதான் போஜனத்திற்கு மிக்க பசிபோலே பகவதநுபவத்திற்கு மிகவும் பாங்கான ஸாமக்ரியாயிருக்கும். ஓரிந்த்ரியம் மற்றோரிந்த்ரியத்தின் வ்ருத்தியிலே உற்று விஹ்வலமாம்படியான அவஸ்தை விண்ணுளார்க்கும் *விண்ணுளாரினும் சீரியரான ஆழ்வார்க்கும் பகவதிச்சையாலே கூடினபோலே அடியேனுக்கும் கூடுவது எங்ஙனேயோ? என்று — அவ்வவஸ்தையிலே தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை அருளிச்செய்கிறாராய்த்து இந்த ச்லோகத்தில்.

"நீலமேகநிபம் த்வாம் நேத்ரஸாத்குரு ஸதா மே" என்று கீழ் ச்லோகத்தில் ப்ரார்த்தித்த ஸதா தர்சநமானது இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிற அவஸ்தை பிறவாதவன்று கடிக்கமாட்டாதாகையாலும், கடித்தாலும் ரஸிக்கமாட்டாதாகையாலும் அந்த அவஸ்தை தன்னையும் உத்தேச்யமான கைங்கர்யத்தோபாதி பகவத்ஸந்நிதியிலே ப்ரார்த்திக்கிறாராய்த்து.

(த்வக்ச த்ருக்ச-இத்யாதி) இந்த ச்லோகத்திலே 'ப்ராப்நுயாம்' என்பது ப்ரதானக்ரியையாய் 'நிபிபாஸதி', 'விஹ்வலா' என்னுமிவை அவாந்தர க்ரியையாயிருக்கும். "இப்படிப்பட்டதொரு அவஸ்தையை அடியேன் எங்ஙனே அடைந்திடுவேன்?" என்கிறவிது ப்ரதான வாக்யம். எப்படிப்பட்ட அவஸ்தை என்றால், அந்த அவஸ்தையின் ஆகாரத்தைச் சொல்லுகிற முதல் மூன்று பாதங்களிலுள்ள க்ரியைகள் அவாந்தரவாக்யார்த்தம்.

த்வகிந்த்ரியத்திற்கு வ்ருத்தி-தொடுகையும் தழுவுதலும். சக்ஷுரிந்த்ரியத்திற்கு வ்ருத்தி-தர்சநம். ரஸநேந்த்ரியத்திற்கு வ்ருத்தி—ஆஸ்வாதநம். ச்ரவணேந்த்ரியத்திற்கு வ்ருத்தி—சப்தஸாக்ஷாத்காரம். க்ராணேந்த்ரியத்திற்கு வ்ருத்தி ஆக்ராணம்-என்றிப் புடைகளிலே ஓரோ-இந்த்ரியத்திற்கு ஓரோ வ்ருத்திகள் வ்யவஸ்திதமாயிருக்கும்படியான நிலைமை குலைந்து ஒரு இந்த்ரியம் மற்றோரிந்த்ரியத்தின் வ்ருத்தியை ஆசைப்படுவதாய் அலமந்து பெருமிடறுசெய்து கூப்பிடும்படியான பக்திப்பெருங்காதலின் உந்மஸ்தக தசையை அடியேன் அடைந்தேனும்படி அருள் செய்திடாய் என்கிறார். ... ... (24)

**आधिराज्यमधिकं भुवनानाम् ईश ते पिशुनयन्किल मौलिः।**
**चूलिकामणिसहस्रमरीचेः हस्तिभूषण भवत्युदयाद्रिः॥ २५॥**

**ஆதிராஜ்யமதிகம் புவநாநாம் ஈச தே பிசுநயந் கில மௌலி:।**
**சூலிகாமணிஸஹஸ்ரமரீசே: ஹஸ்திபூஷண பவத்யுதயாத்ரி:॥ 25॥**

| | | | |
|---|---|---|---|
| ஹஸ்திபூஷண | ஹஸ்திகிரிக்கு அலங்காரமாயுள்ள | பிசுநயந் | கோட்சொல்லாநின்ற |
| ஹே ஈச | தேவாதிராஜனே! | தே மௌலி: | உன்னுடைய திருவபிஷேகமானது |
| புவநாநாம் | உலகங்கட்கெல்லாம் | சூலிகா மணி ஸஹஸ்ர-மரீசே: | [தன்] சிகரத்திலேயுள்ள ரத்நமாகிற ஸூர்யனுக்கு |
| ஆதிராஜ்யம் | [நீ] அதிராஜனயிருக்கும் தன்மையை | உதயாத்ரி: | உதயபர்வதமாக |
| அதிகம் | மிகவும் | பவதி கில | ஆகாநின்றதன்றோ. |

இந்த ச்லோகம் முதலாக, திருமுடி தொடங்கித் திருவடியீருக அநுபவித்து இனியராகிருர்.

இந்த ச்லோகத்திலே திருவபிஷேகத்தின் பெருமையை அநுபவித்துப் பேசுகிருர். (ஈச) திருவபிஷேகத்திலே கண்வைத்தார் சொல்லும் பாசுரம் இதுவிறே-ஈசத்வம் தோற்றவிறே முடிதரிப்பது. 'கண்டவாற்ருல் தனதேயுலகென நின்ருன்'' மூவுலகங்கட்கு முரியானிவனென்னுமிடம் ஒரு ப்ரமாணம் கொண்டு பேசவேணுமோ தான் ? திருவபிஷேகமும் தானுமாய் நிற்கிற நிலையைக் கண்டவாறே அனைத்துலகுமனைத் துயிரும் இவனொருத்தனுக்கே உரிய தென்னும்படியிறே யிருப்பது.

(சூளிகாமணீத்யாதி) இப்படி உபயவிபூதிஸாம்ராஜ்ய ஸூசகமாக விளங்குகின்ற திருவபிஷேகத்தை ஒரு பர்வதமாக உல்லேகிக்கிருர். "பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு'' என்று திருவபிஷேகத்தைப் பர்வதமென்னக் கற்பித்தவர் ஆழ்வாராய்த்து. இந்த கிரீட பர்வதம் எதற்கு உறுப்பாகிறதென்ன அருளிச்செய்கிருர். (சூளிகாமணி ஸஹஸ்ரமரீசே: உத்யாத்ரி: பவதி) நுனியிலே அழுத்தின ரத்னம் யாதொன்றுண்டு, அது ஒரு ஸூர்யன்போலே யிராநின்றது. அந்த ஸூர்யனுக்கு உதயபர்வதமாய்த்துத் திருவபிஷேகம். *கதிராயிரமிரவிகலந்தெரித்தாலொத்த நீண்முடியன் என்னுமிடம் சொல்லுகிறது.

ஆக இந்த ச்லோகத்தாலே சொல்லிற்ருய்த்தது ;—பேரருளாளனுடைய திருவபிஷேகம் ''இவனே ஸர்வலோகைகநாதன்'' என்னுமிடத்தை விளங்கச் செய்பவற்ருய் வீறுபெற்றிராநின்ற தென்பதும், அதுதான் தேஜ:புஞ்ஜவிஸ்தாரங்களாலே ஒரு பர்வதத்தோடொப்புச் சொல்லப்போருமதாய், சிகாரத்நம்* உதய பருப்பதத்தின்மேல் விரியுங்கதிரே போன்றதாய் விளங்குகின்ற தென்பதுமாம். ... ... ... ... ... ... (25)

**उद्धरत्युपरि भक्तजनानिति ऊर्ध्वताश्रयणसूचितशक्तिम् ।**
**ऊर्ध्वपुण्ड्रतिलकं बहुमानात् किं बिभर्षि वरद स्वललाटे ॥ २६ ॥**

**உத்தரத்யுபரி பக்தஜநாநிதி ஊர்த்வதாச்ரயணஸூசிதசக்திம் ।**
**ஊர்த்வபுண்ட்ரதிலகம் பஹுமாநாத் கிம் பிபர்ஷி வரத ஸ்வலலாடே ॥ 26 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹேவரத | ஓ வரதனே ! | ஊர்த்வதாச்ரயணஸூசித சக்திம் | ஊர்த்வாகார விசிஷ்டமா யிருக்கையினல் ஸூசிப்பிக்கப் பட்ட சக்தியையுடைய |
| அயம் ஊர்த்வ புண்ட்ர திலக: | இந்த ஊர்த்வ புண்ட்ர திலகமானது | ஊர்த்வபுண்ட்ர திலகம் | ஊர்த்வபுண்ட்ர திலகத்தை |
| பக்த ஜநாந் | பகவத் பக்தர்களை | ஸ்வலலாடே | தன் திருநெற்றியிலே |
| உபரி உத்தாதி | ஊர்த்வகதியை அடைவிக்கின்றது | பஹுமாநாத் கிம் பிபர்ஷி | ['நம் அடியாருகந்தது' என்கிற] ப்ரீதி விசேஷத்தாலேயோ-தரியா நின்ருய். |
| இதி | என்று | | |

*** கீழ் திருவபிஷேகத்தினழகிலே ஈடுபட்டு அதுதன்னிலே கால்தாழ்ந்து அதனைவிட்டுப் போரமாட்டாதே நிற்க, அத் திருவபிஷேகத்தின் ஒளியானது ஊர்த்வ புண்ட்ரதிலகத்தளவும் போர வீசிற்று; வீசவே, அத்திலகத்திலே கண்வைத்து அநுபவிக்கிருர். (உத்தரதீத்யாதி) ஊர்த்வ புண்ட்ர தாரணமின்றியிலே அநுஷ்டிக்கப் படுகிற ஸ்நானஸந்த்யாவந்தனுதி நித்யநைமித்திககருமங்கள் பஸ்மாஹுதி போலே விபலமாயொழியுமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே, கர்மவச்யரான சேதநர்க்குத்தான் கர்மாங்கமான ஊர்த்வபுண்ட்ர தாரணம் விதிப்ராப்தம். கேவலம் கர்மஸாக்ஷியான எம்பெருமான் நித்ய நைமித்திகாதி கர்மமொன்றும் செய்யக்கடவனல்லனே; அவனுக்கு ஊர்த்வபுண்ட்ரதாரணம் ஆவச்யகமன்றிறே. ஆயிருக்கச் செய்தேயும் ஊர்த்வபுண்ட்ர திலகம் தரித்துக்கொண்டிருப்பதற்கு ஒரு ஹேது சொல்லவேணுமே; திருநெற்றிக்கு அலங்காரார்த்தமாகச் சாத்திக்கொண்டிரா நின்ருனென்று சொல்லு

வதிற் காட்டிலும் ஸ்வாதுதமமானதொரு ஹேது அருளிச்செய்ய விரும்பி "பஹுமாநாத் கிம்" என்கிறார். 'அடியாருகந்தது ஏதாகிலுமாம் ; அதுவே நமக்கு உபாதேயம்' என்று கொண்டோ ? என்கிறார்.

புண்ட்ரதிலகம் ஊர்த்வாகார விசிஷ்டமாயிருக்கு மது ஒரு அர்த்தவிசேஷத்திற்கு ஸூசகமாயிரா நின்றதென்கிறார்—பூர்வார்த்தத்தாலே! "ஊர்த்வகதி ப்ராபகம் புண்ட்ரம்—ஊர்த்வபுண்ட்ரம்" என்றிங்ஙனே சாகபார்த்திவஸமாஸம் போல் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்தபடி.

இந்த ஊர்த்வபுண்ட்ர தாரணத்தால் உனக்கு வருவதொரு பலனில்லையே. இதுதான் உனக்கு அகரணே ப்ரத்யவாயாவஹமு மன்று; கைங்கர்யரூபேண கர்த்தவ்யமு மன்று; சப்தசக்தியை விமர்சிக்குமிடத்தில் உனக்கிது ப்ராப்தமு மன்று. ஆயிருக்கச் செய்தேயும் இதனை நீ தரிப்பது—'அடியாருகந்ததென்கிற திருவுள்ளத்தாலேயோ ?' என்கிறார்.

திருநெற்றி யலங்காரத்திற்குத் திலகமென்று பெயர். ... ... (26)

**कर्णिका तव करीश किमेषा कर्णभूषणमुतांसविभूषा ।**
**अंसलम्ब्यलकभूषणमाहो मानसस्य मम वा परिकर्म ॥ २७ ॥**

**கர்ணிகா தவ கரீச கிமேஷா கர்ணபூஷணமுதாம்ஸவிபூஷா ।**
**அம்ஸலம்ப்யலகபூஷணமாஹோ மாநஸஸ்ய மம வா பரிகர்ம ॥ 27 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே கரீச | ஒ ஹஸ்திகிரி நாதனே ! | அம்ஸ விபூஷா | திருத்தோள்களுக்கு அலங்காரமோ? |
| தவ | உன்னுடைய | ஆஹோ | அங்ஙனன்றிக்கே |
| ஏஷா | இந்த | அம்ஸ லம்பி அலக பூஷணம் | திருத்தோள்களில் அலையா நின்ற திருக்குழல்களுக்கு அலங்காரமோ ? |
| கர்ணிகா | கர்ணபூஷணமானது | வா | அங்ஙனுமன்றி |
| கர்ணபூஷணம் கிம் | திருச்செவிகளுக்கு அலங்காரமோ ? | மம | அடியேனுடைய |
| உத | அல்லது | மாநஸஸ்ய பரிகர்ம | இதயத்திற்கு அலங்காரமோ ? |

* * * திருநெற்றியில் திவ்யோர்த்வபுண்ட்ர திலகத்தினழகு திருச்செவிகளில் மகரக்குழைகளினழகிலே கொண்டு மூட்ட அதனை அநுபவித்து அகம் குழைந்து மகிழ்கிறாராய்ச் செல்லுகிறது.

ஹேகரீச! தவ ஏஷா கர்ணிகா கிம் கர்ணபூஷணம்? உத அம்ஸவிபூஷா? ஆஹோ அம்ஸ லம்ப்யலக பூஷணம்? அத மம மாநஸஸ்ய பரிகர்ம வா? என்று கோடி சதுஷ்டயாவகாஹியான ஸம்சயம் தமக்கு வர்த்திக்கிற படியை அருளிச்செய்கிறார்.

கர்ணிகா கர்ணபூஷணம் கிம்?-"கஷ்டா வேதவ்யதா, கஷ்டோ நித்ய மூத்வஹநக்லம:, ச்ரவணாநாம்" என்றான் முராரி. அதாவது—குண்டலத்தால் காதுக்கு ஒரு சோபையுமில்லை ; குண்டலதாரணத்துக்காகத் தான் குத்தப்படுகிற துக்கமும், நித்யம் அந்த குண்டலங்களைச் சுமந்துகொண்டு படும் துக்கமுமேயாய்த்து காதுக்கு மிகுவது. இது இத்தனை கஷ்டப்படுவது; இந்த குண்டலத்தால் அழகு பெறுவது கபோலமாய்த்து என்றான். வஸ்துஸ்திதி இதுவே யிறே. ஆனால் இந்த உலகத்தார்படி பேருளாளன் பக்கலிலே ஒவ்வாது. 'பைவிடப்பாம்பணையான் திருக்குண்டலக் காதுகளே" என்னும்படி குண்டலமும் காதுமான சேர்த்தியழகு அந்யாத்ருசமா யிருப்பதால், இந்த *மின்னுமணி மகர குண்டலங்கள் திருச்செவிகளுக்குத்தான் அலங்காரமோ? என்கிறார்.

(உத அம்ஸவிபூஷா) திருச்செவிகள் திருத்தோளளவும் தளதளென்று தொங்கா நின்றமையால் இந்த மணிமகர குண்டலங்களாலே திருத்தோள்கள் ஏறுபெற்று விளங்குவதனால் இவை திருத்தோள்களுக்குத் தான் அலங்காரமோ? என்கிறார். "உதக்ரபீநாம்ஸ விலம்பி குண்டல..." என்று திருக்குண்டலமும் திருத்தோள்களுமான சேர்த்தியழகை ஆளவந்தாரும் அநுபவித்தாரிறே.

(ஆஹோ அம்ஸலம்ப்யலகபூஷணம்) "மொய்ய நீள்குழல் தாழ்ந்த தோள்களும்" என்றும் "களி வண்டெங்கும் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள் மேல் மிளிர நின்று விளையாட" என்றும் "மைவண்ணநறுங்குஞ்சி குழல் பின் தாழ" என்றும் சொல்லுகிறபடியே திருத்தோள்களின் மேலே உலாவி யலையுமே திருக்குழல்கள்; "குழல் மின் தாழ மகரம்சேர் குழை இருபாடிலங்கியாட" என்று இத்திரு மகரக் குழைகளுக்கும் திருக்குழல்களுக்கும் ஒரு சேர்த்தியழகு அநுஸந்தித்துப்போருவதுண்டிறே. அதை அநுஸந்தித்து, இக் குண்டலங்கள் திருத்தோள்களில் அலையா நின்றுள்ள குழல்களுக்குத் தான் அலங் காரமோ? என்கிறார். முன்னே லலாட பர்யந்தமாய், பின்னே அம்ஸாவலம்பியாயிறே திருக்குழலிருப்பது. திருமகரக் குழைகள் திருக்குழலுக்கு ஆபரணமாயிருக்கிறதோ? திருக்குழல்தான் திருமகரக் குழை களுக்கு ஆபரணமா யிருக்கிறதோ? என்று தெரியாதபடியான பரபாகரஸமுண்டிறே அலகாவலீ மகர குண்டலங்களுக்கு.

(மாநஸஸ்ய மம வா பரிகர்ம) திருச் செவிகளும் திருக்குண்டலங்களுமான சேர்த்தியழகையும், திருத்தோள்களும் திருக்குண்டலங்களுமான சேர்த்தியழகையும், திருக்குழல்களும் திருக்குண்டலங்களு மான சேர்த்தியழகையும் அநுபவிக்க விரும்பி யிருக்கு மடியேனுடைய மனஸ்ஸுக்குத்தான் இது அலங் காரமோ? என்கிறார்.

இந்த ச்லோகத்தாலே சொல்லிற்றாய்த்தது என்னென்னில்; இந்த மகரக் குழைகளானவை தேவரீருடைய திருச் செவிகளுக்கும், திருத்தோள்களுக்கும், அவற்றில் அலையும் திருக் குழல்களுக்கும், இவற்றையெல்லாம் உன்னித்து உள்குழைந்துருகு மென்னுடைய ஹ்ருதயத்திற்கும் சோபாவஹமாயிரா நின்றன வென்கிறார்—என்று சிலர் நிர்வஹித்துப் போருவர்கள். பாதத்ரயார்த்தத்தையும் பூர்வபக்ஷ கோடியிலே யாக்கி சரமசரணார்த்தத்தை ஸித்தாந்தமாக நிர்வஹித்துப் போருவாருமுண்டு. அதாகிறது— இந்த திவ்ய குண்டலங்களால் உன்னுடைய நிருபாதிக போக்யங்களான அவயவங்களிலே ஒன்றுக்கும் அபூர்வ சோபை விளையவேண்டிற்றில்லை, "குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தி னுள்ளே, எழுவதோருரு என்னெஞ்சுள் எழும் ஆர்க்குமறிவரிதே" என்னுமா போலே—மயல் கொண்டு இருண்டு கிடக்குமென்னெஞ்சு ஒன்றுக்குமே விளக்கம் தருவதென்கிறார் என்றபடி. ... (27)

**पारिजातविटपानभितो या पुष्पसम्पदुदियात् करिनाथ।**
**तां विडम्बयति तावकबाहुषु आतता तु कटकांगदलक्ष्मीः ॥ २८ ॥**

**பாரிஜாதவிடபாநபிதோ யா புஷ்பஸம்பதுதியாத் கரிநாத ।**
**தாம் விடம்பயதி தாவகபாஹுஷு ஆததா து கடகாங்கதலக்ஷ்மீ: ॥ 28 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே கரிநாத | ஒ ஹஸ்திகிரி நாதனே ! | பாரிஜாதவிட பாந் அபித: | கல்பவ்ருக்ஷத்தின் கிளைகளைச் சுற்றி |
| தாவக பாஹுஷு | உனது புஜங்களில் | யா புஷ்பஸம் பத் உதியாத் | யாதொரு புஷ்ப சோபை யுண்டாகுமோ |
| ஆததா | பரம்பியுள்ள | தாம் | அந்த சோபையை |
| கடக அங்கத லக்ஷ்மீஸ்து | கைவளை யென்ன, தோள் வளை யென்ன இவற்றின் சோபையோ வென்றால், | விடம்பயதி | அநுகரிக்கின்றது. |

***திருக்குண்டலங்களின் அழகு திருத்தோளணிகளின் அழகிலே கொண்டு மூட்ட, அதனை அநுபவித்து இனியராகிறார்.

கீழ் ச்லோகத்தில், கர்ணிகா விஷயத்திலே தமக்கு நான்கு வகையான விசிகித்ஸைகள் விளைந்த படியைப் பேரருளாளன் திருமுன்பே விண்ணப்பம் செய்தார். அவற்றுக்கு ஸமாதானம் பெற வேணு மென்று சாலவும் பாரித்தார். அது தான் பெற்றிலர். எம்பெருமான் ஜ்ஞாநிநாம் அக்ரேஸரரான ஆழ்வானுடைய ஸம்சயங்களைப் பரிஹரிக்க எங்ஙனே வல்லவனுவன்? லஜ்ஜையாலே நிருத்தரனாய்க்

கவிழ்தலையிட்டு நிற்கவும் மாட்டாதே தோளைத் திருப்புவது, மார்பை நெறிப்பது, பீதகவாடையை உதறுவது, திருக்குழலைப் பேணுவதாய்ச் சில ஸ்ரீமத்கம்பீர சேஷ்டிதங்களைப் பண்ணினன்; "வாரிருக்கு முலைமலர்மடந்தையுறை மார்பிலே பெரியதோளிலே மயங்கி இன்புற முயங்கி என்னையு மறந்து தன்னையு மறந்ததே" என்னும்படி புத்திப்ரம்சத்தை விளைக்கவல்ல திவ்யாவயவங்களாகையாலே அவற்றிலே கண்வைத்து, கீழ்ப்பண்ணின ப்ரச்நங்களுக்கு ப்ரத்யுத்தரப்ரதீக்ஷையை மறந்து, "இதொரு தோளழகிருந்தபடியென் !" "இதொரு தோள்வளை யழகிருந்தபடியென் !" என்று அவற்றிலே ஊன்றி வர்ணிக்கத் தொடங்குகிறார்.

"அப்ஜபாணிபதம் அம்புஜநேத்ரம்" என்கிற இவ்வாழ்வானும் சிறிது ஆராய்ந்தவாறே 'என் சொன்னோமானோம் ?' என்று அநுசயித்து "அதீர்க்கம் அப்ரேமதுகம் க்ஷணோஜ்ஜ்வலம் நசோரம் அந்த:கரணஸ்ய பச்யதாம், அநுப்ஜமப்ஜம் நு கதம் நிதர்சநம் வநாத்ரிநாதஸ்ய விசாலயோர் த்ருசோ:?" என்பர். ஆனபின்பு, லௌகிகமான சில வஸ்துக்களை பகவத்விஷயத்திலே த்ருஷ்டாந்தீகரித்து ஸ்துதிக்கை யென்பது பர்யாயத: தூஷணமேயாம் என்று அத்யவஸித்து, அபூர்வமானதொரு உபமானத்தை ஸ்வபுத்தியாலே உத்ப்ரேக்ஷித்து அத்தோடொக்க வர்ணிக்கிறாராய்ச் செல்லுகிறது. அதாகிறது **அபூதோபமை**. இப்படி அபூதோபமையையிட்டு வர்ணிப்பதனால் விளைவதென்னென்னில்; வர்ணநீயவஸ்து நிஸ்ஸமாப்யதிகமென்னுமதிசயமேயாய்த்து விளங்குவது.

பேரருளாளனே ! தேவரீருடைய பாஹுக்களில் கங்கணங்களினுடையவும் கேயூரங்களினுடையவும் சோபை பரம்பி யிருக்கிறது எங்ஙனே சொல்லலாயிருந்ததென்னில்; கல்பகதருவின் சாகைகளைச் சுற்றிப் புஷ்ப ஸம்பத்து நிரம்பி யிருந்தால் எங்ஙனே அழகுபெற்றிருக்குமோ, அங்ஙனே சொல்லலாயிருந்தது காண் என்கிறார். பாரிஜாததருஸ்தானீயன் பேரருளாளன்; அந்த வ்ருக்ஷத்தின் விடபஸ்தாநே பாஹுக்கள்; விடபத்தை முட்டாக்கிட்டுக் கிடக்கிற புஷ்பங்களின் ஸ்தானே கடக அங்கதங்கள். *அர்த்திதார்த்தபரிதாநதீக்ஷிதனைப்பாரிஜாதமென்னக் குறையில்லை. *காரானை யிடர்கடிந்த கற்பகமிறே, ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்வலபாரிஜாதம் என்று முச்சந்தியும் முறையிடாநிற்கிறதிறே. பேரருளாளன் கல்பசாகியானால் அவனுடைய பாஹுக்கள் கல்பசாகையாகக் குறையில்லையிறே. *கற்பகக் காவன நற்பல தோளனிறே. திருமுழங்கைக்குக் கீழே கடக லக்ஷ்மியும் அதற்கு மேலே அங்கத லக்ஷ்மியுமாக விரவி, பாஹுதண்டங்களை ஜ்யோதிச் சக்ரம் ஆவரித்துக் கிடக்கும் நிலைமைக்கு ப்ரஸித்தோபமான மொன்று மில்லாமையாலே அபூதோபமை சொல்ல வேண்டிற்று.

இதனை அபூதோபமையாகக் கொள்ளாதே ப்ரஸித்தோபமையாகவே கொள்ளவேணு மென்பாருமுண்டு. திருவாய்மொழியில் 'சன்மம் பலபல செய்து' (3-10-1) என்ற பாட்டின் ஈட்டிலே "ஒள்வாள் தண்டு கொண்டு" என்ற விடத்திலே—"ஒரு கற்பகத்தரு பணைத்துக் கணுத்தோறு மரும்பினாற்போலே யாயிற்று வடிவும் திவ்யாயுதங்களும் சேர்ந்த சேர்த்தியிருப்பது" என்கிற ஸ்ரீஸூக்தி இந்த சுலோகத்தை அடியொற்றியதென்று கொள்ளலாம். ... ... ... ... (28)

**मथ्यमानचलफेनिलसिन्धु प्रोत्थितिक्षणदशां गमितौ ते ।**
**वक्षसि स्फुरितमौक्तिकहारे कौस्तुभश्च कमला च करीश ॥ २९ ॥**

**மத்த்யமாநசலபேநிலஸிந்து ப்ரோத்திதிக்ஷணதசாம் கமிதௌ தே।**
**வக்ஷஸி ஸ்புரிதமௌக்திகஹாரே கௌஸ்துபச் ச கமலா ச கரீச ॥ 29 ॥**

ஹே கரீச — ஓ ஹஸ்திகிரி நாதனே !

ஸ்புரித மௌக்திக ஹாரே — தளதளென்ற முக்தாஹாரத்தை யுடையதான

மத்த்யமாந சல பேநில ஸிந்து ப்ரோத்திதி — கடையப்படா நின்றும் [அதஏவ] அசையாநின்றும் நுரைகளையுடைத்தாயுமிரா நின்ற கடலில் நின்றும்

க்ஷண தசாம் — உதித்த ஸமயத்தின் அவஸ்தையை

தே வக்ஷஸி — உனது திருமார்பில்

கௌஸ்துபச் ச — ஸ்ரீகௌஸ்துபமணியும்

கமலா ச — பிராட்டியும்

கமிதௌ — அடைவிக்கப் பட்டுள்ளன.

திருத்தோள்களினழகு திருமார்பிலே கொண்டு மூட்ட, அதனழகை அநுபவிக்கிறார். நம் ஆழ்வார்களுக்கும் ஆசார்யர்களுக்கும் எம்பெருமானுடைய திவ்யாவயவங்களில், அல்லாத அவயவங்களெல்லாம் ஒரு தட்டும் திருமார்பு ஒரு தட்டுமாயிக்கும். அதுக்கடி என்னென்னில்; (வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாத சிஹ்நைஸ் தரந்தி) பரதத்வம் இன்னதென்று நிர்ணயிக்கையிலே * முயற்றி சுமந்தெழுந்த வேதாந்தங்கள் ஸ்ரீமந் நாராயணனுடைய திருமார்பிலே பிராட்டியினுடைய பாதலாக்ஷாரஸாங்கத்தைக் கண்டு 'இவனே யிறே பரதத்வமாகக் கடவன்' என்று நிர்ணயித்துக் கவலை தீருமாய்த்து. ஆகவே பரதத்வத்துக்கு ப்ரகாசகமான அவயவமிறே திருமார்வு.

(மத்த்யமாநேத்யாதி) பேரருளாளனுடைய திருமார்பிலே முக்தாஹாரங்கள் தளதளென்று விளங்குவதும், இடையே ஸ்ரீகௌஸ்துப மணியும் நாய்ச்சியாரும் திகழ்வதுமான இந்த நிலைமை எங்ஙனே வர்ணிக்கலாயிருந்ததென்றால்; பண்டொருகால் தேவர்களுக்கு ஜீவனமளிப்பதற்காகக் கடல் கடைந்தருளின காலத்திலே, அக்கடைதலாலே நுரைகள் சிளர்ந்து 'கருங்கடல்' என்னும்படியான கருநிறம் மாறி வெண்ணிறம் பெற்ற அக்கடலில் நின்றும் இந்த ஸ்ரீகௌஸ்துபமும் நாய்ச்சியாரும் தோன்றின ஸமயத்தில் நிலைமையாக தாதாத்ம்யம் சொல்லலாயிருந்த தென்கிறார்.

ஸமுத்ரஸ்தானத்திலே திருமார்வும், மதனகாலஸமுத்திதமாய் அதஏவ சஞ்சலமாயிராநின்ற நுரைகளின் ஸ்தானத்திலே - தளதளவென்ற முக்தாஹாரங்களும் அந்த நுரைகளினிடையே ஸ்ரீகௌஸ்துபமும் கமலையும் உதிக்கப்பெற்ற ஸமயதசையின் ஸ்தானத்திலே இப்போது திருமார்பிலே விளங்கும் நிலைமையும். ஆக இங்ஙனே உருவகப் படுத்தியிருக்குமிது மிகவும் பொருந்துமாறு காண்க. .... ... .... ... (29)

**अञ्जनक्षितिभृतो यदि नाम उपत्यका वरद हेममयी स्यात् ।**
**तादृशी तव विभाति तु लक्ष्मीः आम्बरी बत विडम्बितविद्युत् ॥ ३० ॥**

**அஞ்ஜநக்ஷிதிப்ருதோ யதி நாம உபத்யகா வரத ஹேமமயீ ஸ்யாத் ।**
**தாத்ருசீ தவ விபாதி து லக்ஷ்மீ : ஆம்பரீ பத விடம்பிதவித்யுத் ॥ 30 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹேவரத | வரத ராஜனே ! | உபத்யகா | தாழ்வரையானது |
| விடம்பித வித்யுத் | மின்னல்போன்ற தான | ஹேமமயீ | ஸ்வர்ண மயமாக |
| தவ ஆம்பரீ லக்ஷ்மீஸ் து | உனது பீதாம்பரசோபையோவெனில் | ஸ்யாத் யதி நாம | இருக்குமேயாகில் |
| அஞ்ஜநக்ஷிதி ப்ருதः | அஞ்சன மயமான தொரு மலையினுடைய | தாத்ருசீ | அதுபோன்றதாக |
| | | விபாதி | விளங்குகின்றது |
| | | பத ! | ஆச்சர்யம். |

* * * திருமார்பினழகு பிதகவாடையிலே கொண்டுதள்ள அதனை அனுபவிக்கிறார்; மேகச்யாமமான திருவரைக்குப் பரபாகரஸாவஹமான திருப் பீதாம்பரம் அமைந்திருக்கும் படியை அபூதோபமையாலே பேசுகிறார். மைவண்ணமானதொரு மலைக்கு ஹிரண்மயமான தொரு தாழ்வரையுண்டாகில், திருப் பீதாம்பரத்தின் சோபையை அதனோடு ஒப்பிடலாமென்கிறார். அஞ்சன பர்வதத்தின் ஸ்தானத்தில் பேரருளாளன். ஹிரண்மய ஸாநுஸ்தானத்தில் திருப்பீதாம்பரம்.

''விடம்பிதவித்யுத்'' என்ற விசேஷணம் - த்ருஷ்டாந்தகோடியிலே ''ஹேமமயீ'' என்றதற்கு அநுகுணமாகக் கிடக்கிறது; (அஞ்ஜனக்ஷிதிப்ருதः) என்றதற்கு அநுகுணமாக தார்ஷ்டாந்திகத்தில் வசநவ்யக்தியொன்றுமில்லை யாகிலும் பேரருளாளனுடைய திருவுருவ வண்ணம் கீழே சொல்லிற்றாகை யாலும், ஸுப்ரஸித்தமாகையாலும், த்ருஷ்டாந்தபலத்தாலும் ஸுவ்யக்தமாகக் கூடியதாகையாலும் இங்கே சொல்லிற்றில்லை யென்று கொள்க. ... ... ... ... (30)

**परभागमियाद्रवेस्तमिस्रा वरदाद्य त्वयि तन्निशामयामः ।**
**गमिता तव वक्त्रचित्रभानोः परभागं ननु कौन्तली तमिस्रा ॥ ३१ ॥**

**பரபாகமியாத் ரவேஸ் தமிஸ்ரா வரதாத்ய த்வயி தந்நிசாமயாமஃ ।**
**கமிதா தவ வக்த்ரசித்ரபாநோஃ பரபாகம் நநு கௌந்தலீ தமிஸ்ரா ॥ 31 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹேவரத | ஓ வரதராஜனே ! | நிசாமயாம : | காணுகின்றோம்; [எங்ஙனே யென்னில்] |
| தமிஸ்ரா | இருள் திரளானது | தவ | உன்னுடைய |
| ரவே : | ஸூர்யனுக்கு | கௌந்தலீ தமிஸ்ரா | திருக்குழற் கற்றையிலேயுள்ள இருளானது |
| பரபாகம் | பரபாகமென்னும் படியை | வக்த்ர சித்ரபாநோ : | திருமுகமண்டலமாகிற ஸூர்யனுக்கு |
| இயாத் | அடையட்டும்; | பரபாகம் கமிதா நநு | பரபாக சோபையை அடைவிக்கப் பட்டிரா நின்றதிறே. |
| தத் | அந்த நிலைமையை | | |
| அத்ய | இப்போது | | |
| த்வயி | உன்பக்கலில் | | |

***இனி சதுர்த்த தசகம் பேரருளாளனுடைய திருமுக மண்டல வர்ணநபரமாய்ச் செல்லுகிறது. திருமுகமண்டலமாகிறது - திருநெற்றி, திருப்புருவம், திருக்கண், திருமூக்கு, ..திருக்கண்ணேங்கம், திருப்பவள்நிலவு, புன்முறுவற்பெருக்கு, திவ்யகபோலம் முதலிய ஸந்நிவேசங்களமையப் பெற்றிறே யிருப்பது ; அவையெல்லாவற்றையும் வர்ணிப்பதாய்த்து இந்த தசகம்.

*கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியோடு தோள்தீண்டியான திருமுகமண்டலத்தின் வெளிச்செறிப்பும், "கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உள்கொண்ட நீல நன்னூல் தழைகொல் ?" என்று நித்யஸந்தேஹ ஜநகமான திருக்குழற் கற்றையினெழுங்தும் ஆகவிப்படி "ஸாமாநாதிகரண்யம் ஹி தேஜஸ் திமிரயோஃ குதஃ" என்ன வொண்ணுமே ஒரு சேர்த்தியாக அமைந்திருக்கும்படிக்குச் சமத்காரமாகப் பாசுரமிடுகிறார்.

ஒரு நிறத்தினுடைய ஸந்நிதானத்திலே அதற்கு ப்ரதிபடமான மற்றொரு நிறம் அமைந்திருந்து சோபித்தால் அந்த சோபை பரபாக சோபை யெனப்படும். பெருமாளுடைய கரிய திருமேனியிலே ஹிரண்ய வர்ணையான பிராட்டி திகழ்வது பரபாக சோபை. கொவ்வைக் கனிபோன்ற திருவதரத்தி னருகே மல்லிகையரும்பு போன்ற திருமுத்துக்கள் திகழ்வது பரபாக சோபை. அதி விசால தமால நிபமான பாஹுக்களிலே கனகமய கடகாங்கதங்கள் விளங்குவது பரபாக சோபை. இங்ஙனே பல காண்க. ஸூர்யனுக்கு இருள் பரபாகமென்று ஒருவரும் வ்யவஹரிப்பதில்லை. அப்படி ஒருவன் வ்யவஹரித்தாலும் அது அஸம்பத்தமாகும். பரஸ்பரம் ப்ரதித்வந்த்விகளான இரண்டு வர்ணங்களுக்கு ஸாஹசர்யம் கண்ட விடத்திலே யாய்த்து "அதுக்கு இது பரபாகமாயிராநின்றது" என்று சொல்ல வடுக்கும். சிவப்பு நிறத்தை ஒரு காலத்திலே கண்டவன் மற்றொரு காலத்திலே கறுப்பு நிறத்தைக் கண்டானாகில் அவன் "அந்தச் சிவப்புக்கு இந்தக் கறுப்பு பரபாகமாயிராநின்றது" என்று சொல்ல மாட்டான். நெஞ்சிலும் நினையான். இரண்டு வர்ணங்களையும் ஸமானகாலத்திலே ஸந்நிஹிதங்களாகக் காணுமவனே பரபாகமென்னக் கருதுவன். இப்படியான பின்பு "பாஸ்கரனுக்கு தமிஸ்ரையானது பரபாகம்." என்கிற வ்யவஹார முண்டாக ப்ரஸக்தியில்லை. ஸூர்யனுக்கும் தமிஸ்ரைக்கும் ஸாஹசர்யம் உபலப்தமாகில் அங்ஙனே வ்யவஹரிக்கக்கூடும். அது ஒருபோதும் நேராதாகையாலே அத்தகைய வ்யவஹாரம் நேராது என்பது ஸர்வ நிர்விவாதமான விஷயம். இப்படி அஸங்கடிதமான வ்யவஹாரம் ஸங்கடிதமாயிடுகவென்று ஆபத்தி பண்ணுகிறார் இந்த ச்லோகத்திலே.

(ரவேஸ் தமிஸ்ரா பராகம் இயாத்) "பகலுக்கு இரவானது பரபாகமாயிருக்கின்றது" என்கிற வ்யவஹாரம் உலகில் இல்லையேயாகிலும் அந்த வ்யவஹாரமுண்டாகலாமென்றபடி. இந்த ஆபாதநத்துக்கு நியாமகமேதென்னில் (கமிதேத்யாதி) ஆயிரம் கதிருடைய ஆதித்யனுதித்தாற்போன்றுள்ள

திருமுக மண்டலமும், காளராத்ரிகள் பல திரண்டாற்போன்றுள்ள முன்னுச்சிமயிர்க் கற்றைகளும் ப்ராப்த பரபாக பரஸ்பர ஸ்ரீயாய்க்கொண்டு உன் பக்கலிலே விளங்கக் காணுநின்றோமாகையால் பகலுக்கு இரவு பரபாகம்' என்கிற ப்ரதை பரவக்கடவதென்கிறார்.

இங்ஙனே அருளிச் செய்கிறவிவர்க்குத் திருவுள்ளக் கருத்து என்னவெனில், பேரருளாளனுடைய குந்தளங்கள் காளராத்ரிபோலே கறுத்து விளங்குகின்றனவென்பதும், திருமுக மண்டலம் கதிராயிரமிரவிபோலே ஜ்வலியா நின்றதென்பதும், இந்த முக குந்தளங்களுடைய பரபாக பரஸ்பர ஸ்ரீயானது பரமபோக்யமாயிராநின்றதென்பதும் இதனால் ஸித்திக்கும். இந்த தார்ஷ்டாந்திகமான முக குந்தளங்கள் ஸஹஸ்ராம்சு தாமிஸ்ரஸங்கிபங்களென்னுமிடத்தை த்ருடீகரிக்குமளவில் விச்ராந்தமிந்த ச்லோகம்.

இந்த ச்லோகம் முதல் 'முகமுந்நஸம்' என்கிற ச்லோகமளவுமுள்ள பத்து ச்லோகங்கள் வஸந்த மாலிகாவ்ருத்தம். ... ... ... ... ... ... (31)

**उभयोरपि पक्षयोस्तिथिर्या विषमीभावनिरासदाऽष्टमीति।**
**उपमानजसम्पदे हि सेन्दोः वरदाभूद्भवतो ललाटलक्ष्म्या ॥ ३२ ॥**

**உபயோரபி பக்ஷயோஸ் திதிர் யா விஷமீபாவநிராஸதாஷ்டமீதி !**
**உபமாநஜஸம்பதே ஹி ஸேந்தோ: வரதாபூத் பவதோ லலாடலக்ஷ்ம்யா ॥ 32 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | ஓ வரதராஜனே ! | ஸா | அந்த அஷ்டமீ திதியானது |
| உபயோ: பக்ஷயோரபி | சுக்லமும் க்ருஷ்ணமுமாகிற இரண்டு பக்ஷங்களிலுமுள்ள | இந்தோ : | [அந்த] சந்திரனுக்கு |
| | | பவத : | உன்னுடைய |
| அஷ்டமீ இதி யா திதி : | அஷ்டமி யென்கிற யாதொருதிதி யானது | லலாட லக்ஷ்ம்யா ஸஹ | திருநெற்றியின் அழகோடே |
| இந்தோ : | சந்திரனுக்கு | உபமாநஜ ஸம்பதே ச | ஒப்பிடுவதனாலுண்டாகிய செல் வத்தின் பொருட்டும் |
| விஷமீபாவ நிராஸதா | விஷமத் தன்மையைப் போக் கடிக்க வல்லதோ, | அபூத் | ஆயிற்று. |

*** (உபயோரபியாதி) சுக்லபக்ஷத்திலும் க்ருஷ்ணபக்ஷத்திலும் அஷ்டமியென்று யாதொரு திதியுண்டு; அது எப்படிப்பட்டதென்னில்; (இந்தோ: விஷமீபாவ நிராஸதா.) சந்திரனுக்கு விஷம நிலைமையைப் போக்கி ஸமநிலைமையைக் கொடுக்கவற்று. ஏற்றத் தாழ்வில்லாமல் ஸமமான அர்த்தாம் சமாயிருக்கும் தன்மை மற்றைத் திதிகளில் இல்லையிறே சந்திரனுக்கு. விஷமீபாவநிராஸதத்வம் பௌர்ணமாஸிக்கு உண்டேயாகிலும் அந்த திதியிலே உதிக்கும் சந்திரனுக்கு இருளோடே சேர்த்தியில்லாமையாலே அந்த சந்திரன் லலாட பலகத்ருஷ்டாந்தத்வே அவிவக்ஷிதன். இருளோடே சேர்த்தியையுடையவனும் ஸமநிலைமையையுடையவனுமான சந்திரனேயாய்த்து திருநெற்றிக்கு ஒப்பாகச் சொல்லத் தகுமவன். அவன் அஷ்டமீசந்திரனேயாவன். பேரருளாளனுடைய திருமுக மண்டலத்திலே அல்லன்ன குழலை அர்த்தாம்சமாகவும் அழகிய திருநுதலை அர்த்தாம்சமாகவும் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறபடி. (ஸா திதி: இத்யாதி.) அந்த அஷ்டமீ திதியானது சந்திரனுக்கு விஷமீபாவநிராஸத்தைக் கொடுப்பது மாத்திரமன்றிக்கே தேவரீருடைய திருநெற்றியோடே அவனை உபமிக்கலாம்படியான ஸம்பத்தையும் அவனுக்குத் தந்ததாய்த்து என்கிறார்.

(உபமாநஜஸம்பதே) லோகத்தில் உபமேயபதத்திற்கு ப்ரதிகோடியாக உபமாநமென்றொரு பதம் வ்யவஹரிக்கப்படுவதுண்டு; அது ஸாத்ருச்யப்ரதியோகியான வ்யக்தியைச் சொல்லும் பதமாகையாலே தர்மிவாசகம். இங்குள்ள உபமாநபதம்—'ஸத்ருசீகரணம்' என்கிற அர்த்தத்திலே பாவே ல்யுடந்தமாக நிஷ்பந்நமாகையாலே தர்மவாசகம். (உபமாநம்—ஒப்பிடுதல்) (32)

**अलकालिचिकीर्षया किलात्ता सुपरीचिक्षिषया ललाटपट्टे ।**
**सुमषी निकषीकृता भ्रुवौ ते वरद स्यादकृतत्वतस्तु नैवम् ॥ ३३ ॥**

**அலகாலிசிகீர்ஷயா கிலாத்தா ஸுபரீசிக்ஷிஷயா லலாடபட்டே ।**
**ஸுமஷீ நிகஷீக்ருதா ப்ருவௌ தே வரத ஸ்யாத் அக்ருதத்வதஸ் து நைவம் ॥ 33 ॥**

| | |
|---|---|
| ஹேவரத | ஓ வரத ராஜனே ! |
| [விதாத்ரா] | ப்ரஹ்மாவினாலே |
| ஆத்தா | கையில் எடுத்துக் கொள்ளப்பட்டதாய் |
| ஸுபரீசிக்ஷிஷயா | [அதன் கருமையை] நன்ருகப் பரீக்ஷித்துப்பார்க்க வேணுமென்ற விருப்பத்தினாலே |
| லலாடபட்டே | திருநெற்றியாகிற கற்பலகையிலே |
| நிகஷீக்ருதா | உரைக்கப்பட்ட |
| ஸுமஷீ | நல்ல மையானது |
| தே | உன்னுடைய |
| அலகாலி சிகீர்ஷயா | திருக்குழற்கற்றையை நிருமிக்கவேணுமென்கிற இச்சையினால் |
| ப்ருவௌ | புருவங்களாக |
| [அபூத்] | ஆயிற்று; |
| து | இப்படி உத்ப்ரேக்ஷிக்கலாமாயினும் |
| அக்ருதத்வதஃ | [உன்னுடைய திருமேனி]க்ருத்ரிமமன்ருகையாலே [ஸ்வயம் வ்யக்தமாகையாலே] |

ஏவம் ந ஸ்யாத் இங்ஙனே உத்ப்ரேக்ஷிக்கலாகாது.

* * * திருநெற்றியினழகை அநுபவித்த வநந்தரம் திருப்புருவ வட்டங்களினழகை அநுபவிக்கிருர். திருநெற்றியினடியிலே இரண்டிடத்திலும் அஞ்ஜனக்ருதமாய் மிகக்கனமான ரேகைகள் போன்ற திருப்புருவங்களின் அமைப்பை முந்துற முன்னம் ஒருவகையாக உல்லேகித்து, சிறிது விமர்சித்தவாறே அந்த உல்லேகம் பொருந்தாமையாலே அதுதன்னை மறுத்துரைக்கிருர்.

இந்த ச்லோகத்தில் முதலிலே 'விதாத்ரா' என்று ஒரு பதம் அத்யாஹரித்துக்கொள்ளக் கடவது. ஸர்வஸ்ரஷ்டாவான் சதுர்முகன் பேரருளாளனுடைய திருநெற்றிக்குமேலே கருங்குழல்களை ஸ்ருஷ்டிக்கப் புகுந்து அந்த குந்தலங்களுக்கு உபாதாந காரணமாகச் சிறந்த அஞ்ஜனத்தைக் கையிலே எடுத்துக்கொண்டு "இந்த அஞ்ஜனத்தின் நிறம் சிறந்ததுதானு?" என்று பரீக்ஷித்துப் பார்ப்பதற்காகத் திருநெற்றியாகிற உரைகல்லிலே இரண்டிடத்தில் தீற்றிப் பார்த்தான். அந்த மைதான் திருப்புருவங்களாக விளங்குகின்றன - என்று உல்லேகிப்பது முதல் மூன்று பாதம்.

இந்த உல்லேகத்தில், அப்ராக்ருதமாய் ஸ்வேச்சாக்ருஹீதமான பேரருளாளனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்திற்கு ஸ்ருஜ்யத்வம் தோன்றுகையாலே இந்த அநுபபத்தியைத் திருவுள்ளம்பற்றி இங்ஙனே உல்லேகிக்க வொண்ணுதென்கிருர். ஒண்ணுமைக்கு ஹேது சொல்லுகிருர் [அக்ருதத்வதஃ] என்று. திருமேனி ஒருவராலும் ஸ்ருஷ்டிக்கப்பட்டதல்லாமையாலே இந்த உத்ப்ரேக்ஷை ஒவ்வாதென்கை.

இந்த உல்லேகம் அநுபபந்நமென்று தெரிந்துவைத்து அதனை முந்துற முன்னம் வாய் விடுவானேன்? என்னில்; பேரருளாளனுடைய திருப்புருவ வட்டங்கள் ஒப்பில்லாதவை யென்னுமிடத்தை ஸ்தாபிக்க இங்ஙனே பாசுரமிட்டபடி. ஒரு வஸ்துவின் அநுபமத்வத்தை வெளியிட விரும்புமவர்கள் சாதுர்ய ப்ரபேதத்தாலே பலபல வகையாகப் பேசுவர்கள்; அவற்றுள் இங்ஙனே ஒருவகை யிருக்கும்படி. திருக்குழலை வர்ணிக்கப் புகுந்த ஆழ்வார் "கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளினுட்கொண்ட நீலநன்னூல் தழைகொல்." என்று முந்துற உத்ப்ரேக்ஷித்து, அப்போதே அது அநுபபந்நமென்று திருவுள்ளம்பற்றி 'அன்று மாயன் குழல்' என்ருரிறே. .... (33)

**श्रवसश्च दृशश्च शब्दरूपग्रहणे ते न हि जीववद्व्यवस्था ।**
**उभयोरखिलेक्षणक्षमत्वात् वरदातः श्रवणाश्रये दृशौ ते ॥ ३४ ॥**

**ச்ரவஸச் ச த்ருசச் ச சப்தரூபக்ரஹணே தே ந ஹி ஜீவவத் வ்யவஸ்தா ।**
**உபயோரகிலேக்ஷண க்ஷமத்வாத் வரதாதஃ ச்ரவணாச்ரயே த்ருசௌ தே ॥ 34 ॥**

| | |
|---|---|
| ஹே வரதாத : | ஒ வரதனே ! |
| தே | உன்னுடைய |
| ச்ரவஸச் ச | திருச்செவிக்கும் |
| த்ருசச் ச | திருக்கண்ணுக்கும் |
| சப்த ரூப க்ரஹணே | சப்தத்தையும் ரூபத்தையும் க்ரகஹிக்கும் விஷயத்தில் |
| ஜீவவத் | ஜீவாத்மாவுக்குப் போல |
| வ்யவஸ்தா ந ஹி | ['இன்ன இந்த்ரியம் இன்ன குணத்தைத் தான் க்ரஹிக்கவற்று' என்கிற] வ்யவஸ்தை இல்லையன்றோ ; |
| உபயோ: | அந்த இரண்டு இந்த்ரியங்களும் |
| அகிலேக்ஷண க்ஷமத்வாத் | எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷிப்பதில் ஸமர்த்தங்களாகையாலே |
| தே | உன்னுடைய |
| த்ருசௌ | திருக்கண்களானவை |
| ச்ரவண ஆச்ரயே | திருச்செவிகளை ஆச்ரயமாகவுடையனவாயின. |

* * * பேரருளாளனுடைய திருக்கண்களின் பெருமையை விசித்ர வைகரியாலே வருணிக்கிறாராய்ச் செல்லுகிறது. "காமம் கர்ணாந்தவிச்ராந்தே விசாலே தஸ்ய லோசநே" என்று ஸாமாந்ய புருஷர்களுக்கு இருக்குமது பரம புருஷனுக்கு சதகுணிதமாயிறே யிருப்பது. திருக்கண்கள் திருச்செவியளவும் நீண்டு விளங்கும்படியை வருணிக்கப்புகுந்தவர்கள் தம் தம் புத்தி வைசித்திரியத்திற்கு ஏற்ப ஓரோ வகையாக வருணிப்பர்கள். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே "க்ருபயா பரயா கரிஷ்யமாணே" என்கிற ச்லோகத்திலே ஒரு வகையாக வருணித்தார் ; ஆழ்வானுடைய புத்தி சமத்காரம் மற்றொரு படியாகப் பெருகுகின்றது இங்கே.

ஜீவாத்மாக்களினுடைய இந்த்ரியங்களுக்கு விஷயவ்யவஸ்தையுண்டு ; சக்ஷுரிந்த்ரியத்திற்கு காண்பதொன்றிலே ஸாமர்த்தியம் ; ச்ரோத்ரேந்த்ரியத்திற்குக் கேட்பதொன்றிலே ஸாமர்த்தியம் என்றிப்படி ப்ரஸித்தமாயுள்ளது. ஒரு இந்த்ரியத்தின் சக்தி மற்றோரிந்த்ரியத்திற்குக் கூடுவதில்லை. அது கூடுவது முக்திதசையிலே பகவத்ஸங்கல்பத்தாலேயாய்த்து. இங்ஙனே ஜீவாத்மாக்களுக்குள்ள வ்யவஸ்தை பரமாத்மாவுக்கு இல்லை ; * தூது செய்கண்கள் கொண்டொன்று பேசித் தூமொழியிசைகள் கொண்டொன்று நோக்கி * (திருவாய்மொழி.) என்னும்படியிறே எம்பெருமான் படியிருப்பது.

* பச்யத்யசக்ஷுஸ் ஸ ச்ருணோத்யகர்ண: * என்றுமிறே ஓதிக்கிடக்கிறது. ஆகையாலே 'ச்ரோத்ரமேதான் சப்தத்தை க்ரஹிக்கக் கடவது, நயனமேதான் ரூபத்தை க்ரஹிக்கக் கடவது' என்கிற நியமமில்லையாய்த்து எம்பெருமானுக்கு.

[உபயோ: அகிலேக்ஷண க்ஷமத்வாத்] நயனச்ரவணங்களிரண்டும் ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கவற்றாகையாலே யென்கை. எம்பெருமானுடைய ஸகலேந்திரியங்களும் அகிலேக்ஷணக்ஷமமாயிருக்க * உபயோரகிலேக்ஷணக்ஷமத்வாத் * என்று நயனச்ரவணங்களிரண்டை மாத்திரம் இங்கே எடுத்துக் கூறியது, ப்ரக்ருதத்தில் இவ்விரண்டுக்குமே விவக்ஷையுள்ளதாகையாலே. திருக்கண்கள் திருச்செவியளவும் நீண்டிருக்கும்படிக்கு ஹேதூபபாதனம் பண்ணுகிறவித்தனையேயிறே இங்கு ப்ரஸக்தம். ஆகவே உபயோ: என்றது.

[தே த்ருசௌ ச்ரவணாச்ரயே] இந்திரியங்களுக்கு விஷயவ்யவஸ்தை உண்டாகிலன்றோ அவ்வவ இந்திரியங்கள் தந்தமக்கடைத்த ஸ்தானங்களிலே யிருக்கவேணும் ; அப்படிப்பட்ட வ்யவஸ்தையுள்ளது ஜீவாத்மாக்களுக்கேயாய் பரமாத்மாவுக்கு இல்லாமையாலே ஸ்தாநநியமமின்றிக்கே ஒன்றையொன்று ஆச்ரயித்திருக்கக் குறையில்லையிறே. நயனச்ரவணங்களுக்கு க்ராஹ்ய விஷய வ்யவஸ்தை யில்லாமையாலே திருக்கண்கள் திருச்செவிகளின் ஸ்தானத்தையும் விளாக்குலை கொண்டிராநின்றனவென்றதாயிற்று. வரதாத:! என்றது வரதாத்ரு சப்தத்தின் ஸம்புத்தி. ... .... (34)

**करुणारसवाहिवीक्षणोर्मेः वरद प्रेममयप्रवाहभाजः ।**
**ततीरवनावली भ्रुवौ दृक्चलसिन्धोस्तव नासिकेव सेतुः ॥ ३५॥**

**கருணாரஸவாஹிவீக்ஷணோர்மே: வரத ப்ரேமமயப்ரவாஹபாஜ: ।**
**தததீரவநாவலீ ப்ருவௌ த்ருக் சலஸிந்தோஸ் தவ நாஸிகேவ ஸேது: ॥ 35 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| கருணாரஸவாஹி வீக்ஷணோர்மே: | க்ருபாரஸத்தைப்பெருக்கா நின்றகடாக்ஷமாகிற அலைகளையுடைத்தாயும் |
| ப்ரேமமய ப்ரவாஹ பாஜ: | ப்ரணய ரூபமான ப்ரவாஹத்தை யுடைத்தானதாயு மிருக்கிற |
| தவ த்ருக் சலஸிந்தோ: | உன் திருக்கண்களாகிற அசையும் கடலுக்கு, |
| ப்ருவௌ | திருப்புருவங்களானவை |
| தத தீர வநஆவளீ இவ | பரம்பியதாய்க் கரையிலுள்ளதான சோலை போலும் ; |
| நாஸிகா | திரு மூக்கானது |
| ஸேதுரிவ | அணை போலும். |

* * * திருமூக்கினழகை அநுபவிக்கிறார். ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே திருப்புருவ வட்டங்களிலும் செல்லுகிறார். [தவ ப்ருவௌ த்ருக்சலஸிந்தோ: ததநீரவநாவலீ இவ; நாஸிகா ஸேதுரிவ] பேரருளாளனுடைய திருக்கண்கள் ஆச்ரிதவாத்ஸல்யாதிசயத்தாலே எப்போதும் அலைபாயாநின்று கொண்டிருப்பதால் 'அலையெறிகின்ற கடல்தானோ இது, என்னும்படியா யிருக்கின்றன. அத் திருக்கண்களின் மேலே திருப்புருவ வட்டங்கள்—'கடற்கரையிலே இருக்கக் கடவ சோலைச் செறிவோ!' என்னும்படியிருக்கின்றன. இரண்டு திருக்கண்களுக்கும் நடுவே 'மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ?' என்று நித்யஸந்தேஹஜநகமான கோலநீள் கொடிமூக்கு அமைந்திருப்பதானது—கடலிடையே கட்டிய அணைதானோ! என்னும்படியாயிராநின்றதென்கிறார்.

திருக்கண்களை ஸமுத்ரமாக ரூபணம் பண்ணினபடிக்கு அமைய இரண்டு விசேஷணமிடுகிறார் பூர்வார்த்தத்தில் கருணாரஸேத்யாதி. "நாஸிகைவ ஸேது:" என்றும் ஓதுவர்கள். ... (35)

विभवं विवृणोति विस्तृणीते रुचमाविष्कुरुते कृपामपाराम् ।
अभिवर्षति हर्षमार्द्रभावं तनुते ते वरदैष दृष्टिपातः ॥ ३६ ॥

விபவம் விவ்ருணோதி விஸ்த்ருணீதே ருசமாவிஷ்குருதே க்ருபாமபாராம் ।
அபிவர்ஷதி ஹர்ஷமார்த்ரபாவம் தநுதே தே வரதைஷ த்ருஷ்டிபாத: ॥ 36 ॥

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| தே | உன்னுடைய |
| ஏஷ: த்ருஷ்டி பாத: | இந்த கடாக்ஷமானது |
| விபவம் | [உன்னுடைய] உபயவிபூதி ஸார்வ பௌமத்வத்தை |
| விவ்ருணோதி | வ்யக்தமாக்குகின்றது ; |
| ருசம் | சோபையை |
| விஸ்த்ருணீதே | பரவச் செய்கின்றது ; |
| அபாராம் | எல்லையில்லாத |
| க்ருபாம் | கருணையை |
| ஆவிஷ்குருதே | வெளிப்படுத்துகின்றது ; |
| ஹர்ஷம் | ஆநந்தத்தை |
| அபிவர்ஷதி | பெருகச் செய்கிறது ; |
| ஆர்த்ர பாவம் | நெஞ்சு கசிந்திருத்தலை |
| தநுதே | உண்டாக்குகிறது. |

* * * எம்பெருமான் பக்கலிலே நாலடிவரப் புகுகின்றவர்கள் 'தொண்டரோர்க்கருளிச் சோதி வாய் திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காய்' என்று ப்ரார்த்திப்பர்களிறே, "தேவராஜ தயாஸிந்தோ தேவதேவ ஜகத்பதே ! த்வதீக்ஷணஸுதாஸிந்துவீசிவிக்ஷேபசீகரை: ! காருண்யமாருதாநீதைச்சீதலைரபிஷிஞ்ச மாம் ॥" என்று ப்ரார்த்திப்பதுதானும் மிகையாம்படி ஆச்ரிதர்திறத்திலே கடாக்ஷதாரைகள் ஸதா ப்ரஸரித்துக்கொண்டிறே பேரருளாளனுக்கிருப்பது. அதுதன்னை ஐந்து படியாக உபச்லோகிக்கிறாராய்த்து * விபவம் விவ்ருணோதீத்யாதியாலே. "ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா । சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா ॥" என்று—எம்பெருமானுடைய மாநஸாநுத்யாநத்திற்குள்ள பெருமை அதுவானால், த்ருஷ்டிபாதத்தின் பெருமை * சொலப்புகில் வாயமுதம் பரக்குமே. [ஹே வரத ! ஏஷ தவ த்ருஷ்டிபாத: விபவம் விவ்ருணோதி] மாத்ருசரான க்ஷுத்ரர் பக்கலிலும் பள்ளமடையாகத் தானே ப்ரஸரியாநின்ற இந்த கடாக்ஷவீக்ஷணமானது நீயே உபயவிபூதிஸாம்ராஜ்ய துரந்தரனென்னுமிடத்தை விசதமாக்குகின்றதென்கை. த்ருஷ்டிபாதம் விபவத்தை விசதமாக்குகையாவது—த்ருஷ்டிபாதம் பட்ட விடம் ஸார்வபௌமனாகும்படியாய் இருக்கை என்னவுமாம்.

[வீக்ஷத்ருணீதே ருசம்] "கஞ்சைக்காய்ந்த கருவில்லி கடைக்கணென்னும் சிறைக்கோலால் நெஞ்சூடுருவ வேவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை" என்கிறபடியே கடாக்ஷம் பட்டவாறே புரிந்து பார்த்து அழகுக்கிலக்காகி, ராமசரங்களுக்கு இலக்காஞரோபாதி பாடாற்றப்போகா திருக்குமிறே; "தாமரைக் கண்கள் கொண்டு ஈர்தியாலோ தகவிலை தகவிலையே நீ கண்ணா" இத்யாதி, சூர்ப்பணகை செவியும் மூக்குமறுப்புண்டு கதறியோடி அலமந்து முறையிடா நிற்கச் செய்தேயும் கண் வழியாக அழகிலே தோற்றவளாகையாலே "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ । புண்டரீக விசாலாக்ஷௌ" என்றிறே கதறினாள். திருமேனியிலே ப்ரவஹியாநின்ற திவ்யலாவண்யதரங்கிணீ தரங் கங்களடங்கலும் திருக்கண்ணோக்கிலே தொடை கொள்ளலாம்படியிறே பேரருளாளன் ப்ரகாசிப்பது.

[ஆவிஷ்குருதே க்ருபாமபாராம்] 'உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ண' னிறே. க்ருபையில்லாத வன்று த்ருஷ்டிபாதத்திற்கு ப்ரஸக்திதானில்லையே. "காருண்யமாருதாநீதை:" என்றாரிறே ஆலவட்டமும் கையுமான அந்தரங்கர்.

[அபிவர்ஷதி ஹர்ஷம்] பரமாநந்தத்தைப் பெருக்காநின்றது. * வேர்த்துப் பசித்து வயி றசைந்து வேண்டடிசிலுண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடு நோக்குக்கொள்ளுகிற போதை நெடுநோக்காலே பக்தவிலோசநத்தில் ருஷிபத்நிகளிலே ஒருத்தியை "தத்ரைகா வித்ருதா பர்த்ரா பகவந்தம் யதாச்ருதம், ஹ்ருதோபகூஹ்ய விஜஹௌ தேஹம் கர்மநிபந்தநம்" என்று ஸ்வவிஷயப்ரா- வண்யத்தாலே அப்போதேஸம்ஸாரா்முக்தையாம்படியாகவும், அல்லாதாரை க்ஷீண பாபராய் முக்த் யர்ஹராம்படி பரிசுத்தராகவும் பண்ணின ஸர்வேச்வரனுடைய கடாக்ஷம் ஆநந்த ஸந்தாயக மென்னு மிடத்தில் விப்ரதிபத்தியுண்டோ? "முக்திர்மோக்ஷோ மஹாநந்த:" என்னும்படியான மஹாநந்தத்தைக் கொடுக்கக் கடவது வெறும் ஆநந்தத்தைக் கொடுக்கமாட்டாதோ?

[ஆர்த்ரபாவம் தநுதே] கடைக் கண்ணோக்கம் பட்டவாறே கல்லும் கரையு மென்கிறது. (36)

**अरुणाधरपल्लवे लसन्ती वरदासौ द्विजचन्द्रचन्द्रिका ते ।**
**अधिविद्रुममस्तनिस्तलालीरुचमाविष्कुरुते हि पुष्कराक्ष ॥ ३७ ॥**

**அருணாதரபல்லவே லஸந்தீ வரதாஸௌ த்விஜசந்த்ரசந்த்ரிகா தே ।**
**அதிவித்ருமமஸ்தநிஸ்தலாலீருசம், ஆவிஷ்குருதே ஹி புஷ்கராக்ஷ । 37 ॥**

| | | | |
|---|---|---|---|
| புஷ்கராக்ஷ | தாமரைக் கண்ணனே | த்விஜ சந்த்ர சந்த்ரிகா | சந்திரன் போன்ற திருமுத்துக் களின் ஒளியானது |
| ஹே வரத | வரம்தரும் பெருமானே! | அதிவித்ருமம் அஸ்த நிஸ்தல ஆலீ ருசம் | பவழத்தின் மேலே வைக்கப்பட்ட முத்து வரிசையின் சோபையை |
| தே | உன்னுடைய | ஆவிஷ்குருதே ஹி | வெளிப்படுத்துகின்றது போலும். |
| அருண அதர பல்லவே | சிவந்ததும் தளிர்போன்றதுமான திருவதரத்திலே | | |
| லஸந்தீ | விளங்குகின்ற | | |
| அஸௌ | இந்த | | |

* * * "செக்கரிடை நுனிக்கொம்பில் தோன்றும் சிறுபிறை முளைப்போல், நக்க செந்துவர் வாய்த் திண்ணை மீதே நளிர் வெண்பல் முளையிலக" என்ற பெரியாழ்வார் திருமொழிக்கு ஒரு புடை ப்ரத்ய பிஜ்ஞாபகமாயிரா நின்றதாய்த்து இந்த ச்லோகம். "நாளிளந் திங்களைக் கோள்விடுத்து வேயகம்பால் வெண்ணெய் தொடுவுண்ட ஆனயர் தாயவன்" "உறியார்ந்த நறு வெண்ணெய் ஒளியால் சென்று அங்குண்டானை" இத்யாதிப்படியே விபவாவதாரத்திலே காதாசித்கமாக ப்ரஸரிக்கக்கடவதான திருப் பவள நிலாவழகு பேரருளாளனுடைய திருமுகமண்டலத்திலே அநவரதம் அதிசயிதமாய் விளங்குமிறே. அவ்வழகை அநுபவித்து இனியராகிறார். திருவாய்ப்பாடியில் உறிகளிலே கவ்யங்கள் சேமித்து வைத் திருக்கும்படியை அறிந்து * படலடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்குப் பசு வெண்ணெய் களவு காணப்போம்போது தன் நிறத்தினிருட்சியாலும் அவ்விடத்தினிருட்சியாலும் தெரியாமையாலே 'தடவா நிற்கச் செய்தே கையிலே வெண்ணெய்த் தாழிகளகப்பட்ட ஸந்தோஷத்தினால் வாய் மலர, அப்போது ப்ரஸரிக்கும் த்விஜசந்த்ர சந்த்ரிகையே கை விளக்காக அமுதுசெய்யும். கோண்டியிலே பிடியுண்டவாறே

கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டடியுண்டு அழுமாகையாலே திருப்பவள நிலவு அங்கே ஸக்ருத் ஸேவ்யமாயிருக்கும். திருவத்திமாமலையிலே போக்யமான திருமேனியை ஸேவிக்கையிலே யுண்டான ஆசாதிசயத்தாலே அநவரதம் பாகவதகோஷ்டிகள் திரளுகையாலே அவர்களைக் காணப் பெறுகையி லுலுண்டான களிப்புக்குக் காலோபாதியில்லாமையாலே நிரந்தரமாக ப்ரஸரியாநிற்கும் த்விஜசந்த்ர சந்த்ரிகை; அதிலே ஈடுபடுகிறார்.

உத்தரார்த்தம் உத்ப்ரேக்ஷையாய்ச் செல்லுகிறது. [அதிவித்ருமமித்யாதி] கொவ்வைக் கனிபோல் சிவந்த திருவதரத்தின் மேலே வெண்ணிறமான தந்தகாந்தி விளங்குகிறபடி எங்ஙனே யிராநின்றதென்றால்; பவழத்தின் மேலே முத்தை வைத்தால் எங்ஙனே சோபிக்குமோ அங்ஙனே விளங்காநின்ற தென்றபடி. ப்ரவாள ஸ்தாநத்திலே திருவதரமும், முக்தாபல ஸ்தாநத்திலே தந்தப்ரபையும்.

வித்ருமே-அதிவித்ருமம் இத்யவ்யயீபாவ:—'ஹரௌ' 'அதிஹரி' இதிவத். [அஸ்தநிஸ்தலாலீ ருசம்] 'அஸ்த' என்றது ந்யஸ்த என்றபடி. [நிஸ்தல] ஸம்ஸ்க்ருதநிகண்டுக்களில் முக்தா சப்தபர்யாய மாக நிஸ்தல சப்தம் உள்ளதாகத் தெரியவில்லை. 'வர்த்துலம் நிஸ்தலம் வ்ருத்தம்' என்று அமரஸிம்ஹ னும் 'நிஸ்தலம் வர்த்துலே சலே' என்று விச்வனும் இப்படியே பல நைகண்டுகர்களும் சொல்லிவைத்தார் கள். 'கண்டஸ்ய தஸ்யா: ஸ்தநபந்துரஸ்ய முக்தாகலாபஸ்ய ச நிஸ்தலஸ்ய' [குமாரஸம்பவே—1-42] என்று மஹாகவியும் வர்த்துலபர்யாயமாக ப்ரயோகிக்கக் காணாநின்றோம். ஆனால், தமிழில் 'நித்திலம்' என்றொரு சொல் முத்துக்கு வாசகமாக ப்ரஸித்தமாயிராநின்றது. சீவகசிந்தாமணி; மணிமேகலை முதலிய தமிழ்க்காவியங்களில் இச்சொல் விசேஷத: ப்ரயுக்தம். 'நின்றவூர் நித்திலத்தை' என்றும், 'நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை' என்றும், 'நித்திலங்கள் பௌவத்திரை யுலவு' என்றும் ஆழ்வார்களும் அருளிச் செய்துள்ளார்கள். ஒரு அரும்பதவுரைகாரர், 'நிஸ்தலம் என்னும் வடசொல் நித்திலமென்று திரிந்து கிடக்கிறது; முத்து என்றபடி. 'நிஸ்தலம் வர்த்துலே முக்தாபலே ச சபலேபி ச—இதி நிகண்டு:' என்றெழுதி வைத்திருக்கிறார். இனி வல்லார் வாய்க்கேட்டுணர்வது. .... .... (37)

**स्मितनिर्झरिका विनिष्पतन्ती तव वक्षस्स्थलभूतले वि(की)शीर्णा।**
**वरद प्रबिभर्ति हारलक्ष्मीम् अपि मुक्तावलिका नदीव तज्जा ॥ ३८॥**

**ஸ்மிதநிர்ஜ்ஜரிகா விநிஷ்பதந்தீ தவ வக்ஷஸ்ஸ்தலபூதலே விசீர்ணா।**
**வரத ப்ரபிபர்த்தி ஹாரலக்ஷ்மீம் அபி முக்தாவலிகா நதீவ தஜ்ஜா ॥ 38 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | வரதனே! |
| விநிஷ்பதந்தீ | [முகமாகிற உந்நத ஸ்தாநத்தில் நின்றும்] விழாநின்ற |
| தவ ஸ்மிதநிர்ஜ்ஜரிகா வக்ஷஸ்ஸ்தல பூதலே | உன்னுடைய புன்முறுவலாகிற அருவியானது திருமார்பாகிற தரையிலே |
| விசீர்ணா [ஸதீ] | இறைந்ததாய்க்கொண்டு |
| ஹாரலக்ஷ்மீம் | ஸஹஸ்ரயஷ்டிக ஹாரசோபையை |
| ப்ரபிபர்த்தி | அடைந்திடாநின்றது. |
| முக்தாவலிகா அபி | ஏகாவளீ ஹாரமும் |
| தஜ்ஜா | அந்த அருவியில் நின்றும் உண்டான |
| நதீ இவ | ஆறுபோல் |
| [பாதி] | விளங்குகின்றது. |

* * * அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழு கின்ற அவ்யக்த மதுர மந்தஹாஸ விலாஸந்தன்னையே மீண்டு மொருபடியாக உபச்லோகிக்கிறார். திருப் பவளமாகிற மேட்டுநிலத்தில் நின்றும் புன்முறுவலாகிற அருவியானது திருமார்பாகிற தரையிலே விழுந்து விப்ரகீர்ணமாய் அத் திருமார்புக்கு முக்தாஹாரமென்னலாம் படி விளங்குகின்றது, ஏற்கெனவே சாத்தி யுள்ள முக்தாவளியும் அந்த அருவியில் நின்றும் பெருகின ஒரு ஆறுபோலே விளங்குகின்ற தென்கிறார்.

வக்ஷஸ்தலத்திற் காட்டிலும் முகம் மேற்பட்டதாகையாலே அது ஒரு உன்னத ஸ்தானமாகவும், ஸ்மிதமானது ப்ரஸரணசீலத்தாலும் சுப்ரகாந்தியோகத்தாலும் நிர்ஜ்ஜரமாகவும், அந்த ஸ்மிதம் திருமேனி யில் விசகலிதமாக வ்யாபிப்பதானது உன்னத ப்ரதேசத்தில் நின்றும் தரையிலே அருவி விழுந்து சிதறுவ தாகவும் இங்ஙனே ரூபகப்ரக்ரியையிலே திருவுள்ளம்பற்றி அருளிச் செய்கிறபடி. இப்படி திருமார்பிலே சிதறிச் சிதறி வ்யாபியா நின்ற ஸ்மிதநிர்ஜ்ஜரமானது சதயஷ்டிகஸஹஸ்ரயஷ்டிக முக்தாஹாரம் சாத்தினாற்

போலே விளங்குகின்றதென்கிறுர் த்ருதீய சரணத்தாலே. இனி நான்காவது பாதத்தால் சொல்லிற்ருய்த்தென்னென்னில் :—பேரருளாளனுடைய திருமார்பில் ஏகாவளியான ஒரு முக்தாஹாரம் சாத்தப்பட்டிருக்கிறது. அது முக்தாவளியல்ல. வக்ஷஸ்ஸ்தலநிபதிதவிசீர்ணமான ஸ்மிதநிர்ஜ்ஜரத்தில் நின்றும் பெருகிய ஒரு ஆறுதான் முக்தாவளியாக விளங்குகின்றதோ என்று உல்லேகிக்கலாம்படி யிராநின்றதென்கை. ஆக இந்த ச்லோகத்தால், பேரருளாளனுடைய மந்தஹாஸ ப்ரபா ப்ரஸரமானது அநேக யஷ்டிக முக்தா ஹாரமாகவும், வஸ்துதஃ திருமார்பிலே சாத்தியிருக்கிற ஏகாவளீ ஹாரமானது ஸ்மிதநிர்ஜ்ஜர விநிஸ் ஸ்ருதையான நதியாகவும் உத்ப்ரேக்ஷிக்கப் பட்டதாய்த்து.

விகீர்ண, விசீர்ண - இதி பாடபேதஃ. த்ருதீயபாதத்தை 'ஹாரலக்ஷ்மீமபி' என்னுமளவாக நிறுத்தி யநுஸந்திப்பது அர்த்தச்சேர்த்திக்கு விபரீதம் ; 'அபி முக்தாவளிகா' என்று யதாக்ரமமாகவே அநுஸந்திக்கவேணும். ... ... .... .... (38)

परिमण्डितरासमण्डलाभिः वरदाघ्रातमभीष्टगोपिकाभिः ।
अनुवर्तितदातनप्रहर्षात् इव फुल्लं हि कपोलयोर्युगं ते ॥ ३९ ॥

பரிமண்டிதராஸமண்டலாபிஃ வரதாக்ராதமபீஷ்ட கோபிகாபிஃ ।
அநுவர்த்திததாதநப்ரஹர்ஷாத் இவ புல்லம் ஹி கபோலயோர் யுகம் தே ॥ 39 ॥

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | பேரருளாளனே ! | தே கபோல யோ : யுகம் | உன்னுடைய கபோலத்வயமும் |
| பரிமண்டித ராஸமண்ட லாபி : | அலங்கரிக்கப்பட்ட திருக்குரவை கோஷ்டியை யுடைய | அநுவர்த்தி ததாதந ப்ரஹர் ஷாத்இவ | இப்போதும் அநுவர்த்தித்து வாராநின்ற அப்போதைய ஹர்ஷப்ரகர்ஷத்தாலே போல |
| அபீஷ்ட கோபிகாபி : | ப்ரியைகளான கோபஸ்த்ரீகளாலே | | |
| ஆக்ராதம் | மோரப்பட்ட | புல்லம் | விகஸித்திரா நின்றது. |

* * * திவ்ய கபோலங்களை யநுபவித்து இனியராகிறுர். அர்ச்சாவதாரத்திலும் விபவாவதார வாஸநை பண்ணிப் போருவர்கள் நம் ஆழ்வார்களும் ஆசார்யர்களும். 'கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன்—அண்டர்கோனணியரங்கன்' 'அடுதிறலயோத்தி யெம்மரசே ! அரங்கத்தம்மா' என்றிப்புடைக ளிலே யாய்த்து ஆழ்வார்களீடுபாடு. மற்றையவதாரங்களிற் காட்டிலும் க்ருஷ்ணவதாரம் ஸந்நிஹிதமாகை யாலே இந்த க்ருஷ்ணவதார வாஸநையே மிகுதியாகச் செல்லுமாய்த்து அர்ச்சாவதாரத்திலே.

பேரருளாளனுடைய திவ்ய கபோலங்களின் ப்ரபுல்லதையைக் கண்டவாறே க்ருஷ்ணவதாரத் திலே ராஸக்ரீடா அவஸரத்திலே க்ருஷ்ண கபோலங்களுக்கு விளைந்த ஹர்ஷப்ரகர்ஷம் ஸ்ம்ருதிவிஷய மாகி தாதாத்ம்யபாவனை தோற்ற அருளிச் செய்கிறுர். [பரிமண்டிதேத்யாதி] ராஸ மண்டலமாவது கண்ணபிரானுடைய ராஸக்ரீடா கோஷ்டி. ராஸக்ரீடையாவது தமிழில் 'குரவைக் கூத்து' எனப்படும். அதாவது 'அங்கனமங்கனமந்தரே மாதவஃ' இத்யாதிப்படியே ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கலிலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல திவ்யமங்கள விக்ரஹங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு கைகோத்தாடுவது. அங்ஙனே ஆடுங்காலத்தில் இரண்டு பக்கலிலுமுள்ள ஆய்ச்சிமார்களும் தங்கள் தங்களுக்கு அணித்தான க்ருஷ்ண கபோலத்திலே ப்ரீத்யதிசயத்தாலே முத்தம் கொடுக்க, அத்தாலே ஒரு விலக்ஷணமான ஹர்ஷ ப்ரகர்ஷம் உண்டாகக் கடவதிறே க்ருஷ்ணகபோலங்களுக்கு ; அந்த ஹர்ஷத்தினுடைய அநுவ்ருத்தி யானது அத்யாபி மாருமையாலே தத்ப்ரயுக்தமாகத்தான் இந்த திவ்ய கபோலங்கள் ப்ரபுல்லங்களா யிருக்கின்றனவோ ? என்று உந்நயிக்கிறபடி. .... .... ... (39)

मुखमुन्नसमायताक्षमुद्यत्स्मितदन्तं रुचिराधरं नतभ्रु ।
लसदंसविलम्बिकर्णपाशं मयि ते निश्चलमस्तु हस्तिनाथ ॥ ४० ॥

முகமுந்நஸமாயதாக்ஷமுத்யத்ஸ்மிததந்தம் ருசிராதரம் நதப்ரு ।
லஸதம்ஸவிலம்பிகர்ணபாசம் மயி தே நிச்சலமஸ்து ஹஸ்திநாத ॥ 40 ॥

| | | | |
|---|---|---|---|
| ஹே ஹஸ்திநாத | ஓ கரிகிரி நாதனே ! | நத ப்ரு | வளைந்த திருப்புருவங்களை யுடைய தாயும் |
| உந்நஸம் | உந்நதமான நாஸிகையை யுடைய தாயும் | லஸத் அம்ஸ விலம்பி கர்ண பாசம் | விளங்குன்ற தோள் வரை தொங்குகின்ற சிறந்த செவிகளை யுடைத்தாயு மிருக்கிற |
| ஆயதாக்ஷம் | நீண்ட திருக்கண்களை யுடைய தாயும் | தே முகம் | உனது திருமுக மண்டலமானது |
| உத்யத் ஸ்மித தந்தம் | விம்மிவெளியெழுகின்ற புன்முறுவலையுடைய திருமுத்துகளை யுடைய தாயும் | மயி | அடியேன் விஷயத்திலே |
| ருசிர அதரம் | அழகிய திருவதரத்தை யுடைய தாயும் | நிச்சலம் அஸ்து | நீடித்திருக்கக் கடவது. |

* * * "பரபாகமியாத்" என்னும் ச்லோகம் முதலாக இவ்வளவும் வர, திருமுக மண்டலத்திலுள்ள ஒவ்வொரு திவ்யாவயவந்தன்னையும் தனித்தனியே அநுபவித்து, இந்தச்லோகத்தாலே திருமுகத்தைப் பூர்ணமாக அநுபவிக்கிறார். ஆழ்வானுடைய சிந்தையாகிற பெண்ணானவள் இனிமேல் தேவாதிராஜனது கண்டாச்லேஷத்துக்குப் போகிறாளாகையால், நவோடையான பெண் பிறந்தகத்தில்நின்றும் புக்ககந்துக்குப் போம்போது ஜந்மபூமியிலுள்ள உறவு முறையாருள்ள விடமெங்கும் புக்கு அவர்களை உபலாலித்து வருமாபோலே தனக்கு சிரபரிசிதங்களான நயநநாஸிகாதி அவயவங்களை கண்டாச்லேஷ பூர்வாங்கமாக உபலாலநம் பண்ணி உகவாநின்றபடி.-என்று ஜீயருளிச் செய்யும்படி. [தே முகம் மயி நிச்சலமஸ்து] " துரீச்வரத்வாரபஹிர் விதர்திகாதுராஸிகாயை ரசிதோயமஞ்ஜலி: " என்று ப்ராக்ருதமுகாவலோகநத்தில் நசை யொழிந்து " இன்று யாம் வந்தோ மிரங்கு " என்று உன் கோயில் கடைத்தலைப்புகுந்த அடியேன் திறத்திலே உன்னுடைய திருமுக மண்டலம் எப்போதும் மாறுதே ஸேவைதந்தருள வேணுமென்கிறார். " வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் " என்றபடி மாரீசனுக்கு எங்கும் இராமபிரானுடைய தோற்றமேயாயிருந்தாற்போலே இவர் தமக்கும் பேரருளாளனுடைய திருமுகமண்டலமே இடைவிடாது முன்னின்று தோற்றவேணுமென்று ஆசை யிருக்கிறபடி. .... .... .... (40)

पद्मायाः प्रणयरसात् समासजन्त्याः स्वं बाहुं सुबहुमतो भुजेन तेन ।
कां नामान्वभवदहो दशां तदात्वे कण्ठस्ते करिगिरिनाथ कम्बुकान्तः ॥ ४१ ॥

**பத்மாயா: ப்ரணயரஸாத் ஸமாஸஜந்த்யா: ஸ்வம் பாஹும் ஸுபஹுமதோ புஜேந தேந ।**
**காம் நாமாந்வபவதஹோ தசாம் ததாத்வே கண்டஸ் தே கரிகிரிநாத! கம்புகாந்த: ॥ 41 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே கரிகிரிநாத ! | திருவத்திமலைத் தலைவனே ! | பத்மாயா: | பிராட்டிக்கு |
| கம்பு காந்த: | சங்கம் போலழகிய | ஸுபஹுமதஸ்ஸந் | மிகவும் பஹுமான பாத்ரமாய்க் கொண்டு |
| தே கண்ட : | உன்னுடைய திருக்கழுத்தானது | ததாத்வே | அக்காலத்தில் |
| ப்ரணயரஸாத் | ப்ரீதிரஸத்தாலே | காம் நாம தசாம் | என்ன அவஸ்தையை |
| தேந புஜேந ஸ்வம்பாஹும் ஸமாஸஜந்த்யா: | அப்படிப்பட்ட [உனது] புஜத்தோடே தன்னுடைய புஜத்தைத் தழுவி முழுசா நின்ற | அந்வபவத் | அநுபவித்ததோ ! |
| | | அஹோ | அந்தோ ! |

* * * இனித் திருமுக மண்டலத்திற்குக் கீழே நோக்குகிறார். திருக்கழுத்திலே ஊன்றுகிறாராய்ச் செல்லுகிறது இந்த ச்லோகம். பேரருளாளனுடைய திருக்கழுத்தானது * க்ரமுகதருணக்ரீவை போலவும் சங்கம் போலவும் ரேகாத்ரயவிபக்தாங்கமாயிருக்கும். அந்த ரேகைகளைக் கண்ட வாறே 'ப்ரணய விலகல்லக்ஷ்மீ விச்வம்பராகரகந்தலீகனக வலயக்ரீடாஸம்க்ராந்தரேக இவோல்லஸன்' என்றுப் போலே கண்டாச்லேஷ தத்பரையான பிராட்டியின் திருக்கைகளிலணிந்துள்ள கனகவலயங்கள் திருக்கழுத்

திலே அழுத்தப் பெற்று அதனுலுண்டான ரேகைகளோ இவை! என்று சங்கிக்கும்படியா யிருக்கும். இப்படிப்பட்ட தொரு ஸம்பாவனை ஆழ்வான் திருவுள்ளத்திலே உதிக்க 'ஏகஸம்பந்திஜ்ஞானம் அபரஸம்பந்தி ஸ்மாரகம்' என்ற கணக்கிலே, பண்டு பிராட்டி செய்தருளின கண்டாச்லேஷம் ஸ்ம்ருதி விஷயமாக, ததநுஸந்தானமுகேன திருக்கழுத்திலே ஈடுபடுகிருராய்த்து. [ஹே ஹஸ்திகிரிநாத ! கம்புகாந்த: தே கண்ட: ப்ரணயரஸாத் தேந புஜேந ஸ்வம் பாஹும் ஸமாஸஜந்த்யா: பத்மாயாஸ் ஸபஹுமதேந: ஸந்ததாத்வே காம் நாம தசாம் அந்வபவத்] பிராட்டி எம்பெருமானேடே கைகோத்துத் தழுவி முழுசிப் பரிமாறின ஸமயம் பலவுண்டு ; திருப்பாற்கடல் கடைந்தபோது திவ்யமால்யாம்பரதரையாய் ஸர்வபூஷண பூஷிதையாய் ஸகல தேவதைகளும் பார்த்துக்கொண்டு நிற்கச் சென்றணைந்தது ஒன்றுண்டு ; கரவதத்தினன்று ராக்ஷஸ வேட்டையாடின பெருமாளுடைய யுத்தாயாஸ பரிஸ்வின்னமான திருமேனியில் ராக்ஷஸ சரவ்ராதவ்ரணரோபணதிவ்யௌஷதமான காடாலிங்கனமொன்றுண்டு; இவை யெல்லாம் இங்கு ஆழ்வானுக்கு விவக்ஷிதமல்ல காணும். திவ்ய தம்பதிகளிருவரும் சேரநின்று ஒருவருக்கொருவர் கை கோத்து கண்டாச்லேஷம் பண்ணினது க்ருஷ்ணவதாரத்திலே விசேஷித்து வீறுபெற்றிருக்குமாய்த்து. [ப்ரணயரஸாத் ஸ்வம் பாஹும் தேந புஜேந ஸமாஸஜந்த்யா:] * எம்மைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப்பக்கம்நின்றவர் என் சொல்லார்' என்று அஞ்சவேண்டும் நிலத்திலன்றிக்கே * பொய்கை முது மணல் முல்லைப்பந்தல்களிலே பண்ணும் விஹாரமாகையாலே, 'ஆலிங்கிதாயாம் புநராயதாக்ஷ்யாமாம் ஆசாஸ்மஹே விக்ரஹயோரபேதம்' என்னும்படியான ப்ரணயரஸம் மீதூர்ந்திருக்குமிறே. அப்படிப்பட்ட ப்ரீதிவிசேஷத்தாலே பிராட்டியானவள் தன் கையை அவனுடைய கையோடே இணைத்து நெருக்கி அவன் பிடரியிலே தன் கையும் தன் பிடரியிலே அவன் கையுமாக உல்லஸித்து நிற்கும்படியைச் சொல்லுகிறது ; 'தேந புஜேந' என்கிற விடத்தில் தச்சப்தம் விபவாவதாரஸம்பந்தபராமர்சியாம். அர்ச்சையிலும் விபவாவதார தாதாத்ம்யாநுஸந்தானத்தினுறைப்பு இருக்கிறபடி.

[ஸபஹுமத: தே கண்ட:] பிராட்டியின் பாஹுவானது எம்பெருமானுடைய கண்ட ஸ்பர்சத்தைப் பெற்றவாறே ஒரு விலக்ஷணமான இனிமை யுண்டாக, 'ஹா ஹா இதொரு ஸ்பர்சமிருந்தபடி யென்!' என்று அதுதன்னிலே உச்சாவசமான பஹுமாந விசேஷங்களைப் பண்ணுவளிறே பிராட்டி - அந்த பஹுமாந விசேஷங்களுக்குப் பாத்ரமான உனது திருமிடறனது [ததாத்வே காம் நாம தசாம் அந்வபவத்] * நெஞ்சால் நினைப்பரிதால், * என்னும் படியிராநின்றதீ ; சொலப்புகில் வாயமுதம் பரக்குமே. "காம் நாம தசாமந்வபவத்' ' என்று ப்ரச்நம் பண்ணுகிருரல்லர் ; அதுவுமொரு நிலைமையே !" என்று ஈடுபடுகிருர். அந்த ஸமயத்தில் இத்திருமிடறு பட்டபாட்டை அணுகியிருந்து கண்ணார அநுபவிக்கப் பெற்றிலோமே!' என்னுமிழவு சொல்நலத்தில் வெளியாகிறபடி பாரீர்.

[கம்புகாந்த:] கம்புவத் காந்த: ; சங்கம் போலே அழகிய என்றபடி. "சங்கஸ்ஸ்யாத் கம்புரஸ்த்ரியாம்" இத்யமர:. ரேகாத்ரயவிபக்தாங்கத்வாதி ஸாதர்ம்யத்தையிட்டு கண்டத்துக்கு சங்கஸாத்ருச்ய வர்ணனம் கவிஸமய ப்ரஸித்தம்.

இந்த ச்லோகம் முதல் 'யா தாமோதர இதி" என்னும் ச்லோகமளவாகவுள்ள பதினெரு ச்லோகங்களும் ப்ரஹர்ஷிணீ வ்ருத்தம். .... .... .... .... .... (41)

**सायामा धृतपरिणद्धयोध्वयो वा तादृश्यस्स्फुटमथवा विशश्चतस्त्रः।**
**चत्वारो वरद वरप्रदास्त्वदीयाः भासन्ते भुजपरिघास्तमालनीलाः ॥ ४२ ॥**

**ஸாயாமா த்ருதபரிணத்தயோப்தயோ வா தாத்ருச்யஸ் ஸ்புடமத வா திசச்சதஸ்ர: ।**
**சத்வாரோ வரத வரப்ரதாஸ் த்வதீயா: பாஸந்தே புஜபரிகாஸ் தமாலநீலா: ॥ 42 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! | வரப்ரதா: | [அடியார் வேண்டும்] வரங்களை யளிக்க வல்லவையாயும் |
| தமாலநீலா: | பச்சிலைமரம்போல் கறுத்தவை யாயும் | சத்வார: | நான்காயுமுள்ள |

| | |
|---|---|
| த்வதீயாஃ புஜபரிகாஃ ஸாயாமாஃ | உழல் தடிபோன்ற உனது புஜங்களானவை நீட்சியோடு கூடி |
| த்ருதபரிணத்தயஃ | சுற்றுப் பரப்புடைத்தான |
| அப்தயோ வா | கடல்போலவோ |
| அத | அன்றி |

| | |
|---|---|
| தாத்ருச்யஃ | அத்தனை நீட்சியும் சுற்றுப்பரப்பு முடைய |
| சதஸ்ரோ திசோ வா | நான்கு திசைகள் போலவோ |
| பாஸந்தே | விளங்காநின்றன. |
| ஸ்புடம் | [உத்ப்ரேக்ஷாஸூசகமவ்யயம்]: |

* * * பேரருளாளனுடைய புஜங்களிலே ஈடுபடுகிறார். 'பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மநஃ'—என்கிறபடியே இவன்தோள் நிழலிலே ஒதுங்கினவர்களுக்கு மதிளுக்குள்ளே யிருப்பார்க்குப் போலே பயம் கெட்டிருக்கலாம்படியும், ஸப்த லோக ப்ரஜைகளும் இத்தோள் நிழலிலே ஒதுங்கினாலும் அவ்வளவேயன்றிக்கே இன்னும் சதகுணித ஸப்த லோகங்களுண்டானாலும் அவற்றுக்கும் இடம்போரு மென்னும்படி ஒதுங்கினவர்கள் சுருங்கி நிழலே விஞ்சி விசாலதமங்களா யிருக்கும்படியும் பற்ற, திசைகளையும் கடல்களையும் ஒப்புச்சொல்ல ஒருப்படுகிறார்.

[ஹே வரத ! தமாலநீலாஃ வரப்ரதாஃ சத்வாரஃ த்வதீயாஃ புஜபரிகாஃ ஸாயாமாஃ த்ருதபரிணத்தயஃ அப்தயோ வா பாஸந்தே] * அலம்புரிந்த நெடுந்தடக்கை அமரர் வேந்தனிறே பேரருளாளன். அர்த்திகள் 'அலம் அலம்' என்னும்படியாய்; புறம்பொருவர் வாசலிலே செல்ல வேண்டாதபடி பர்யாப்தமாகக் கொடுத்து நீண்டதிருக்கைகளிறே.

[தமாலநீலாஃ] "கற்பகக்காவன நற்பலதோளன்" என்றபடி பச்சிலைக் காடு பரந்தாற் போலேயிறே திருத்தோள்கள் விளங்குகிறபடி. தாபார்த்தர் தமாலச் சாயையிலே ஒதுங்கி விடாய் கெடுமாபோலே தாபத்ரயாதுரர் இத்தோள் நிழலிலே யொதுங்கியிறே விடாய் தீருவது. [புஜபரிகாஃ] புஜாஃ பரிகா இவ புஜபரிகாஃ; பரிகமாவது உழல்தடி. ஆச்ரிதர்களுக்கு அஞ்ச வொண்ணாதபடி ரக்ஷணத்துக்கு ஸுத்ருட பரிகரமாயிருக்கையாலே புஜங்களை அர்க்கலமாக அருளிச் செய்தபடி, இப்படிப்பட்ட புஜங்கள் கடல்போல் விளங்குகின்றன வென்றது நீளத்தையும் சுற்றுடைமையையும் நைல்யத்தையும் ச்ரமஹரத்வத்தையும் வதுஸ்ஸங்க்யத்வத்தையும் பற்ற. [ஸாயாமாஃ] ஆயாமமாவது தைர்க்யம்; * தைர்க்யமாயாம ஆநாஹஃ * இத்யமரஃ ஆயாமேந ஸஹிதாஃ ஸாயாமாஃ. [த்ருதபரிணத்தயஃ] பரிணத்தியாவது பரிணாஹம். 'பரிணாஹோ விசாலதா' இத்யமரஃ। 'பரி' என்னும் உபஸர்க்கபூர்வகமான ணஹதாது கஞந்தமானால் 'பரிணாஹஃ' என்றும். க்திந்ப்ரத்யாந்தமானால் 'பரிணத்திஃ' என்றும். த்ருதா பரிணத்திஃ யைஃ தே - த்ருதபரிணத்தயஃ। ஆக இவ்விரண்டு விசேஷணங்களாலும் ஸமுத்ரங்களின் அகல நீளமுடைமை சொல்லப்பட்டது. 'அப்தயோ வா' என்ற விடத்தில் வாகாரம் இவார்த்தகம்; * உபமாயாம் விகல்பே வா * இத்யமரஃ.

இங்ஙனே புஜங்களுக்கு ஸமுத்ரங்களை ஒப்புச் சொன்னவிதிலும் த்ருப்திபெறாதே மற்றொரு த்ருஷ்டாந்தமருளிச் செய்கிறார். [அத தாத்ருச்யஃ சதஸ்ரஃ திசோ வா பாஸந்தே] தாத்ருச்யஃ என்றது 'ஸாயாமாஃ த்ருதபரிணத்தய' என்று கீழே அப்திக்குச் சொன்ன விசேஷணத்வயம் இங்கும் அநுஷங்கம் பண்ணிக்கொள்ள வேணுமென்று தெரிவித்தபடி. அகலமும் நீளமும் அளவிறந்து கிடக்கிற நால்-திசைகள் போலே உன்னுடைய புஜங்கள் விளங்குகின்றன வென்றபடி. ஸமுத்ரங்களின் அகல நீளங்களுக்காகிலும் ஓரளவிலே விச்சித்தியுண்டு. திக்குக்களின் விஸ்தாரம் அங்ஙனல்லவிறே. ... (42)

आश्लेषे वरद भुजास्तवेन्दिरायाः गोपीनामभिमतरासबन्धने वा ।
बन्धे वा मुदमधिकां यशोदयाहो संप्राप्तास्तव नवनीतमोषदोषात् ॥ ४३ ॥

**ஆச்லேஷே வரத புஜாஸ் தவேந்திராயாஃ கோபீநாமபிமதராஸபந்தநே வா ।**
**பந்தே வா முதமதிகாம் யசோதயாஹோ ஸம்ப்ராப்தாஸ்தவ நவநீதமோஷதோஷாத் ॥ 43 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | வரதனே ! | ஆஹோ | அல்லது |
| தவ புஜா: | உன்னுடைய புஜங்கள் | நவநீத மோஷ தோஷாத் | வெண்ணெய் களவு கண்ட குற்றத்திற்காக |
| இந்திராயா: ஆச்லேஷேவா | பிராட்டியின் ஆலிங்கனத்திலேயோ | யசோதயா | யசோதையினுல் |
| கோபீநாம் அபிமதராஸ பந்தநே வா | ஆய்ச்சிகளுக்கு அபிமதமாகத் திருக்குரவை கோத்ததிலேயோ | பந்தே வா | கட்டுண்டதிலேயோ |
| | | அதிகாம் முதம் | அதிகமான மகிழ்ச்சியை |
| | | ஸம்ப்ராப்தா: | அடைந்தன ?. |

* * * மீண்டும் அந்த புஜங்களிலேயே ஈடுபட்டுப் பேசுகிருர். இந்த புஜங்கள் நிஸ்ஸீமமாக வளர்ந் திருக்கைக்கடி ஸந்தோஷமாக வேணும். ஸந்தோஷமுண்டானுல் சிறிய வடிவும் பெரிய வடிவமாகப் பரிண மியா நின்றதிறே. பரமபுருஷனும் மஹாபலி பக்கலிலே சென்று மூவடியிரக்க, மாவலி தாரை வார்த்து தத்தம் பண்ணினவாறே 'அபிமதலாபம் கிடைக்கப்பெற்ருேம்' என்னும் ஆனந்தமே விளைநீராகவிறே மந்தரமீது போகி மதி நின்றிறைஞ்ச மலரோன் வணங்க வளர்சேர், அந்தர மேழினூடு செலவுய்த்த பாதம்" என்னும்படி ஓங்கி வளர்ந்தது. அப்படி போலே இந்த புஜ வ்ருத்திக்கு ஹேது ஏதேனுமோரு ஸந்தோஷமே யாகவேணுமென்று அறுதியிட்டு அந்த ஸந்தோஷந்தனக்குப் பல ஹேதுக்களுளவா கையால் "இந்த ஹேதுவா, அந்த ஹேதுவா ? எந்த ஹேது ?" என்று பேரருளாளனை நோக்கி ப்ரச்நம் பண்ணுகிருர்.

பூர்வார்த்தத்தில் இரண்டு ஹேதுக்களும், உத்தரார்த்தத்தில் ஒரு ஹேதுவும் ஆக மூன்று ஹேதுக்களை அருளிச்செய்து, இவற்றில் எந்த ஹேது வடியாக உன்னுடைய புஜங்கள் ஸந்தோஷ மடைந்தனவென்று வினவுகின்ருர்.

ஹே வரத! தவ புஜா: இந்திராயா: ஆச்லேஷே அதிகாம் முதம் ஸம்ப்ராப்தா வா ? (உத) கோபீநாம் அபிமதராஸபந்தனே அதிகாம் முதம் ஸம்ப்ராப்தா வா? ஆஹோ தவ நவநீதமோஷதோஷாத் (ப்ராப்தே) யசோதயா தாமபி: க்ருதே பந்தே அதிகாம் முதம் ஸம்ப்ராப்தா வா ?] என்று ப்ரச்நத்ரய மிருக்கிறபடி. "மேற்குறித்த மூன்று அவஸரங்களிலுமே ஆனந்த முண்டாயிற்று" என்று லகுவாகத் தானே மறுமாற்றம் சொல்லிவிட வொண்ணுதபடி அதிகாம் என்று விசேஷணமிடுகிருர். மூன்று அவஸரங் களிலும் ஆனந்த முண்டாயிற்றென்னுமிடம் நானறிவேன் ; இவற்றுள் எந்த அவஸரத்திலுண்டான ஆனந்தம் அதிகம்? என்பதே யாய்ந்து இப்போது நான் கேட்டது ; இதுதன்னை ஆராய்ந்து விடை யளிப்பாய் என்கிருர். ஆக; பத்மாபரிஷ்வங்கம், ராஸபந்தனம், தாமபந்தனம் என்ற மூன்றவஸரங்களுள் உன்னுடைய புஜங்களுக்கு அளவிறந்த ஆநந்தமுண்டாகியது எந்த அவஸரத்திலே சொல்லா யென்ருராயிற்று. .... ... ... ... .... ... (43)

सालीया इव विटपास्सपल्लवाग्राः कल्लोला इव जलधेस्सविद्रुमाग्राः ।
भोगीन्द्रा इव च फणामणीद्धवक्त्राः भासन्ते वरद भुजास्तवारुणाग्राः ॥ ४४ ॥

**ஸாலீயா இவ விடபாஸ் ஸபல்லவாக்ரா: கல்லோலா இவ ஜலதேஸ் ஸவித்ருமாக்ரா: ।**
**போகீந்த்ரா இவ ச பணுமணீத்தவக்த்ரா: பாஸந்தே வரத புஜாஸ் தவாருணுக்ரா: ॥ 44 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ! | ஓ வரதனே ! | விடபா இவ | கிளைகள் போலவும் |
| ருணுக்ரா: | சிவந்த நுனிகளையுடைய [சிவந்த திருவிரல்களையுடைய] | ஸவித்ருமாக்ரா: | பவழங்களோடு கூடிய நுனிகளை யுடைய |
| தவ புஜா: | உன்னுடைய புஜங்கள் | ஜலதே: | கடலினுடைய |
| ஸபல்ல வாக்ரா: | தளிரோடு கூடிய நுனிகளை யுடைத்தான | கல்லோலா இவ | பெரிய அலைகள் போலவும் |
| ஸாலீயா: | ஸாலவ்ருக்ஷத்தினுடையதான | பணுமணீத்த வக்த்ரா: | படங்களினுடைய மணிகளால் ப்ர காசிக்கின்ற முகங்களையுடைய: |

| | | | |
|---|---|---|---|
| போகீந்த்ராः இவ ச | சேஷன், வாஸுகி முதலிய அர வரசுகள் போலவும் | பாஸந்தே | விளங்குகின்றன. |

* * * பேரருளாளனுடைய புஜங்கள் திருவிரல்களோடே சேர்ந்த சேர்த்தியழகுக்குப் பாசுரமிடுகிறார். நுனியிலே இளந்தளிர்களை யுடைய ஸாலவ்ருக்ஷ சாகைகள் போலவும், பவழங்களைக் கொழிக்கின்ற கடலலைகள் போலவும், முகத்தில் பணாமணிகள் விளங்கப்பெற்ற ஸர்ப்பராஜங்கள் போலவும் விளங்குகின்றன—செவ்விய திருவிரல்களோடே கூடின தேவரீருடைய திருக்கைகள் என்கிறார்.

ஆக இந்த ச்லோகத்தால் பணைகள் போலவும் அலைகள் போலவும் அரவங்கள் போலவும் பருத்து நீண்டு மனோஹரங்களாய் விளங்குகின்ற திருக்கைகளும் செவ்விதழ் போலும் பவழங்கள் போலும் செம்மணி போலும் விளங்குகின்ற திருவிரல்களும் அநுபவிக்கப்பட்டன. "அருணாக்ராः" என்ற பதத்தில் திருவிரல்களுக்கு வாசகமான பதம் வ்யக்தமாக இல்லையாகிலும், அக்ரபத மானது அங்குளியை லக்ஷிக்கிறதென்றுணர்க. ... ... ... ... ... (44)

**अम्भोधेस्स्वयमभिमन्थनं चकर्थ क्षोणीध्रं पुनरबिभश्च सप्तरात्रम् ।**
**सप्तानां विवलयसिस्म कण्ठमुक्ष्णाम् अम्लाना वरद तथाऽपि पाणयस्ते ॥ ४५ ॥**

**அம்போதேஸ் ஸ்வயமபிமந்தநம் சகர்த்த க்ஷோணீத்ரம் புநரபிபச் ச ஸப்தராத்ரம் ।**
**ஸப்தாநாம் விவலயஸிஸ்ம கண்டமுக்ஷ்ணாம் அம்லாநா வரத ததாபி பாணயஸ் தே ॥ 45 ॥**

| | |
|---|---|
| ஹே வரத! | ஓ வரதனே! |
| ஸ்வயம் | நீ தானே |
| அம்போதேः அபிமந்தநம் | கடல் கடைவதை |
| சகர்த்த | செய்தருளினாய்; |
| புநः | அன்றியும் |
| க்ஷோணீத்ரம் | கோவர்த்தனமலையை |
| ஸப்தராத்ரம் | ஏழுநாளளவும் |
| அபிபः | தாங்கினாய்; |
| ஸப்தாநாம் உக்ஷ்ணாம் | ஏழு வ்ருஷபங்களினுடைய |
| கண்டம் ச | கழுத்தையும் |
| விவலயஸி ஸ்ம | நப்பின்னைப் பிராட்டிக்காக] முறித்தாய் |
| ததாபி | இத்தனை செய்து வைத்தும் |
| தே பாணயः | உனது திருக்கைகள் |
| அம்லாநாः | வாடவில்லை. |

* * * எம்பெருமானுடைய திருக்கைகள் செய்தருளின சில அதிமாநுஷ திவ்ய சேஷ்டிதங்களை அருளிச் செய்து "இத்தனை ஆனைத்தொழில்கள் செய்திருக்கச் செய்தேயும் இத்திருக்கைகள் இறையும் வாட்டமடையவில்லையே!" என்று விஸ்மிதராகிறார்.

"கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமு மழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர்சம்பிரதம்" என்ற பெரியாழ்வார் திருமொழியைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிற ச்லோகமாய்த்து இது. கோவர்த்தனோத்தரண சரிதமொன்றே யாய்த்து அப்பாசுரத்தில் ப்ரதிபாதிதம். இந்த ச்லோகத்தில், ஸமுத்ரமதநம் கோவர்த்தனோத்தரணம் ஸப்தர்ஷபபஞ்ஜநம்—என்ற மூன்று திவ்ய சேஷ்டிதங்களை அருளிச் செய்கிறார்.

[ததாபி தே பாணயः அம்லாநாः] இத்தனை ஆனைத்தொழில்கள் செய்த திருக்கைகள் சிறிதும் வாடவில்லையே! வதங்கவில்லையே! ஈதென்ன அற்புதம் என்கிறார். ஸமுத்ரமதந-கோவர்த்தனோத்தரண-ஸப்தர்ஷபபஞ்ஜநம் முதலிய சேஷ்டிதங்களைச் செய்தருளினவன் இப்பேரருளாளனே-என்கிற தாதாத்ம்யமும், அந்த மிடுக்குத் தோன்ற இப்போது ஹஸ்திகிரி மூர்த்தாவிலே எழுந்தருளி யிருக்கிறானென்னுமிடமும் இந்த ச்லோகத்திற்கு ப்ரதாநப்ரமேயமாம். ... ... ... (45)

**रिङ्खतो व्रजसदनाङ्गणेषु किं ते गोयष्टिग्रहणवशान्नु गोपगोष्ठ्याम् ।**
**आलम्बाक्षयनयसूत्रतोत्रयोर्वा पाणीनां वरद तवारुणत्वमासीत् ॥ ४६ ॥**

**ரிங்காதோ வ்ரஜஸதநாங்கணேஷு கிம் தே கோயஷ்டிக்ரஹணவசாந்நு கோபகோஷ்ட்யாம்**
**ஆலம்பாத்தயநய ஸூத்ரதோத்ரயோர் வா பாணீநாம் வரத தவாருணத்வமாஸீத் ॥ 46 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | வரதனே ! |
| வ்ரஜ ஸதந அங்கணேஷு | திருவாய்ப்பாடியிலுள்ள மனைகளின் முற்றங்களில் |
| ரிங்காத: கிம் | தவழ்ந்து விளையாடினதாலேயோ |
| கோப கோஷ்ட்யாம் | ஆயர்களின் திரளிலே |
| கோயஷ்டி க்ரஹண வசாந்நு | பசுக்களை மேய்க்கும் கோல்களைப் பிடித்ததனாலேயோ |
| ஹயநயஸூத்ர தோத்ரயோ: ஆலம்பாத்வா | பார்த்தஸாரதியா யிருந்தபோது தேர்க் குதிரைகளைசிக்ஷித்து நடத்தும் கருவிகளாயிருந்த கடிவாளத்தையும் சாட்டையையும் பிடித்ததனாலேயோ |
| தவ பாணீநாம் | உனது திருக்கைகளுக்கு |
| அருணத்வம் ஆஸீத் | சிவப்பு உண்டாயிற்று? |

* * * பேரருளாளனுடைய திருக்கைகளின் ஸ்வாபாவிகமான ஆருண்யத்திற்கு ஹேதுப்ரச்நம் பண்ணுகிறார். திருவாய்ப்பாடியில் ஆயர் மனைகள் தோறும் "தன் முகத்துச் சுட்டி தூங்கத் தூங்கத் தவழ்ந்துபோய், பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான்" என்றும் "தண்ணந் தாமரைக்-கண்ணனே கண்ணா! தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர் நடையால் மண்ணில் செம்பொடியாடிவந்து" என்றும் அருளிச்செய்தபடியே தவழ்ந்து விளையாடினபோது திருக்கைத்தலங்களைத் தரையிலே ஊன்றினமையாலே இவை சிவந்தனவோ ? அன்றியே * வேலிக்கோல் வெட்டியிலே யசோதையானவள் காக்கையை நோக்கி "காலிப்பின் போவாற் கோர் கோல் கொண்டுவா" கன்றுகள் மேய்ப்பதோர் கோல் கொண்டுவா" என்று பல காலும் வேண்டினபடியே அது கொண்டு கொடுத்த கோலைத் திருக்கையிலே தாங்கியிருப்பனிறே கண்ணபிரான்! "கோலால் நிரைமேய்த்து ஆயனாய்" என்றும் "கோலால் நிரைமேய்த்தவெம் கோவலர் கோவே" என்றும் அருளிச் செய்தார்களிறே. "லீலாயஷ்டிம் கரகிஸலயே தக்ஷிணேந்யஸ்ய தன்யாம்" என்றிறே வேதாந்த வாசிரியரும் அநுபவித்துப் பேசியது. அந்த கோயஷ்டியைப் பிடித்ததனாலே திருக்கைகள் சிவந்தனவோ ?

அன்றிக்கே, * பாரதத்துத்தேரில் பாகனாயூர்ந்தபோது "பற்றலர்வீயக் கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர்முன் நின்றானை" என்றபடி கசையும் கடிவாளமும் பற்றினமையாலே சிவந்தனவோ ? ஹயநயஸூத்ரமாவது—ஹயாநாம் (அச்வாநாம்) நய:-நயநம், சிக்ஷித்து நடத்துகை, அதுக்கு உபயுக்தமான ஸூத்ரம்—கடிவாளம்போன்றதொரு கயிறு. தோத்ரமாவது "தோத்ரம் ஸ்யாத்வ்ருஷபாச்வாதிப்ரேரணோ-சிததண்டக: " என்ற நிகண்டுவின்படி குதிரையைச் செலுத்துவதற்குரிய கருவியாகிற சாட்டை; இவையிரண்டும் பார்த்தஸாரதியாயிருந்த காலத்திலே கண்ணபிரானுடைய திருக்கையிலே யிருந்தனவாம்.

ரிங்கா—இரண்டு கைத்தலங்களையும் தரையிலே யூன்றி முழந்தாள்களாலே தவழ்ந்து செல்லுகைக்கு 'ரிங்கா' என்றும் ரிங்கணம்' என்றும் பெயர். 'ரிகி-கதௌ' இத்யேகே। பாலானும் ஹஸ்தபாதகமநம் ரிங்கா என்றான் ஜீவாநந்தன். ... ... ... ... ... (46)

**सर्वज्ञास्समुचितशक्तयस्सदैव त्वत्सेवानियमजुषस्त्वदेकभोगाः।**
**हेतीनामधिपतयस्सदा किमेतान् शोभार्थं वरद बिभर्षि हर्षतो वा ॥ ४७ ॥**

**ஸர்வஜ்ஞாஸ் ஸமுசிதசக்தயஸ் ஸதைவ த்வத்ஸேவாநியமஜுஷஸ் த்வதேகபோகா: ।**
**ஹேதீநாமதிபதயஸ் ஸதா கிமேதாந் சோபார்த்தம் வரத பிபர்ஷி ஹர்ஷதோ வா ॥ 47 ॥**

| | |
|---|---|
| ஹே வரத ! | பேரருளாளனே ! |
| ஹேதீநாம் அதிபதய: | ஆயுதத் தலைவர்களான சங்க சக்ராதிகள் |
| ஸர்வஜ்ஞா: | ஸர்வஜ்ஞர்களாயும் |
| ஸமுசித சக்தய: | அந்தஜ்ஞானத்துக்கு ஏற்ற சக்தியுள்ளவர்களாயும் |
| த்வதேக போகா: | அநந்யபோகர்களாயும் [அத ஏவ] |

| | | | |
|---|---|---|---|
| ஸதைவ | எப்போதுமே | சோபார்த்தம் வா | அழகுக்காகவோ |
| த்வத்ஸேவா நியமஜுஷஃ | உன்னைஸேவித்துக் கொண்டிருப்பதிலே நையத்யமுடையவர்களாயும் | ஹர்ஷதோவா | ஸந்தோஷத்தினாலோ |
| [ஸந்தி] | இருக்கிறார்கள்; | ஸதா | எப்போதும் |
| ஏதாந் | இப்படிப்பட்டவர்களை | பிபர்ஷி | வஹித்துக்கொண்டிருக்கிறாய் ? |

* * * திவ்யாயுதாழ்வார்களுடைய சேர்த்தியழகை யநுபவித்து, அவ்வநுபவ பரீவாஹமாக வொரு ப்ரச்நம் பண்ணுகிறார். ஹேதீநாமதிபதிகளாகிறார் "ரதாங்கசங்காஸிகதாதநுர்வரைஃ" என்னப்பட்ட திருவாழியாழ்வான், ஸ்ரீபாஞ்சஜந்யம், ஸ்ரீநந்தகம், ஸ்ரீகௌமோதகீ, ஸ்ரீசார்ங்கம்என்கிற பஞ்சாயுதாழ்வார்கள். இவர்களுக்கு ஆயுத கோடியிலும் ஆபரண கோடியிலும் பரிகணநமுண்டிறே. ஆயுதத்வாகாரேண இவ்வாழ்வார்களுக்கு தாரணம் அநாவச்யகமாகையாலே ஆபரணத்வேந தாரணமேயாயிருக்க வடுக்குமென்று திருவுள்ளம் பற்றி அதுதன்னை ப்ரச்நவ்யாஜேந வெளியிட்டருளுகிறு ராய்த்து.

[ஸர்வஜ்ஞாஸ் ஸமுசிதசக்தயஃ] எம்பெருமானுடைய, ஜ்ஞானசக்திகளுக்குக் குறையுண்டாகிவிறே திவ்யாயுதாழ்வார்களுடைய ஜ்ஞாந சக்திகளுக்குக் குறையுண்டாக ப்ரஸக்தி தானுள்ளது. * தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள்செய்யுமவனிறே அமரர்தலைவன்; எம்பெருமானுடைய ஹிதங்களை நன்கு அறிகைக்கீடான ஸர்வதோமுக ஜ்ஞான பௌஷ்கல்யத்தையுடையவர்களாயும், அறிந்து தலைக்கட்டவல்ல சக்திபூர்த்தியை யுடையவர்களாயு மிருக்கும் படியைச் சொல்லுகிறது.

[ஸதைவ த்வத்ஸேவாநியமஜுஷஃ] எப்போதும் உனக்கு அத்தாணிச் சேவகம் செய்வதையே* விரதமாகக் கொண்டவர்களாயுமிறே அவர்களிருப்பது. [த்வதேகபோகாஃ] உன்னையே ஸர்வவித போக்ய வர்க்கமுமாகக் கொண்டவர்களாகையாலே ஒரு நொடிப்பொழுதும் உன்னைவிட்டு அகன்றிருக்க மாட்டாதவர்களென்றபடி.

[ஏதாந் ஸதா பிபர்ஷி ; (எதத்) கிம் சோபார்த்தம்? (உத) ஹர்ஷதோ வா ?] இப்படிப்பட்ட பஞ்சாயுதாழ்வார்களை நீ ஒரு நொடிப்பொழுதும் விடாமல் ஏந்திக் கொண்டிருக்கைக்குக் காரணமில்லை. ஏனெனில்; இவர்கள் ஸர்வஜ்ஞர்களாயும் ஸமுசித சக்திகளாயு மிருக்கையாலே நீ ஏவிக் காரியம் கொள்ள வேண்டாதபடி உன்றன் திருவுள்ளக் கருத்தறிந்து வேண்டிற்றுச் செய்து தலைக்கட்டவல்லவர்கள்; 'இவர்களை நாம் விடாமல் கையிலே ஏந்திக்கொண்டிராவிடில் இவர்கள் ஸ்வார்த்த பரதயா எங்கேனும் அகன்று போய்விடக்கூடும்' என்று சங்கிக்கவுமிடமில்லாதபடி இவர்கள் த்வதேகபோகர்களாயும் த்வத்ஸேவாநியதர்களாயு மிராநின்றார்கள். ஆகையாலே இவர்களை நீ திருக்கையிலேந்திக் கொண்டிருக்கை நிஷ்ப்ரயோஜனம்; ஆயிருக்கச் செய்தேயும் நீ இவர்களை ஏந்திக்கொண்டிருக்கை வ்ருதா பரிச்ரமமாயிராதிறே; ஏதாகிலுமொரு சிறந்த ப்ரயோஜன மிருக்கவேணுமே. மாணிக்ய மந்திரத்திற்கு மங்களார்த்தமாக மணிவிளக்கேற்றுமா போலே கேவலம் சோபார்த்தமாகவே இவர்களை ஏந்தியிராநின்றாய்போலும். அன்றிக்கே அத்தாணிச் சேவகரை உகப்பின் மிகுதியாலே கடக்கவிட்டிருக்கமாட்டாத அரசர்கள் அவர்களை அநவரதம் அணைந்துகொண்டு தரித்திருக்குமாபோலே இவ்வாழ்வார்களுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வ சக்தித்வாத்யநுஸந்தான ஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தால்தான் நீ இவர்களை விடமாட்டாதே தரியாநின்றாயோ ?

"சோபார்த்தம்" என்பதற்கு "ஸ்வகீயசோபார்த்தம்" என்று பொருள்கொள்ளாதே 'ஆபரணத்துக்கழகு கொடுக்கும் பெருமாள், என்னுமாபோலே பஞ்சாயுதாழ்வார்களுக்கு சோபையை விளைப்பதற்காக' என்று பொருள் கொள்வதும் பொருந்தும். அவ்வோ வஸ்துக்கள் மிகச் சிறந்தவையாயிருந்தாலும் வகுத்த ஸ்தானத்திலே இராதவன்று அழகை யிழக்கு மத்தனையிறே. அப்படியாகாமே இவ்வாழ்வார்களைத் தம் பக்கிலே அமைத்துக்கொண்டு அவர்களுக்கு அழகு கொடுக்கிறாயோ வென்கை. (47)

किं धातुर्गगनविधानमातृकाऽभूत् वक्षस्ते वरद वरेण्य यत्र नाम ।
पद्मायां मुखमथ कौस्तुभश्च जातौ चन्द्रार्काबुडुनिकरायते तु हारः ॥ ४८ ॥

**கிம் தாதுர் ககநவிதாநமாத்ருகாபூத் வக்ஷஸ் தே வரத வரேண்ய யத்ர நாம ।**
**பத்மாயா முகமத கௌஸ்துபச்ச ஜாதௌ சந்த்ரார்க்காவுடுநிகராயதே து ஹாரஃ ॥ 48 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத வரேண்ய | வரமளிக்கும் தேவர்களில் சிறந்த வரதராஜனே ! | ஹாரஸ் து | முக்தாஹாரமோவென்றால் |
| யத்ர வக்ஷஸி | யாதொரு திருமார்பில் | உடுநிகராயதே | நக்ஷத்ரஸமூகம்போன்றதோ, |
| பத்மாயாஃமுகம் | பிராட்டியின் திருமுகமும் | [ததிதம்] | அப்படிப்பட்ட இந்த |
| அத கௌஸ்துபச் ச | கௌஸ்துப மணியும் | தே வக்ஷஃ | உனது திருமார்பானது |
| சந்த்ரார்க்கௌ | சந்த்ரஸூர்யர்களாக | தாதுஃ | ப்ரஹ்மாவுக்கு |
| ஜாதௌ | ஆயினவோ, | ககந விதாந மாத்ருகா அபூத் கிம் | ஆகாசமென்றொருபூதத்தைஸ்ருஷ்டிப்பதற்கு மூலநிதர்சநமாக ஆயிற்றோ ! |

* * * "உய்யவுலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை" என்றபடி அனைத்தையும் படைப்பதற்காகத் திருநாபீகமலத்தினின்றும் உன்னாலே தோற்றுவிக்கப்பட்ட சதுர்முகன் ஆகாசத்தை ஸ்ருஷ்டிப்பதற்கு நீ உன்னுடைய திருமார்பையே மாத்ருகையாகக் காட்டித் தந்தாயோ வென்கிறார்.

ஒன்றைப் பார்த்து ஒன்றை நிருமிக்குமிடத்தில் பூர்வவர்த்தியான வஸ்துவுக்கு **மாத்ருகை** யென்று பெயர். மாத்ருகைக்கு ப்ரதிஸம்பந்தியானது **புத்ரிகை** யெனப்படும். ஆகாச ஸ்ருஷ்டிக்குப் பேரருளாளனுடைய திருமார்வு **மாத்ருகை** யென்றது, திருமார்பைப்பார்த்து ஆகாசம் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்றபடி. ககநமாகிற புத்ரிகைக்குத் திருமார்பு மாத்ருகையானால் இரண்டிற்கும் ஸாதர்ம்யம் இருக்கவேணுமே யென்னில், உத்தரார்த்தத்திலே அந்த ஸாதர்ம்யம் உபபாதிக்கப்படுகிறது. *** அகல கில்லேனிறையு** மென்று அலர்மேல் மங்கை யுறைமார்பனாகையாலே இடைவிடாது திருமார்பிலே யெழுந்தருளியிரா நின்ற பிராட்டியின் திருமுகமண்டலம் சந்திரன் போலவும், * குருமாமணிப் பூண் குலாவித் திகழும் திருமார்பாகையாலே தள தள வென்று திகழாநின்ற ஸ்ரீகௌஸ்துபமானது ஸூர்யன் போலவும், முக்தாஹாரமானது நக்ஷத்ர கணங்கள் போலவும் இருக்கும்படியைச் சொல்லிற்று. ஆக இந்த ச்லோகத்தால் பேரருளாளனுடைய திருமார்பின் வைசால்யமும் நைர்மல்யமும் அருளிச்செய்யப்பட்டதாய்த்து. ... (48)

**अण्डानां त्वदुदरमामनन्ति सन्तः स्थानं तद्वरद कथं नु कार्श्यमस्य ।**
**माहात्म्यं स्वत इह येषु नूनमेषाम् ऋद्धिस्स्यान्महिमकरी न हीतरेषाम् ॥ ४९ ॥**

**அண்டாநாம் த்வதுதரமாமநந்தி ஸந்தஃ ஸ்தாநம் தத் வரத கதம் நு கார்ச்யமஸ்ய ।**
**மாஹாத்ம்யம் ஸ்வத இஹ யேஷு நூநமேஷாம் ருத்திஸ் ஸ்யாந்மஹிமகரீ ந ஹீதரேஷாம் ॥ 49 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ! | ஓ வரதனே ! | இஹ | இவ்வுலகில் |
| த்வதுதரம் | உனது திருவயிற்றை | யேஷு | எந்த வஸ்துக்களில் |
| அண்டாநாம் | அண்டங்களனைத்துக்கும் | மாஹாத்ம்யம் | பெருமையானது |
| ஸ்தாநம் | இருப்பிடமாக | ஸ்வதஃ | ஸ்வதஸ்ஸித்தமோ |
| ஸந்தஃ | [பராசராதி] ப்ரஹ்மவித்துக்கள் | ஏஷாம் | இந்த வஸ்துக்களுக்குத்தான் |
| ஆமநந்தி | இயம்புகின்றனர். | ருத்திஃ | [உண்டாகிற] ஸம்ருத்தியானது |
| தத் | அப்படியிருக்க | மஹிமகரீ | பெருமையை விளைக்கவற்று ; |
| அஸ்ய | இந்தத் திருவயிற்றுக்கு | இதரேஷாம் | (இயற்கையான பெருமையில்லாத) மற்ற வஸ்துக்களுக்கு [உண்டாகிற] |
| கார்ச்யம் | மெலிவானது | ருத்திஃ | ஸம்ருத்தியானது |
| கதம் நு | எங்ஙனேயோ ! [என்று சங்கித்துத் தாமே ஸமாஹிதராகிறார்] | | |

மஹிமகரீ ந ஹி { பெருமையை விளைவிக்க வல்ல தன்று. | நூநம் இது திண்ணம்.

* * * பேருளாளனுடைய திருவுதரத்தின் கார்ச்யத்தை சங்கா ஸமாதான முத்ரையாலே அருளிச் செய்கிறார்.

பேருளாளனே! நீ * அண்டரண்ட பகிரண்டத் தொருமாநில மெழுமால்[வரை முற்று முண்டவனு கையாலே உன் திருவயிற்றிலே எத்தனையோ அண்டங்கள் கிடப்பதாகவிறே பராசரபாராசர்யாதி மஹர்ஷிகள் சொல்லியிராநின்றார்கள். அப்படியிருக்க இத்திருவுதரம் பெருத்தன்றோ விளங்கவேணும் உண்டதுருக்காட்டாதே சிறுத்துக் கிடப்பானேன்? என்று பூர்வார்த்தத்தாலே சங்கித்தபடி.

ஸ்வகீயசங்கையை ச்லேஷபங்கியாலே ஸ்வயமேவ பரிஹரித்துக் கொள்ளுகிறார். எந்த வஸ்துக்கள் ஸ்வதஸ்ஸித்தமான மாஹாத்ம்யத்தை யுடையனவோ அந்த வஸ்துக்களுக்கு உண்டாகிற ஸம்ருத்திதான் அவற்றுக்கு ஒரு பெருமையை விளைக்கக் கடவதாம்; ஸ்வதஸ்ஸித்தமாஹாத்ம்ய சூந்யமாய் அத ஏவ ஸ்வதோ லகுவான பதார்த்தங்களுக்கு ஸம்ருத்தி யுண்டானாலும் அதனால் ஒரு பெருமையும் விளையாது காண் என்றபடி.

இங்கே "மாஹாத்ம்யம்" என்கிற பதத்திற்கு இரண்டர்த்தம். உலகிலே ஆகாரப்ரயுக்தமான மஹத்த்வமென்ன, குணப்ரயுக்தமான மஹத்த்வமென்ன ஆக இவ்விரண்டு வகையான மஹத்த்வத்தையும் விவக்ஷித்து "மஹான்" என்று வ்யபதேசிப்பதுண்டு. பெரும் பெரிய மலைகள் வீடுகள் ஆறுகள் முதலிய உருவிற்பெரிய வஸ்துக்களை மஹச்சப்தத்தாலே வ்யவஹரிப்பது போலவே மேலான குணங்கள் படைத்த மஹாநுபாவர்களையும் மஹான்களென்கிறோம். அவர்கள் உருவத்தில் பெருமையுடையவர்களல்லாவிடினும் ["சிறுமாமனிசர்" என்கிறபடியே] பெருங்குணங்கள் படைத்திருப்பது பற்றியே அவர்களைப் பெரியோர்களென்கிறோம் அந்தப் பெருமையானது நேராக அவர்களிடத்திலே இல்லாவிடினும் குணங்கள் வழியாக இருப்பது பற்றி மஹச்சப்தேந வ்யபதேசம் நிகழ்கின்றது. ஆகவே நேராக ஸ்வரூபத்திலிருக்கும் பெருமை யொன்றும் குணத்வாரா ஏற்படுகிற பெருமை யொன்றுமாக இரண்டுவிதமான பெருமைகளும் மாஹாத்ம்யசப்தத்தாலே விவக்ஷிக்கப்படலாம்; "மாஹாத்ம்யம் ஸ்வதஃ" இத்யாதி ப்ரக்ருதஸ்தலத்தில் மாஹாத்ம்ய சப்தத்திற்கு ஸ்வரூபதோ ப்ருஹத்த்வமாகிற உருவப்பெருமை இரண்டாவது அர்த்தமாகக் கொள்ளப்படவேணும். குணதோ மஹத்த்வமாகிற ஸ்வபாவப் பெருமையே முதலர்த்தமாகக் கடவது.

நிஷ்க்ருஷ்டதாத்பர்யமேதென்னில், குலம் ரூபம் வயோ வித்யா என்னும்படியான சிறந்த குணங்களால் பெருமை பெற்றிருக்துள்ளவர்களுக்கு உண்டாகிறவொரு ஸம்ருத்திதான் அவர்களுக்குப் பெருமை பரவச் செய்யுமே யல்லது ஒரு குணமுமற்ற க்ஷுத்ர புருஷர்களுக்கு எவ்வளவு ஸம்ருத்தி யுண்டானாலும் அவர்களுக்கு ஸ்வதஸ்ஸித்தமான லாகவந்தான் விளங்கும். பெருமை யென்பது ஒருகாலும் உண்டாகமாட்டாது. இது லோகத்ருஷ்டமான விஷயம். இந்த த்ருஷ்டாந்தம் ப்ரக்ருதத்தில் உதரகார்ச்ய ஸமர்த்தநத்திற்கு எங்ஙனே உபயுக்தமாகிற தென்னில்; வ்யதிரேகமுகத்தாலேயாகிறது; பேருளாளனுடைய திருவுதரத்திற்கு ஸ்வதோ மாஹாத்ம்ய மில்லாமையால் அண்டஸம்ருத்தியானது மஹிமகரியாகவில்லை யென்றதாகிறது. இப்போது மாஹாத்ம்ய சப்தார்த்தம் குணதோ மஹத்த்வமல்ல; ஸ்வரூபதோ மஹத்த்வமேயாம். ஸ்வதஃ க்ருசமாயிறே திருவுதர மிருப்பது இங்ஙனே அர்த்தபேத முண்டாகையாலிறே ச்லேஷபங்கி யென்னப்பட்டது. பேருளாளனுடைய திருவுதரத்திற்கு ஸ்வதோ மாஹாத்ம்யமில்லையென்று சொன்னால் அது மஹாபசாரமன்றோ என்று சிலர் பேசுவது, சொற்சுவை யறியாமை. வியாஜஸ்துதி யலங்காரம் நினைப்பது. ... ... ... ... (49)

सौन्दर्यामृतरसवाहवेगजस्स्यात् आवर्तस्तव किल पद्मनाभ! नाभिः ।
तत्पद्मं वरद विभाति कान्तिमय्याः लक्ष्म्यास्ते सकलवपुर्जुषो नु सद्म ॥ ५० ॥

ஸௌந்தர்யாம்ருதரஸவாஹவேகஜஸ் ஸ்யாத் ஆவர்த்த ஸ்தவ கில பத்மநாப நாபிஃ।
தத்பத்மம் வரத விபாதி காந்திமய்யாஃ லக்ஷ்ம்யாஸ் தே ஸகலவபுர்ஜுஷோஸ் நு ஸத்ம ॥ 50 ॥

| | |
|---|---|
| பத்மநாப ! | பற்பநாபனுகிய |
| ஹே வரத ! | வரதனே ! |
| தவ நாபிః | உனது திருநாபியானது |
| ஸௌந்தர்யாம்ருத ரஸவாஹ வேகஜః | திருமேனி யழகாகிற அம்ருதரஸ ப்ரவாஹத்தின் வேகத்தாலே யுண்டான |
| ஆவர்த்தః ஸ்யாத் | சுழியாம் |
| தத்பத்மம் | அந்த நாபியிலுள்ள தாமரை மலரானது |
| தே | உன்னுடைய |
| ஸகல வபுர் ஜுஷః | திருமேனி யெங்கும் வ்யாபித்திருக்கிற |
| காந்திமய்யாః | காந்தியாகிற |
| லக்ஷ்ம்யாః | லக்ஷ்மிக்கு |
| ஸத்ம நு | இருப்பிடம் போல |
| விபாதி | விளங்குகின்றது. |

* * * கொப்பூழிலெழு கமலப்பூவழகிலீடுபட்டு அருளிச்செய்கிருர். பூர்வார்த்தத்தாலே திருநாபியையும், உத்தரார்த்தத்தாலே திருநாபிக்கமலத்தையும் வருணிக்கிறபடி.

[ஹே பத்மநாப ! தவ நாபிః ஸௌந்தர்யாம்ருதரஸவாஹவேகஜః ஆவர்த்தஸ்ஸ்யாத் கில] மஹாப்ரவாஹ முள்ள விடங்களிலே சுழியுண்டாவதை மஹாநதி முதலியவற்றிலே காணு நின்ருேம். பேரருளாளனுடைய திருமேனியடங்கலும் பெருவெள்ளமாகோத்துப் பெருகாநின்ற ஸௌந்தர்ய ப்ரவாஹத்தின் வேகத்தினுலே யுண்டான சுழிதான் திருநாபியென்று வ்யபதேசிக்கப்படுகிறதென்கிருர்.

[தத்பத்மமித்யாதி] "தன்னுபி வலயத்துப் பேரொளிசேர் மன்னிய தாமரை மாமலர் பூத்து" [பெரிய திருமடல்] என்கிறபடியே அந்தத் திருநாபியிலே தோன்றியுள்ள தாமரைமலரானது.— திருமேனியெங்கும் திகழாநின்ற காந்தியாகிற பிராட்டியின் இருப்பிடமோ வென்கிருர். தாமரை மலர் பிராட்டிக்கிருப்பிடமாயிறே யிருப்பது. இந்த நாபீ கமலமும் ஒரு பிராட்டிக் கிருப்பிடமாக வேண்டுமே ; திருமேனியின் லாவண்ய ஸம்பத்தை லக்ஷ்மீத்வேந ருபணம் பண்ணி அந்த லக்ஷ்மிக்கிது இருப்பிடமென்கிருர். இதனுல் நாபீகமலம் திருமேனி முழுமைக்கும் சோபாவஹமா யிருக்கும்படியை அருளிச்செய்தவாறு. .... ... .... .... ... .... ... .... (50)

या दामोदर इति नामदा तवासीत् सा दामा किल किणकारिणी बभूव ।
तन्नूनं वरद वलित्रयच्छलेन त्वन्मध्यप्रथमविभूषणीबभूव ॥ ५१ ॥

யா தாமோதர இதி நாமதா தவாஸீத் ஸா தாமா கில கிணகாரிணீ பபூவ ।
தந்நூநம் வரத வலித்ரயச்சலேந த்வந்மத்யப்ரதமவிபூஷணீபபூவ ॥ 51 ॥

| | |
|---|---|
| ஹே வரத ! | ஓ வரதனே ! |
| யா தாமா | யாதொரு தாம்பானது |
| தவ | உனக்கு |
| தாமோதரః இதி நாமதா ஆஸீத் | தாமோதரனென்னும் பெயரைத் தந்ததோ |
| ஸா கில | அந்தத்தாம்பன்ருே |
| கிணகாரிணீ பபூவ | தழும்பையு முண்டு பண்ணிற்று ; |
| தத் | அந்தத் தழும்பானது |
| வலித்ரயச் சலேந | த்ரிவளியென்கிற வ்யாஜத்தால் |
| த்வந்மத்ய ப்ரதம விபூஷணீ பபூவ | உனது மத்யப்ரதேசத்திற்கு முதன்மையான பூஷணமாயிற்று. |

* * * பேரருளாளனுடைய திருவுதரத்திலே திகழ்கின்ற த்ரிவளிகளை ஒரு சமத்காரமாக வருணித்தருளுகிருர். [ஹே வரத ! யா தாமா தவ தாமோதர இதி நாமதா ஆஸீத்] யசோதைப்பிராட்டி கண்ணபிரானுடைய திருவயிற்றிலே தாம்பைக்கொண்டு கட்டினுளாகையாலே அது தோன்றத் தாமோதரனென்று திருநாமமாயிற்று. * தாமோதர இதி க்யாதோ யசோதா தாமபந்தநாத் * என்றிறே நிருக்தியும். ஆகையாலே யாதொரு தாம்பு உனக்கு தாமோதரனென்னும் திருநாமத்திற்கு ஹேது வாய்த்தோ.

[ஸா தாமா கில கிணகாரிணீ பபூவ] யசோதை கட்டின அந்தத் தாம்பானது தழும்பை யுண்டாகிற் றென்றபடி. 'தாம்மோருருட்டித் தயிர் நெய் விழுங்கிட்டு தாமோ தவழ்வரென்று ஆய்ச்சியர் தாம்பினல், தாம்மோ தரக்கையாலார்க்கத் தழும்பிருந்த தாமோதரா!' என்னக் கடவதிறே. பொய்கையாழ்வார் தாமும் 'அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன், பொறிகொள் சிறையுவண மூர்ந்தாய், வெறிகமழும் காம்பேய் மென்தோளி கடை வெண்ணெய் உண்டாயை, தாம்பே கொண்டார்த்த தழும்பு' என்றருளிச் செய்தாரிறே.

தழும்பாவது - தாமபந்தனத்தின் நெருக்கத்தாலே உண்டான காய்ப்பு.

[தத் வலித்ரயச்சலேந த்வந்மத்யப்ரதமவிபூஷணீ பபூவ] யசோதைப் பிராட்டி கட்டும்போது தாம்பை மும்மடியாக்கிக் கொண்டு கட்டுகையாலே த்ரிகுணீக்ருதமான அந்தத் தாம்பின் விமர்தாதிசயத் தாலுண்டான கிணத்ரயமே வளித்ரயம்போல் காட்சி தந்து சிறந்ததொரு மத்ய பூஷணமாக விளங்குகின்ற தென்றபடி. நாம் என்பது உத்ப்ரேக்ஷாலிங்கம். விபூஷணீ பபூவ என்னுதே 'ப்ரதமவிபூஷணீ பபூவ' என்றது ஸௌலப்ய ஸௌசீல்யங்களை வெளிப்படுத்தும் கோலமே முதன்மை பெறுமென்ற திருவுள்ளத்தாலாம். 'த்வன்மத்யே ப்ரதமவிபூஷணீ பபூவ' என்பதும் பாடம்.

ஆக இந்த ச்லோகத்தால் கண்ணபிரானுக்கும் தேவபிரானுக்குமுள்ள தாதாத்ம்யம் வெளிப்படும். .... .... .... ... .... .... ... .... (51)

**यादृग्बीजाद्युषितभुवि यद्वस्तु हस्तीश जातं तत् तादृक्षं फलति हि फलं त्वय्यपीक्षामहे तत् ।**
**यस्मादण्डाद्युषित उदरे तावके जायमानं पद्मं पद्मानन किल फलत्यण्डषण्डानखण्डान् ॥ ५२ ॥**

**யாத்ருக்பீஜாத்யுஷிதபுவி யத் வஸ்து ஹஸ்தீச ஜாதம்**
**தத் தாத்ருக்ஷம் பலதி ஹி பலம் த்வய்யபீக்ஷாமஹே தத் ।**
**யஸ்மாதண்டாத்யுஷித உதரே தாவகே ஜாயமானம்**
**பத்மம் பத்மாநந கில பலத்யண்டஷண்டாநகண்டாந் ॥ 52 ॥**

| | |
|---|---|
| பத்மாநந | தாமரை போன்ற திருமுகத்தை யுடைய |
| ஹஸ்தீச | ஸ்ரீஹஸ்திகிரிநாதனே ! |
| யாத்ருக்பீஜாத்யுஷிதபுவி | எந்த ஜாதீயமான விதை பொருந்திய விடத்தில் |
| யத் வஸ்து | எந்த வஸ்துவானது |
| ஜாதம் | உண்டானதோ |
| தத் | அந்த வஸ்துவானது |
| தாத்ருக்ஷம் பலம் | அந்த விதையின் ஸஜாதீயமான பலத்தை |
| பலதி ஹி | உண்டாக்குகின்றதன்றோ |
| தத் | அந்த ந்யாயத்தை |
| த்வயி அபி | உன்னிடத்திலும் |
| ஈக்ஷாமஹே | காண்கின்றோம் ; |
| யஸ்மாத் | யாதொரு காரணத்தாலே |
| அண்டாத்யுஷிதே | அண்டங்கள் வஸிக்கப்பெற்ற |
| தாவகே உதரே | உனது திருவயிற்றில் |
| ஜாயமாநம் | உண்டாகிற |
| பத்மம் | [நாபிக்] கமலமானது |
| அகண்டாந் | அளவற்ற |
| அண்டஷண்டாந் | அண்ட ஸமுகங்களை |
| பலதி கில | உண்டாக்குகின்றதோ. |

* * * ஸிம்ஹாவலோகநந்யாயத்தாலே திரியவும் திருநாபீ கமலத்திலே யீடுபட்டருளிச் செய்கிறார். ஸகல ப்ரம்மாண்டங்களும் இதிலிருந்து உண்டாகும்படியை ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிறார்.

கடலையை விதைத்தால் காராமணி விளையாது. காராமணியை விதைத்தால் கடலை விளையாது. 'யவா: கிலோப்தா ந பவந்தி சாலய:' என்றதிறே.

[யாத்ருக்பீஜாத்யுஷிதபுவி யத்வஸ்து ஹ்ஸ்தீச ஜாதம் தத் தாத்ருக்ஷம் பலம் பலதி ஹி] எந்த பதார்த்தம் எந்த பீஜத்தாலே விளைகின்றதோ அந்த பதார்த்தமானது தத்பீஜ ஸஜாதீயமான பலத்தையே விளைவிக்கும். இவ்விஷயம் உலகத்தில் காணப்படுவது போல உன்னளவிலும் காணப்படா நின்றது. எங்ஙனேயென்னில், [யஸ்மாதித்யாதி] உன்னுடைய திருவுதரம் அண்டங்களுக்கெல்லாம் இருப்பிடமானது. அப்படிப்பட்ட திருவுதரத்திலே யுண்டான கமலமானது நிஜபீஜ ஸஜாதீயங்களான அண்டங்களையே யுண்டுபண்ணு நின்றது. இத்தால் 'உந்திமேல் நான்முகனைப் படைத்தான் உலகுண்டவனெந்தை பெம்மான்' என்னுமிடம் சொல்லிற்றுகிறது. 'அண்டாத்யுஷிதே தாவகே உதரே' என்னும்போது 'அண்டானும் த்வதுதரமாமநந்தி ஸந்த³ஸ்தானம்' என்ற கீழில் ச்லோகம் ஸ்மர்த்தவ்யம். நாபிபத்மமானது ஸ்வஸ்மாதுத்பன்ன சதுர்முகத்வாரா அண்டஷண்டங்களுக்கு உத்பாதகமென்பர். எம்பெருமானுடைய பரத்வத்தை மூதலிக்கைக்கு அடியிடுகிறதாய்த்து இந்த ச்லோகம்.

இந்த ச்லோகம் முதற்கொண்டு 'சம்போரம்போருஹமுக' என்னும் ச்லோகமளவுள்ள தசகம்— மந்தாக்ராந்தாவ்ருத்தம். 'மந்தாக்ராந்தா ஜலதிஷடகைர்மோபநௌ தௌ குருசேத்' இதி தல்லக்ஷணம்.

... .... .... (52)

अज्ञे यज्ञेश्वर किल जने क्वाप्यदर्शं विमर्शं विश्वाधीशः कतम इति तन्निर्णयं वर्णयामः ।
व्यावक्रोशी नृषु समुदिता याननुपाश्रित्य तेऽपि ब्रह्माद्यास्ते वरद जनितास्तुन्दकन्दारविन्दे ।

**அஜ்ஞே யஜ்ஞேச்வர கில ஜநே க்வாப்யதர்சம் விமர்சம்**
**விச்வாதீச³ கதம இதி தந்நிர்ணயம் வர்ணயாம³।**
**வ்யாவக்ரோசீ ந்ருஷு ஸமுதிதா யாநுபாச்ரித்ய தேபி**
**ப்ரஹ்மாத்யாஸ் தே வரத ஜநிதாஸ் துந்தகந்தாரவிந்தே ॥ 53 ॥**

| | |
|---|---|
| யஜ்ஞேச்வர ! | ஸர்வயஜ்ஞ ஸமாராத்யனுன |
| ஹே வரத ! | ஓ வரதனே ! |
| க்வாபி அஜ்ஞே ஜநே | [அடியேனுகிற] ஒரு மூட ஜனத்திடத்தில் |
| விச்வாதீச³ கதம³ இதி விமர்சம் | 'ஸர்வ லோகங்களுக்கும் தலைவன் யார்' என்ற ஆராய்ச்சியை |
| அதர்சம் | நோக்கினேன்; [ஸர்வேச்வரன்யார்? என்று அஜ்ஞனை வடியேன் ஆராய்ந்து பார்த்தேனென்கை] |
| தந்நிர்ணயம் | அவ் வாராய்ச்சி முடிவை |
| வர்ணயாம³ | சொல்கின்றோம் ; |

| | |
|---|---|
| யாந் உபாச்ரித்ய | யாவர் சில ப்ரஹ்மாதிகளைப்பற்ற |
| வ்யாவக்ரோசீ | [பரத்வ விஷயமான] மாறுன கோலாஹலம் |
| ந்ருஷு ஸமுதிதா | [தேவதாந்தரப்ரவணரான] மனிதர்களிடத்தில் உண்டாயிற்றோ |
| தே ப்ரஹ்மாத்யா அபி | அந்த பிரமனுதி தேவதாந்தரங்களும் |
| தே | உன்னுடைய |
| துந்தகந்த அரவிந்தே | உந்தியை மூலகந்தமாக வுடைய தாமரை மலரில் |
| ஜநிதா³ | உண்டாக்கப் பட்டவை [என்று நிர்ணயம் தேறிற்றென்றபடி]. |

* * * 'மேவித்தொழும் பிரமன் சிவனிந்திரனுதிக்கெல்லாம், நாவிக்கமல முதற்கிழங்கே' என்னு மர்த்தமருளிச் செய்கிறுரிதில். தேவதாந்தரங்கள் பக்கலிலே பரத்வசங்கைபண்ணுமவர்கட்கெல்லாம் இந்தத் திருநாபிக்கமலத்தைத் தொழுது தெளியலாமே யென்கிறுர் போலும்.

[யஜ்ஞேச்வரா] இந்த ச்லோகத்தின் ப்ரமேயத்திற்கு அநுகுணமாயிருக்கிறதாய்த்து இந்த ஸம்போதநம். இந்த்ராதிகளை தேவதையாகக்கொண்டு பண்ணும் யஜ்ஞங்களெல்லாம் பகவதாராதனமாகவே தலைக்கட்டுமென்றிறே பரமைகாந்திஸித்தாந்தம். 'பஞ்சமஹாயஜ்ஞாதிகளான நித்யநைமித்திகங்களில் அவர்கள் பேர் சொல்லும்போது 'யே யஜந்தி பித்ருன் தேவான் ப்ராஹ்மணுன் ஸஹுதாசனுன்। ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே' இத்யாதிகளில்

மஹர்ஷிகளறுதியிட்ட படியே—ராஜஸேவகர் ராஜாவுக்கு சட்டைமேலே மாலையையும் ஆபரணத்தையுமிட்டாலும் சட்டையில் துவக்கற்று ராஜாவின் ப்ரீதியே ப்ரயோஜனமாகத் தெளிந்திருக்குமாபோலவும்' இத்யாதி ரஹஸ்யத்ரயஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்திலே அருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம்.

[அஜ்ஞே க்வாபி ஜநே "விச்வாதீச: கதம:" இதி விமர்சம் அதர்சம்] ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரேந்த்ராதிகளென்று சொல்லப்படுகிறவர்களுக்குள்ளே ஸர்வேச்வரன் யாராகக்கூடுமென்று அறிவிலாமனிசனாகிய நான் ஆராயப்புகுந்தேன் என்றபடி. [தந்நிர்ணயம் வர்ணயாம:] அந்த ஆராய்ச்சியின் முடிவு என்னாயிற்றென்னில்; சொல்லுகேன் கேண்மின் என்கிறார். அதுதன்னை யருளிச் செய்கிறார் வ்யாவக்ரோசீத்யாதியாலே. [யாநுபாச்ரித்ய ந்ருஷு வ்யாவக்ரோசீ ஸமுதிதா தேஹபி ப்ரஹ்மாத்யா: தே துந்தகந்தாரவிந்தே ஜநிதா:] 'அபிநிவேசவசீக்ருதசேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:' என்கிறபடியே ஒரொன்றிலே அபிநிவேசாதிசயப்ரயுக்தமான அவிவேகத்தாலே ஒரோ சுருதி வாக்யங்களிலே மண்டிக் கிடந்து ஸ்வேச்சைக்கநுகுணமாக அபார்த்தங்களைப் பண்ணி * நளிர்மதிச்சடையனை நம்புவார் சிலரும் * நான்முகக்கடவுளை நம்புவார் சிலரும் * இமையவர் தலைவனை யேத்துவார் சிலருமாய் இப்படி யாவை யாவை சில தேவதாந்தரங்களைப்பற்ற பரத்வவிவாதம் ஜநிதர்மாக்களுக்கு உண்டாயிற்றே, அந்த தேவதாந்தரங்களுக்கடைய * நாபிக் கமலமேயிறே முதற்கிழங்காயிரா நின்றது. கார்யவர்க்கத்திலே ஏகதேசிகளாயுள்ளவர்களுக்கு விச்வாதீசத்வப்ரஸக்தியில்லை.

[வ்யாவக்ரோசீ]-பரஸ்பரவிவாத இதி பர்யவஸிதோऽர்த்த: 'கர்மவ்யதிஹாரே ணச் ஸ்த்ரியாம்' (3—3—43) என்கிற ஸூத்ரத்தால் ணச்ப்ரத்யயமும், 'ணச: ஸ்த்ரியாமஞ்' [5—4—14] என்கிற ஸூத்ரத்தால் ஸ்வார்த்திகமான அஞ் ப்ரத்யயமும் 'டிட்டாணஞ்,' இத்யாதி ஸூத்ரத்தாலே ஙீயும் ப்ராப்தமாய் "வ்யாவக்ரோசீ" என்று ரூபம் நிஷ்பந்நமாய்த்து. மாககாவ்யத்தில் எட்டாவது ஸர்க்கத்தில் [ச்லோ 32] 'முக்தத்வாதவிதிதகைதவப்ரயோகா:' என்கிற ச்லோகத்தில் 'வ்யாத்யுக்ஷீம்' என்று ப்ரயோகித்திருப்பதும், அங்கு மல்லிநாதவ்யாக்யாதா—'வ்யாத்யுக்ஷீம்'-வ்யதிஹாரேண உத்க்ஷணம் பரஸ்பராப்யுக்ஷணமித்யர்த்த:' என்று விவரித்திருப்பதும் இங்கேயநுஸந்தேயம்.

ஸித்தாந்தகௌமுதியில் உத்தரக்ருதந்தத்தில் 'ந கர்ம வ்யதிஹாரே' என்னும் ஸூத்திரத்தின் கீழ் 'வ்யாவக்ரோசீ' என்று உதாஹரணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அங்கு பாலமநோரமையில்—'வ்யாவக்ரோசீ-பரஸ்பரம் நிந்தக இத்யர்த்த:' என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் அது ப்ராமாதிகமென்றே கொள்ளவேணும். 'வ்யாவக்ரோசீ' என்பது கௌரீ சப்தம் போலே ஸ்த்ரீப்ரத்யயாந்த சப்தமென்னுமிடத்தை மறந்து நகாராந்தபுல்லிங்கமாக ப்ரமித்து 'பரஸ்பரம் நிந்தக:' என்கிற அர்த்தம் எழுதப்பட்டதென்று தெளிக.

விமர்சஸமயத்திலே தம்மை அத்யல்பதயா அநுஸந்தித்தமைக்காக 'அதர்சம்' என்று ஏகவசநமாகவும், தந்நிர்ணயப்ரகாசநஸமயத்தில் விஷய கௌரவாநுகுணமாகத் தம்மைக் கௌரவ்யராக அநுஸந்தித்தமைக்காக 'வர்ணயாம:' என்று பஹுவசநமாகவும் ப்ரயோகித்தருளினரென்க.

[யாநுபாச்ரித்ய வ்யாவக்ரோசீ ந்ருஷு ஸமுதிதா] 'ந்ருஷு' என்றது—தத்தத்தேவதா ப்ரவணர்களான மநுஷ்யர்களை. சதுர்முகபக்தர்கள் ருத்ராதிகளின் பாரம்யத்தை தூஷித்து சதுர்முகபாரம்ய ப்ரதிஷ்டாபகமாக வாதிப்பது, ருத்ரபக்தர்கள் சதுர்முகாதிகளின் பாரம்யத்தை தூஷித்து ருத்ரபாரம்யப்ரதிஷ்டாபகமாக வாதிப்பது, இப்படி அவரவர்கள் ஸ்வஸ்வதேவதா பூஷணமாகவும் இதர தேவதா தூஷணமாகவும் வாதிப்பது.

[துந்தகந்தாரவிந்தே] துந்தம்--உதரம்; ததேவ கந்த:--மூலம் யஸ்ய தத்; தாத்ருசே அரவிந்தே நாபிகமலே இதி யாவத். ... ... ... ... ... (53)

**मुष्णन् कृष्णः प्रियनिजजनैर्जग्ध्यहैयङ्गवीनं दाम्ना भूम्ना वरद हि यया त्वं यशोदाकराभ्याम् ।**
**बद्धो बन्धक्षपणकरणीं तां किलाद्यापि मातुः प्रेम्णा गात्राभरणमुदराबन्धनाख्यं बिभर्षि ॥ ५४ ॥**

**முஷ்ணங் க்ருஷ்ண: ப்ரியநிஜஜனைர் ஜய்யஹையங்கவீநம்**
**தாம்நா பூம்நா வரத ஹி யயா த்வம் யசோதாகராப்யாம் ।**
**பத்தோ பந்தக்ஷபணகரணீம் தாம் கிலாத்யாபி மாது:**
**ப்ரேம்ணு காத்ராபரணமுதராபந்தநாக்க்யம் பிபர்ஷி॥ 54॥**

| | |
|---|---|
| ஹே வரத ! | ஓ வரதனே ! |
| க்ருஷ்ண: த்வம் | க்ருஷ்ணுவதாரம் செய்தருளிய நீ |
| ஜய்ய ஹையங் கவீநம் | ஜயித்து ஸம்பாதிக்கக்கூடிய கவ்யத்தை |
| ப்ரிய நிஜ ஜனைஸ்ஸஹ | தோழன்மாரோடுகூட |
| முஷ்ணங் | களவாடினவனுய் |
| யசோதா கராப்யாம் | யசோதையின் கைகளால் |
| யயா தாம்நா | யாதொரு தாம்பினுலே |
| பூம்நா | மிகவும் |
| பத்த: | கட்டுண்டவனுய் |
| அபூ: | ஆனுயோ |
| பந்தக்ஷபண கரணீம் | [ஸம்ஸாரபந்தமென்னும்] கட்டை அவிழ்த்துத்தொலைக்கவல்ல |
| தாம் | அந்தத் தாம்பை |
| அத்யாபி | [பேரருளாளனுக ஸேவை ஸாதிக்கிற] இப்போதும் |
| மாது: ப்ரேம்ணு | தாயினிடத்திலன்பினுல் |
| உதராபந்த நாக்க்யம் | உதரபந்தனமென்று பெயர் பூண்ட |
| காத்ராபரணம் | தேஹபூஷணமாக |
| பிபர்ஷி | சாத்தியருளாநின்ருய். |

* * * பேரருளாளனுடைய திருநாபீகமலத்திலே சுழியாறுபட்டுக் கிடந்த ஆழ்வான் திருவுள்ளம் அந்தக் கமலத்தோடேசேர்ந்த திருவுதரபந்தநத்திலே ஆழங்கால்படுகிற படியைச் சொல்லுகிறது இந்த ச்லோகம். திருநாபீகமலத்திற்கோவென்ருல் வெறும் ப்ரஹ்மாவொருவனுக்கே இருப்பிடமாகப் பெற்ற மேன்மையும் அழகுமன்ரோ வுள்ளது. அதுக்காச்ரயமான நம்மைப் பார்த்தால் 'த்ரிவிதசிதசித்ப்ருந்தம் துந்தாவலம்பிவலிதரயம் விகணயதி வைச்வர்யம் வ்யாக்யாதி ரங்கமஹேசிது: ! ப்ரணதவசதாம் ப்ருதே தாமோதரத்வகர: கிண: தது்பயகுணக்ருஷ்டம் பட்டம் கிலோதரபந்தநம்॥' [ஸ்ரீரங்கராஜஸ்தவே] என்கிற படியே த்ரிவிதசேதநவர்க்கத்துக்குமாச்ரயமான மேன்மையையும், ஆச்ரிதர்க்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியோமாய் ஸௌலப்ய நீர்மையையும் உடையோமான ஏற்றத்தால் பட்டங்கட்டியன்ரோ நாமிருப்பது ; என்று திருவுதரமானது திருநாபிகமலத்திற் காட்டில் தனக்குண்டான ஏற்றத்தைக் காட்டி நாபிகமலாவகாடமான ஆழ்வான்திருவுள்ளத்தை மீளவும் இச்சிக்க, அத்திருவயிற்றை ஆச்ரயமாகப்பற்றி நிற்கிற திருவுதரபந்தனமானது தன் பக்கலிலே வரவீர்த்து ஸ்வபோக்யதையை அநுபவிப்பிக்க இனியராய்ப்பேசுகிருர். பேரருளாளனுடைய திருவுதரபந்தனமென்கிற திருவாபரணம் தாமோதரத்வக்யாபகமான தாமபந்தனத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாயிருக்கும்படியை வெளியிடுவதாய்த்து இந்த ச்லோகம். 'ஜய்ய ஹையங்கவீநம்' என்ற விடத்து 'ஜய்ய' என்று தனிப்பதமாக்கி "ப்ரியநிஜ-ஜனைர்ஜய்ய!" என்று ஸம்புத்த்யந்தமாக யோஜித்து ஸ்வகீயபக்தஜனை: ஜேதும் சக்ய:-பக்தபரதந்த்ரேத்யர்த்த:' என்றுரைப்பாருமுண்டு. இவ்வர்த்தம் சப்த சக்திக்குப் பொருந்துமாயினும் அத்தனை ஸ்வாதுவாக மாட்டாது. வக்த்ரு விவக்ஷிதமுமல்ல. "ஹே வரத த்வம் க்ருஷ்ணஸ்ஸந் ஜய்யஹையங்கவீநம் ப்ரியநிஜஜனைஸ்ஸஹ முஷ்ணங்" என்று யோஜிப்பதுவே நன்று. பேரருளாளனே! நீ கண்ணபிரானுய்த் திருவவதரித்தருளினபோது "தன்னேராயிரம் பிள்ளைகளோடுகூடி கவ்யங்களைக் களவு கண்டாயே. அந்தோ! ஈதென்ன அவிவேகம். ஸ்வகீயமான வஸ்துவைப் பிறர் ஸ்வாதீனப்படுத்திவைத்துக்கொண்டிருந்தால், அவர்களை வென்று அவ்வஸ்துவை மீட்டுக்கொள்வதோ, களவு வழியாலே பெற்றுக்கொள்வதோ சொல்லாயப்பனே! உன்னுடையதான பூமியை மஹாபலி தன்னுடையதென்று பாவித்து இறுமாந்திருந்த காலத்திலே நேர்கொடு நேரே சென்று 'கெடுவாய் உன் மதமிருந்தபடியென்! திருவடிகளிலே வணங்கிப்போ ; இல்லையேல் தலையறுப்புண்பாய்' என்று சொல்லி பரதவப்பிடாரைக் காட்டி பூமியையெல்லாம் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ள ப்ராப்தியுண்டாயிருக்கச் செய்தேயும் அந்த ருஜு மார்க்கத்திலே செல்லாதே "கண்டாரிரங்கக் கழியக்குறளுருவாய் வண்டாரான் வேள்வியில் மண்ணிரந்தான் காணேடீ" என்று அனைவரும் ஏசும்படி பிக்ஷுகவேஷதாரியாய்ச் சென்று பெற்ருப் போலே யிராநின்ற

திறே இவ்வபதாநமும். சராசரம் முற்றவும் நீயிட்டவழக்காயிருக்க உனக்கு உறுப்பாகாத நவநீத முண்டோ? அதுதன்னிலே பிறர் ஸ்வகீயபுத்தி பண்ணிக்கிடந்தார்களாகில் அவரவர்களுடைய துரபிமானத்தை யடியறுத்து உன்னுடைய ஸர்வஸ்வாமித்வத்தை உபபாதித்து இவ்வழியாலே நேர் கொடு நேரே அந்தக் கவ்யத்தைப் பெறுவதற்கு ப்ராப்தியுண்டா யிருக்கச் செய்தேயும், அஜ்ஞரைப்போலவும் அசக்தர்களைப் போலவும் களவு வழியிலே புகுந்து கைப்பற்றினையே! இது அவிவேகத்தின் ஸாம்ராஜ்யமோ? ஸௌலப்யப்ரகாசந பரிபாடியோ? அறியோம் "—என்கிற இவ்வளவு உட்கருத்தை அமைத்திறே 'ஜய்யஹையங்கவீநம்' என்று அருளிச் செய்துளர். [ஜய்யம் ச தத் ஹையங்கவீநஞ்ச—ஜய்யஹையங்கவீநம்] 'க்ஷய்யஜய்யௌ சக்யார்த்தே' என்பது பாணிநிஸூத்ரம். ஜேதும் சக்யம் என்கிற பொருளிலே ஜய்யமென்றாகிறது. [ஜேதும் யோக்யமாகில் ஜேயம் என்றாம்.] ஹையங்கவீநம் ஜய்யமாகையாவது என்னென்னில், 'ஸமஸ்த வஸ்துக்களுக்கும் நான் கடவனான பின்பு என்னுடையதான கவ்யங்களிலே நீங்கள் ஸ்வகீயதா புத்தி பண்ணுகையாவதென்? எந்த வஸ்துவிலும் உங்களுக்கு ஸ்வாமித்வமில்லைகிடிகோள்; ஆனபின்பு உந்தம் மனைகளிலே திரளும் கவ்யங்களையடைய நமக்காக்கிப் போருங்கோள்; இல்லையேல் குடியிருப் பிழந்துபடுவீர்கள்' என்று கட்டளையிட்டு நிருபாதிகஸ்வாமித்வ முறையாலே நேர்கொடு நேரே லபிக்கக் கூடியதாகை. இப்படிப்பட்ட கவ்யத்தை [ப்ரியநிஜஜநை: [ஸஹ] முஷ்ணந்] கண்ண பிரானுடைய தீம்புகளுக்குப் பெருநிலை நிற்பார் * தன்னேராயிரம் பிள்ளைகளுண்டிறே.

'ப்ரியநிஜஜநைர்முஷ்ணந்' என்கிற விவ்விடத்திலே—'பீடே பீடநிஷண்ணபாலககலே [புஜே] திஷ்டந் ஸ கோபாலகோ யந்த்ராந்த:ஸ்திததுக்தபாண்டமபக்ருஷ்யாச்சாத்ய கண்டாரவம், வக்த்ரோபாந்த க்ருதாஞ்ஜலி: க்ருதசிர:கம்பம் பிபந் ய: பய: பாயாதாகதகோபிகாநயநயோ: கண்டூஷபூத்காரக்ருத்'' என்ற கர்ணாம்ருத ச்லோகமுணர்க. திருவாய்ப் பாடியில் பெண்கள் கவ்யங்களைத் திரட்டி உறிகளிலே சேமித்துவைக்கும் போது கண்ணபிரானுடைய குறும்புகளை நினைத்து அவனுக்கு எட்டவொண்ணாதபடி வைக்கவேணுமென்று உயர வைத்திடுவர்களிறே; அதுதன்னையறிந்து கண்ணபிரான் தன்னோட்டைப் பிள்ளைகளை உடன் கொண்டுபோய் ஒருவன் தோளிலே ஒருவனை நிறுத்தி உறிக்கு அளவாக அமைந்தவாறே தானேறிப்பறித்துண்பனும். இந்த உதவிக்காகச் சில பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு போவானாகையாலே 'ப்ரியநிஜஜநை:' என்றது.

இப்படி வெண்ணெயைக் களவுகண்டவாறே உடையவர்கள் வந்து கண்டு 'இங்காரார் புகுதுவார் ஐயரிவரல்லால்' என்று அறுதியிட்டு, 'புண்ணில் புளிப்பெய்தாலொக்கும் தீமை புரைபுரையாலிவை செய்யவல்ல, அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற அசோதை நங்காய் உன் மகனைக்கூவாய்' 'சாளக்கிராமமுடைய நம்பி சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான், ஆலைக்கரும்பின் மொழியனைய அசோதை நங்காய் உன் மகனைக்கூவாய்' என்று யசோதைப் பிராட்டிபாடே வந்து முறையிட; அவளும் 'கண்ணியார் குறுங்கயிற்றால் கட்டி 'யதி சக்நோஷி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித' என்றொழிவளிறே; அதுதன்னைச் சொல்லுகிறது த்விதீயபாதம். [யசோதாகராப்யாம் யயா தாம்நா பூம்நா த்வம் பத்த:] யசோதைப்பிராட்டியானவள் யாதொரு தாம்பைக்கொண்டு தன் கைகளாலே உன்னைச் சிக்கெனக் கட்டினளோ. பூம்நா—வாஹுல்யேந-அதிசயேநேத்யர்த்த:. மிகவும் என்றபடி. கட்டுகையிலே மிகையாவது என்னென்னில் 'தாம்நா சைவோதரே பத்த்வா ப்ரத்யபத்நாதுலூகலே' என்கிறபடியே-முதலிலே திருவயிற்றிலே கட்டி, பிறகு அத் திருவயிற்றையும் உரலையும் ஒன்றாக இணைத்துப் பிணைத்த மிகையை நினைக்கிறது.

[பந்தக்ஷபணகரணீம் தாம்] 'கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப் பெற்றான், பற்றி யுரலிடை யாப்புமுண்டான் பாவிகாளுங்களுக் கேச்சுக்கொலோ'? என்கிற படியே—இவ்வபதாநத்தை கர்ஹிப்பார் பாவிகளிறே. கண்ணபிரான் தனது ஆச்ரிதஸௌலப்யகுணத்தை ப்ரகாசப்படுத்துவதற்குத் தானே ஏறிட்டுக்கொண்ட கட்டிறே இதுதான். "கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன்" என்ற பாசுரத்தின் ஹ்ருதயத்தை "ஆநீதமக்ரே நிஜபத்தனர்த்தம் தாமாகிலம் ஸம்ஹிதமப்யபூர்ணம் । நிரீக்ஷ்ய நிர்விண்ணதியோ ஜநந்யா: ஸங்கோசசக்த்யா ஸ பபூவ பத்த்ய: ॥" [யாதவாப்யுதயே—4-34] என்ற ச்லோகத்தால் வெளியிட்டருளினாரிறே. அவனுடைய அநுக்ரஹபரீவாஹரூபமான இந்த பந்தத்தை யநுஸந்திட்டார்க்கு பந்தநிவ்ருத்தியிறே பலமாவது,

பத்தம் ததா பாவயதாம் முகுந்தமயத்நவிச்சேதிநி கர்மபந்தே, தபஸ்விநீ தத்க்ரது நீதிராத்யா ஸவ்ரீளமாரண்யகதாஸ்ய தஸ்தௌ ॥ * [யாதவாப்யுதயே-4-35] என்னக்கடவதிறே. 'பரமபுருஷனான கண்ணபிரான் இப்படி எளியனாய்க் கட்டுண்டு கிடந்தபடியே!" என்று இந்த தாமபந்தவ்ருத்தாந்தத்தை * எத்திறமித்யாதிப்படியே உள்குழைந்து அநுஸந்திப்பார் 'மம மாயா துரத்யயா' என்னப்பட்ட மாயாபந்தத்தின் விச்சேதத்தைப்பெற்று மகிழ்வர்களிறே. அவ்வர்த்தம் சொல்லுகிறது 'பந்தக்ஷபணகரணீம்' என்று. பந்தஸ்ய [ஸம்ஸாரபந்தஸ்ய] க்ஷபணம்-நாசம் கரோதீதி பந்தக்ஷபணகரணீ.

[தாம் தாமாநம் உதரபந்தநாக்யம் காத்ராபரணம் அத்யாபி பிபர்ஷி] க்ருஷ்ணாவதாரத்திலே கட்டுண்ட அந்தத்தாம்பை ஸ்ரீ ஹஸ்திகிரிமூர்த்தாவிலே பேரருளாளனாய் நிற்கிற இந்நிலையிலும் 'திருவுதரபந்தன மென்கிற திவ்யாபரணமாய்ச் சாத்தியருளாநின்றாய்' யென்கிறார். இது தனக்கு அடியென்னென்னில்; [மாதுஃ ப்ரேம்ணா] அந்த மாதாவின் பக்கலிலுள்ள ப்ரேமமேயிறே இன்றைக்கும் அந்தத் தாம்பை ஆபரணமாக வுகந்து சாத்திக்கொள்ளுகைக்கு ஹேதுவென்கிறார். உலகத்தில் பிள்ளைகள் தீமைகள் செய்து மாதாவின் கையாலே கட்டுண்டு கிடப்பதுண்டாகிலும் அந்த பந்தம் அவர்களுக்கு சோகாயவாமித்தனை. கண்ணபிரானுடைய கட்டு அப்படிப்பட்ட தன்றிறே. 'வெண்ணெய்க் கன்றாய்ச்சி வன்தாம்புகளால் புடைக்கலந்தானை யம்மானை' என்ற விடத்து 'தாம்புகளால் புடைக்க அலர்ந்தானை—புடைக்கப் புடைக்க முகவிகாஸம் பெற்றவனை' என்றிறே அருளிச்செய்வது. அதாவது நம்முடைய எளிமை வெளிப்படும்படி இங்ஙனே கட்டிப்போகடுவதே! என்று உகந்திருக்குமவனிறே. அல்லாதார்க்கும் தன் குணங்களை வெளியிடுவார் பக்கலிலேயிறே ப்ரேமம் மிக்கிருப்பது. அந்தப்ரேமத்தாலே கிமர் அன்று பெற்ற தாமபந்தனத்தை இன்னும் விடாதே உகந்து சாத்திக்கொண்டிருக்கிறபடி. 'மாதுஃ ப்ரேம்ணா' என்றது மாத்ருவிஷயக ப்ரேம்ணா என்றபடி. 'முஷ்ணந் க்ருஷ்ண' என்று ஸம்புத்த்யந்தமாகவும் சிலர் ஓதுவர். ஹையங்கவீநம்—ஹ்யஸ்தநகோதோஹோத்பவம் க்ருதம். "தத் து ஹையங்கவீநம் யத் ஹ்யோகோதோஹோத்பவம் க்ருதம்" இத்யமரஃ. புத்துருக்குநெய். ... .... (54)

**सौन्दर्याख्या सरिदुरसि विस्तीर्य मध्यावरुद्धा स्थानाल्पत्वाद्विषमगतिजावर्तगर्ताभनाभिः ।**
**प्राप्य प्राप्तप्रथिम जघनं विस्तृता हस्तिनाथ स्रोतोभेदं भजति भवतः पाददेशापदेशात् ॥ ५५ ॥**

**ஸௌந்தர்யாக்யா ஸரிதுரஸி விஸ்தீர்ய மத்யாவருத்தா**
**ஸ்தாநால்பத்வாத் விஷமகதிஜாவர்த்தகர்த்தாபநாபிஃ ।**
**ப்ராப்ய ப்ராப்தப்ரதிமஜகநம் விஸ்த்ருதா ஹஸ்திநாத ।**
**ஸ்ரோதோபேதம் பஜதி பவதஃ பாததேசாபதேசாத் ॥ 55 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே ஹஸ்திநாத | ஹஸ்திகிரிநாதனே ! | ப்ராப்த ப்ரதிம | அடையப்பட்ட ப்ருதுத்வத்தையுடைய [கனமான] |
| உரஸி | திருமார்பில் | ஜகநம் | ஜகனப்ரதேசத்தை |
| விஸ்தீர்ய | பரவி [பெருகிக்கொண்டுவருமளவில்] | ப்ராப்ய | அடைந்து |
| மத்யாவருத்தா | மத்யப்ரதேசத்தாலே தடைபட்டதாய் | விஸ்த்ருதா [ஸதீ] | [முன்பு திருமார்வில் போல]பரவியதாய்க்கொண்டு |
| ஸ்தாநால்பத்வாத் | அவகாசம் ஸ்வல்பமாயிருந்ததாலே [உண்டான] | பவதஃ | உன்னுடைய |
| விஷமகதிஜ ஆவர்த்தகர்த்தாப நாபிஃ | விஷமகதியாலுண்டான குழிபோன்றிருக்கிற நாபியை புடைத்தான | பாததேச அபதேசாத் | திருவடிகளென்கிற வ்யாஜத்தாலே |
| ஸௌந்தர்யாக்யா ஸரித் | ஸௌந்தர்யமென்று பெயர்பூண்ட நதியானது | ஸ்ரோதோ பேதம் பஜதி | ப்ரவாஹபேதத்தை யடைகிறது. [இரண்டுவாய்க்காலாகப் பிரிகின்றதென்றபடி.] |

இனி, திருத்துடைகள் திருமுழந்தாள்கள் திருக்கணைக்கால்கள் முதலிய ஸந்நிவேசங்களைத் தனித்தனியே வர்ணிக்கப்புகுகிறாராய் அந்த அவயவங்களின் விசிஷ்டவேஷமாய், திருவுதரத்துக்குக் கீழ்ப்பட்டதான பாததேசத்தை ஒரு சமத்காரமாக வர்ணித்தருளுகிறார் இதில். [ஹே ஹஸ்திநாத! உரஸி விஸ்தீர்ய மத்யாவருத்தா, ஸ்தாநால்பத்வாத்விஷமகதிஜாவர்த்தகர்த்தாபநாபிச்ச பவதஃ ஸௌந்தர்

யாக்க்யா ஸரித் ஸ்ரோதோபேதம் பஜதி-இத்யந்வய:] பேரருளாளனுடைய திருமேனியிலே அழகு, வெள்ள மிட்டேர்டாநின்றதென்னலாம்படி யிருக்கையாலே அந்த ஸௌந்தர்யத்தை ஒருநதியாக ரூபணம் பண்ணுகிறர். அந்த நதியானது [உரஸி விஸ்தீர்ய] திருமார்பிலே பரவி, விசாலமான இடம் வாய்த்தால் நதிகள் பரவிச் செல்லுமிறே. * பெரிய வரை மார்பிறே பேரருளாளனுடைய திருமார்பு. அதிலே இந்த ஸௌந்தர்யஸரித்தானது நிஸ்ஸங்கோசமாகப் பரவிற்றுய்த்து. [மத்யாவருத்தா] அங்ஙனம் மார்பிலே பரவிக் கீழிழியப் புக்கவாறே இடையிலே தடையுண்ட தாய்த்து; இடையானது ப்ரக்ருதிக்ருச மாகையாலே. இட்டளத்திலே பெருகிச் செல்லவொண்ணாதிறே. ஆகையாலே ஸௌந்தர்ய நதியானது மத்யாவருத்தமாய்த்து. 'ஸ்தாணுல்பத்வாத்' என்கிறவிது மத்யமதீபம்போலே முன்னும் பின்னு மந்வயிக்கவுமாம். [விஷமகதிஜாவர்த்தகர்த்தாபநாபி:] ஸமநதியாகப் பெருகி வந்த ஸரித்து மத்யாவருத்தமாய்ப் போகவே அந்த ஸமகதி மாறி விஷமகதியாய்த்து. விசங்கடமான ப்ரதேசத்திலே விரிந்து செல்லவேண்டிய ப்ரவாஹமானது ஒரு ஸங்குசிதஸ்தலத்திலே விஷமகதியாகப் பெருகப்புக்கால் குளப்படியிலே கடலை மடுத்தாற்போன்ற ப்ரவாஹாதிக்யத்தாலே சுழிபடுவதுண்டிறே. அந்த சுழிதானே என்னலாம்படியாய்த்து திருநாபி. ஆகவே விஷமகதியடியாகவுண்டான ஆவர்த்தகர்த்தம் [சுழி] போன்ற நாபியையுடைத்தான யாதொரு ஸௌந்தர்ய நதியுண்டு அதுவானது. [ப்ராப்தப்ரதிமஜகநம் ப்ராப்ய விஸ்த்ருதா ஸதீ] ஸ்தலஸங்கோசக் குறை நீங்கி ப்ருதுவான ஜகநஸ்தாநத்தைப் பெற்று மீண்டும் திருமார்பில்போலே விஸ்த்ருதமாய். [பாததேசாபதேசாத் ஸ்ரோதோபேதம் பஜதி] இரண்டட்டத்திலும் நீண்டு விளங்குகின்ற திருவடிகளென்ற வ்யாஜத்தாலே அந்த ஸௌந்தர்ய நதிதான் இரண்டு பெருக்காகப் பிரியலுற்றதென்கிறர். உலகில் பெருக்காறுகளின் இயல்பு இங்ஙனே யிறேயிருப்பது. ஆகவித்தால் பேரருளாளனுடைய திருத்தாள்கள் ஸௌந்தர்யமே வடிவெடுத்தாற் போன்றுள்ளன என்றதாய்த்து. திருப்பாதங்களை ஸௌந்தர்யத்துக்கு அதிகரணமாக வர்ணிக்கை யன்றிக்கே ஸௌந்தர்யதாதாத்ம்யமாக வர்ணித்தவிது ஸௌந்தர்ய ப்ராசுர்யத்யோதநார்த்தமாம்.....(55)

**रम्भास्तम्भाः करिवरकराः कारभास्सारभाजः वेषाश्लेषा अपि मरकतस्तम्भमुख्यास्तुलाख्याः ।**
**साम्यं सम्यग्वरद न दधुस्सर्वमुर्वोस्त्वदूर्वोः न ह्यैश्वर्यं दधति न तथा यौवनारम्भजृम्भाः ॥ ५६ ॥**

**ரம்பாஸ்தம்பா: கரிவரகரா: காரபாஸ்ஸாரபாஜ:**
**வேஷாச்லேஷா அபி மரகதஸ்தம்பமுக்யா ஸ்துலாக்யா: |**
**ஸாம்யம் ஸம்யக் வரத ந ததுஸ் ஸர்வமுர்வோ ஸ்த்வதூர்வோ:**
**ந ஹ்யைச்வர்யம் தததி ந ததா யௌவநாரம்பஜ்ரும்பா: || 56 ||**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| ஸாரபாஜ: | பலிஷ்டங்களான |
| ரம்பாஸ்தம்பா: | வாழைத்தண்டுகளென்ன |
| கரிவர கரா: | கஜேந்திரத்தின் துதிக்கைக ளென்ன |
| காரபா: | கரபப்ரதேசங்களென்ன |
| மரகதஸ்தம்ப முக்யா: | மரகதமயமான தூண் முதலிய வையென்ன |
| | [ஆகிய இவை யெல்லாம்] |
| வேஷா ச்லேஷா: | துடைகளினுடைய ஆக்ருதி போன்ற ஆக்ருதியின் ஸம்பந் தத்தையுடையவைகளாய் |
| | [அத ஏவ] |
| துலாக்யா: அபி | உபமானமாகப்போரும் ப்ரஸித் தியை உடையவையாயினும் |

| | |
|---|---|
| உர்வோ: | பருத்திருக்கிற |
| த்வதூர்வோ: | உனது திருத்துடைகளுக்கு |
| ஸர்வம் ஸாம்யம் | ஸர்வாத்மநா ஸாம்யத்தை |
| ஸம்யக் ந தது: | நன்ருகப் பெறவில்லை ; |
| ஹி | ஏனென்ருல் |
| [தே] | கீழ்ச்சொன்ன ரம்பாஸ்தம்பாதிகள் |
| ததா ஐச்வர்யம் | அப்படிப்பட்ட சக்தி விசேஷத் தை |
| ந தததி | வஹிக்கின்றனவில்லை ; |
| ததா யௌவநாரம்ப ஜ்ரும்பா: | எப்போதும் யௌவநாரம்பமே யாயிருக்கிற அப்படிப்பட்ட அழகுகளையும் [அல்லது] யௌவநாரம்பத்தில் உண்டாகக்கூடிய அப்படிப்பட்ட விகாஸங்களையும் |
| ந தததி | வஹிக்கின்றனவில்லையே; |

* * * பாததேசத்திலே ப்ரதமாவயவமான திருத்தொடைகளின் அழகிலே ஆழங்கால்பட்டுப் பேசுகிறார். கந்தலிதகதலீகாண்டகரிகரகரபமரகதஸ்தம்பாதிகளை வென்று அடிபருத்து நுனிசிறுத்து மதமதென்று மாம்ஸலங்களாயிறே பேரருளாளனுடைய திருத்தொடைகள் விளங்குவது. கதலீகாண்டப்ரப்ருதிகளை ஸாமான்யமாகச் சில கவிகள் தொடைகளுக்கு உபமானமாக வர்ணிப்பதுண்டாகிலும் பேரருளாளனுடைய திருத் தொடைகளுக்கு அவை உபமானமாக ப்ராப்தியில்லையென்னுமிடத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார். "நாகேந்த்ரஹஸ்தா: த்வசி கர்கசத்வாத் ஏகாந்தசைத்யாத கதலீவிசேஷா: । லப்த்வாபி லோகே பரிணாஹிரூபம் ஜாதாஸ்ததூர்வோருபமாநபாஹ்யா:" என்று ஸாமான்ய விஷயங்களில் சொல்லும்படி இதுவானால் பேரருளாளன் விஷயத்திலே கிமுத? என்னுமித்தனையிறே.

[ரம்பாஸ்தம்பா:] அடிபருத்து நுனிசிறுத்திருக்கைக்கும் குளிர்ந்திருக்கைக்கும் கதலீகாண்டங்களைத் துடைகளுக்கு உபமானமாகச் சொல்லிப் போருவதுண்டிறே. [கரிவரகரா:] அப்படியே யானையின் துதிக்கைகளும். [காரபா:] * தஸ்யேதம் என்கிற அர்த்தத்திலே வந்த அண் ப்ரத்யயமல்ல; கரபா ஏவ காரபா: என்று ஸ்வார்த்திக ப்ரத்யயமாய்க் கிடக்கிறது. கரபமாவது—'கரபந்தாதாகநிஷ்டம் கரஸ்ய கரபோ பஹி:' என்ற அமரகோசத்தின்படி மணிக்கட்டுமுதல் சுண்டுவிரலளவுள்ள கரபஹி: ப்ரதேசம். இதுவும் அடிபருத்து நுனிசிறுத்திருக்கையாலே ஊரு த்ருஷ்டாந்தமாகும். [ஸாரபாஜ:] இந்த விசேஷணம் ரம்பாஸ்தம்பாதிவிசேஷ்யசதுஷ்டயத்திலும் அந்வயிக்கைக்குரியது. பலிஷ்டங்களான (அல்லது) ப்ரசஸ்தங்களான கதலீகாண்டங்களென்ன, சுண்டாதண்டங்களென்ன, கரபப்ரதேசங்களென்ன, மரதகஸ்தம்பாதிகளென்ன இவையெல்லாம் [வேஷாச்லேஷா அபி, துலாக்யா அபி] தொடைகளினுடைய ஆக்ருதிபோன்ற ஆக்ருதியின் ஸம்பந்தத்தை யுடையவைகளாய் அதஏவ ஸாத்ருச்யப்ரஸித்தியை யுடையவைகளாயிருந்தபோதிலும் என்றபடி. வேஷஸ்ய ஆச்லேஷ: யேஷாம் தே—இதி வ்யதிகரணபஹுவ்ரீஹி:; அதவா வேஷம் ஆச்லிஷ்யந்தீதி வேஷாச்லேஷா: என்னவுமாம். ரம்பாஸ்தம்பாதிகள் ஊருஸமாநாகாரங்களென்றதாய்த்து. [துலாக்யா:] துலேதி ஆக்யா யேஷாம் தே. அதவா, துலாயாம் [ஔபம்யே] ஆக்யா [ப்ரஸித்தி:] யேஷாந்தே இதி வா பவது. 'கரபோரு' 'ரம்போரு' இத்யாதி ப்ரயோகங்களுள்ளமையால் ரம்பாஸ்தம்பாதிகளுக்கும் தொடைக்கும் ஒரு உபமாநோபமேய பாவப்ரஸித்தியுண்டிறே; அத்தைச் சொன்னபடி. ஹஸ்திஹஸ்தயுகலாபஸுவ்ருத்தௌ ராஜத: க்ரமக்ருசௌ ச ஸதூரூ ஸுந்தரஸ்ய வநபூதரபர்த்து: ॥" என்று ஸுந்தரபாஹுஸ்தவத்திலே இவர் தாமும் அருளிச் செய்தாரிறே லௌகிக ப்ரஸித்தியை அநுஸரித்து. ஆக உபமாநத்வப்ரஸித்தியையுடைய இந்த வஸ்துக்களெல்லாம்;

[வரத! உர்வோ: த்வதூர்வோ: ஸர்வம் ஸாம்யம் ஸம்யக் ந தது:] உன்னுடைய சிறந்த திருத்தொடைகளுக்கு ஏகதேசஸாம்யத்தை வஹிக்குமித்தனையல்லது ஸர்வதா ஸாம்யம் போராதுகாண் என்றபடி. ஸுவ்ருத்தங்களாய் க்ரமக்ருசங்களாயிருக்கும் அம்சத்திற்கு மாத்திரம் ஒருவாறு போலியாகக் கூடுமத்தனைபோக்கி, உட்புகுந்து பார்த்தால் ப்ரதாநாம்சங்களிலே குறையுற்றிருக்குமிறே அவ்வுபமான பதார்த்தங்கள்.

ரம்பாஸ்தம்பாதிகளிற்காட்டில் பேரருளாளனுடைய திருத்தொடைகளுக்குள்ள சிறப்பு என்னென்ன, வ்யதிரேகமுகத்தாலே அருளிச்செய்கிறார். [ந ஹ்யைச்வர்யமித்யாதி] தே-என்ற ஒரு கர்த்ருபதம் அத்யாஹரித்துக்கொள்வது. அந்த 'ரம்பாஸ்தம்பாதிகளானவை [ந ஹி ததா ஐச்வர்யம் தததி] ஐச்வர்யமாவது—இங்கே சக்தி. அதாவது ஸாமர்த்த்யம். எம்பெருமானுடைய திருத்தொடைகளுக்கு அஸாதாரணமான சக்தி ஏதென்னில்; மதுகைடபஸம்ஹார வ்ருத்தாந்தத்தைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறபடி. திருமாலிருஞ்சோலை யழகருடைய திருத்தொடைகளுக்கு விசேஷணமிடும்பொது 'பிஷ்டதுஷ்ட மதுகைடபகீடௌ' என்றருளிச்செய்தவரிறே இவர். எம்பெருமான் மதுகைடபர்களைத் துடையாலிறுக்கிக் கொன்றருளினனென்று ப்ரஸித்தமிறே. பண்டொரு ஸமயவிசேஷத்திலே அவ்வஸுரர்கள் பெற்றிருந்த வரம் பழுதாகாமைக்காக வாய்த்து துடையிடையிலிறுக்கி முடித்தது. இந்த சக்தி விசேஷமாய்த்து இங்கே ஐச்வர்ய சப்தத்தாலே விவக்ஷிதம். இப்படிப்பட்ட வல்லமை ரம்பாதிகளுக்கு அணுமாத்ரமுமிருக்க ப்ரஸக்தியில்லையிறே.

[ததா யௌவநாரம்பஜ்ரும்பாச்ச ந தததி] ரம்பாஸ்தம்பாதிகள் காலாதீநபரிணாமசாலிகளாகையாலே ஸர்வகாலத்திலும் ஒருபடிப்பட அழகுபெற்றிருக்கமாட்டா. ப்ரதமக்ஷணத்திலே செவ்வியவாகிக்

காணப்பட்டு த்விதீய க்ஷணத்திலே உருமாய்ந்தொழியும்படியிறே அவற்றின் ரீதி யிருப்பது. திருத்துடைகளோ வென்றால், யௌவனத்தின் உபக்ரமதசையிலே யிருக்கக்கடவ விஜ்ரும்பத்திற்கு ஒருபோதிலும் விச்சேதமின்றிக்கே யௌவநப்ராகபாவதசையே எப்போதும் கோட்சொல்வனபோல விளங்கா நின்றமையால் இவற்றுக்கும் அவற்றுக்கும் நெடுவாசிபோருமிறே. "ஜ்ரும்பஸ்து த்ரிஷு" ஜ்ரும்பணம்" என்ற அமரகோசத்தின்படி ஜ்ரும்பசப்தம் லிங்கத்ரயத்திலும் உண்டாகையால் இங்கே ஸ்த்ரீலிங்கமாக ப்ரயுக்தமாய்த்து. [ஜ்ரும்பாம், ஜ்ரும்பே, ஜ்ரும்பா: இதி த்விதீயாபஹுவசநம். ஜ்ரும்பாந் என்றும் சிலர் ஓதுவர். ஜ்ரும்பமாவது விலக்ஷணவிகாஸம். ஸர்வம் ஸாம்யமென்றது ஸர்வாத்மநா ஸாம்யமென்றபடி. அம்சதஸ்ஸாம்யமேயுள்ளதத்தனே. .... .... .... .... (56)

**या ते गात्रे वरद जनिता कान्तिमय्यापगाऽभूत् तस्यास्स्रोतोद्वितयमिह यद्याति पादप्रवादम् ।**
**तज्जातोर्ध्वभ्रमियुगमिवोद्भानुनी जानुनी ते स्यादुक्ष्णोर्वा ककुदयुगलं यौवनैश्वर्यनाम्नोः ॥ ५७ ॥**

**யா தே காத்ரே வரத ஜநிதா காந்திமய்யாபகாபூத்**
**தஸ்யாஸ் ஸ்ரோதோ த்விதயமிஹ யத் யாதி பாதப்ரவாதம் ।**
**தஜ்ஜாதோர்த்வப்ரமியுகமிவோத்பாநுநீ ஜாநுநீ தே**
**ஸ்யாதுக்ஷ்ணோர் வா ககுதயுகளம் யௌவநைச்வர்யநாம்நோ: ॥ 57 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| தே காத்ரே | உனது திருமேனியில் |
| காந்திமயீ | காந்திஸ்வருபமான |
| யா ஆபகா | யாதொரு நதியானது |
| ஜநிதா | உண்டாக்கப்பட்டிருக்கிறதோ |
| தஸ்யா: | அந்த நதியினுடைய |
| யத் ஸ்ரோதோ த்விதயம் | இரண்டு பிரிவான யாதொரு ப்ரவாஹமானது |
| இஹ | இந்தத் திருமேனியில் |
| பாதப்ரவாதம் | திருவடிகளென்கிற வ்யாஜத்தை |
| யாதி | அடைகின்றதோ ; |
| உத்பாநுநீ | மேற்கிளர்ந்த சோபையையுடைய |
| தே ஜாநுநீ | உனது முழந்தாள்கள் |
| தஜ்ஜாத ஊர்த்வ ப்ரமியுகமிவ | [பாத ப்ரவாதத்தை யடைந்த] அந்த ப்ரவாஹத்வயத்திலுண்டான ஊர்த்வாகாரமான இரண்டு நீர்க்குமிழி போல |
| [பாத:] | விளங்குகின்றன |
| வா | அல்லது |
| யௌவநைச்வர்ய நாம்நோ: | யௌவனமென்னும் ஐச்வர்யமென்னும் பெயரையுடைய |
| உக்ஷ்ணோ: | இரண்டு எருதுகளினுடைய |
| ககுதயுகளம் ஸ்யாத் | இரண்டு முசுப்புகளாம், |

திருமுழந்தாள்களினழகிலே ஈடுபட்டுப் பேசுகிறார். 'ஸௌந்தர்யாக்யா ஸரிதுரஸி' என்ற கீழில் ச்லோகத்தின் தாத்பர்யத்தை இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தாலே அநுபாஷிக்கிறார். [ஹே வரத தே காத்ரே காந்திமயீ யா ஆபகா அபூத், தஸ்யா: யத் ஸ்ரோதோத்விதயம் பாதப்ரவாதம் யாதி] பேரருளாளனே ! தேவரீருடைய திருமேனியிலே யாதொரு ஸௌந்தர்யமஹாநதி வெள்ளமிட்டுக்கிடக்கிறதோ ; அந்த நதியினுடைய யாதொரு ப்ரவாஹத்வயமானது அங்க்ரி தண்டங்களென்கிற வ்யபதேசத்தை யடைந்திருக்கிறதோ—[இவ்வர்த்தம் பூர்வோக்தாநுவாதமென்னுமிடத்தை நன்கு விளக்கும் யச்சப்தவீப்ஸை.]

[தஜ்ஜாதேத்யாதி] அந்த ப்ரவாஹத்வயத்திலுண்டான ஊர்த்வாகாரமான இரண்டு நீர்க்குமிழிகள் போலே விளங்காநின்றன—தேவரீருடைய திருமுழந்தாள்கள். எனவே, ஸௌந்தர்யம் தேங்கிநிற்குமிடமென்றதாய்த்து. இங்ஙனன்றிக்கே, வேறொருபடியாகவும் உத்ப்ரேக்ஷிக்கலாமென்கிறார் [ஸ்யாதித்யாதியாலே.] யௌவநைச்வர்யநாம்நோ ; உக்ஷ்ணோ: ககுதயுகலம் வா ஸ்யாத்—யௌவனமென்ன ஐச்வர்யமென்ன இவைகளாகிற இரண்டு வ்ருஷப ராஜங்களின் முசுப்புகள்தான் முழந்தாள்களாக மிளிர்கின்றன வென்றும் சொல்லலாமென்கை. வ்ருஷபங்களுக்கு முசுப்பானது அஸாதாரண நிரூபகமாவதுபோல, திருமுழந்தாள்கள் யௌவநைச்வர்யங்களுக்கு அஸாதாரண நிரூபகங்களா யிருக்கின்றன வென்றபடி. "யௌவநவ்ருஷககுதோத்பேதநிபம் நிதராம் பாதி விபோருபயம் ஜாநுசுபாக்ருதிகம்" என்ற ஸுந்தரபாஹுஸ்தவஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ஸ்ரோதோத்விதயம், ஸ்ரோதோயுகலமிதி பாடபேத: உத்பாநுநீ-உத்கச்சந்த: பாநவ: யயோஸ்தே. எப்போதும் வெளிக்கிளர்கின்ற ஒளிபொருந்தியவை. (57)

प्रेम्णाऽऽक्रातुं करिगिरिशिरोऽधोमुखीभावभाजोः अङ्घ्रिद्वन्द्वाह्वयकमलयोः दण्डकाण्डायमाने ।
अद्रिस्पर्शोद्भवसुखत उत्कण्टके रोमहर्षात् द्रष्टुर्दृष्टिर्वरद किमलं लङ्घितुं जङ्घिके ते ॥ ५८ ॥

ப்ரேம்ணாக்ராதும் கிரிகிரிசிரோதோமுகீபாவபாஜோஃ
அங்க்ரித்வந்த்வாஹ்வயகமலயோர் தண்டகாண்டாயமாநே |
அத்ரிஸ்பர்சோத்பவஸுகத உத்கண்டகே ரோமஹர்ஷாத்
த்ரஷ்டுர் த்ருஷ்டிர் வரத கிமலம் லங்கிதும் ஜங்கிகே தே ॥ 58 ॥

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| கரிகிரிசிரஃ | கரிகிரியின் உச்சியை |
| ப்ரேம்ணா ஆக்ராதும் | [போக்யதாதிசய ப்ரயுக்தமான] ப்ரீதியால் ஆக்ராணம் செய்வதற்கு |
| அதோமுகீ பாவபாஜோஃ | கவிழ்முகமாகவிருக்கும் நிலைமையை யடைந்துள்ள |
| அங்க்ரித்வந்த்வ ஆஹ்வயகமலயோஃ | திருவடியிணைகளென்னும் தாமரை மலர்களினுடைய |
| தண்டகாண்டாயமாநே | நாளத்தண்டு போன்றனவாய் |
| அத்ரிஸ்பர்சோத்பவ ஸுகதஃ | திருமலையோட்டை ஸ்பர்சத்தாலுண்டான ஸுகத்தினாலாகிய |
| ரோமஹர்ஷாத் | மயிர்க்கூச்செறிவதனால் |
| உத்கண்டகே | கண்டகிதங்களாயிருக்கிற |
| தே ஜங்கே | உனது கணைக்கால்களை |
| த்ரஷ்டுஃ த்ருஷ்டிஃ | ஸேவிப்பவனுடைய கண் |
| லங்கிதும் | விட்டு அவ்வருகே போக |
| அலம் கிம் | வல்லதோ ? |

* * * பேரருளாளனுடைய திருக்கணைக்கால்களினழகிலே தாம் ஈடுபட்டபடியை அருளிச் செய்கிறார். திருவத்திமாமலையின் போக்யதாதிசயப்ரயுக்தமான ப்ரீதிவிசேஷத்தாலே அத் திருமலையின் உச்சியை மோந்து மகிழவேண்டுமென்று நினைத்த பேரருளாளன் திருவடித்தாமரைகளானவை கீழ்முகமாயிருப்பனவாகவும், திருக்கணைக்கால்களானவை அத்தாமரைகளின் நாளதண்டங்களோவென்னலாம்படி யிருப்பனவாகவும், ஹஸ்திகிரிஸ்பர்சத்தாலுண்டான ஸுகவிசேஷத்தாலே அக்கணைக்கால்கள் ரோமாஞ்சிதமாயிருப்பதானது கமலநாள தண்டங்களிலே கண்டகமென்னலாம்படி யிருப்பதாகவும். இப்படி பரமபோக்யமான திருக்கணைக்கால்களைத் தவிர்த்து மற்று எந்த வஸ்துவிலும் கண்செல்லவொண்ணாதபடி ஆபிருப்யம் விஞ்சியிருப்பதாகவும் அருளிச் செய்கிறார்.

[கரிகிரிசிரஃ ஆக்ராதும்] அத்யந்த ப்ரீதிவிஷயமான வஸ்துவிலே ப்ரீதிபரீவாஹமாகச் செய்யும் செயல்களிலே உச்சிமோருகையென்பது ஒன்றிறே; "என் மார்வத்திடையழுந்தத் தழுவாதே முழுசாதே **மோவாதுச்சி**" என்னக்கடவதிறே. பேரருளாளன் பொருந்தி வர்த்திப்பதற்கு இத் திருமலையானது மிகவும் பாங்கான ப்ரதேசமாக வாய்த்தமையாலே அந்த ப்ரீதி விசேஷத்துக்குப் போக்குவீடாக இத்திருமலையை உச்சிமோர வேண்டுமென்று பேரருளாளனுடைய திருவடித்தாமரைகள் அதோமுகத்வத்தை ப்ராபிக்கவே, கணைக்கால்கள் நாள தண்ட ஸ்தாநீயத்வத்தை ப்ராபித்தன. ஸுந்தரபாஹுஸ்தவத்திலும்—"அதோமுகந்யஸ்தபதாரவிந்தயோஃ உதஞ்சிதோதாத்தஸுநாலஸந்நிபே | விலங்க்ய ஜங்கே க்வநு ரம்ஹதோ த்ருசௌ வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய மே ॥" என்றருளிச் செய்துள்ளமை காண்க.

திருக்கணைக்கால்களைக் கமல நாளதண்டமாகச் சொன்னால் அதுக்கு இருக்கக் கடவ கண்டக வ்யாப்தி யிருக்கவேணுமேயென்ன, அதுவுமுண்டென்கிறார் [அத்ரிஸ்பர்சேத்யாதியாலே] இஷ்டதம வஸ்து ஸங்கத்திலே ரோமாஞ்சமுண்டாகக்கடவதிறே.

[த்ரஷ்டுஃ] அநுபோக்தாவான அஸ்மாத்ருச ஜநத்துக்கு என்றபடி. ஜங்கிகே=ஜங்கே ஏவ ஜங்கிகே; ஸ்வார்த்தே கப்ரத்யயஃ; தே ஜங்கிகே லங்கிதும் த்ருஷ்டிஃ அலம் கிம்? என்றது வைத்த கண் வாங்காதே இமைக் கொட்டுதலும் செய்யாதே ஸதாதர்சநம் பண்ணவேண்டும்படியிறே தேவரீருடைய திருக்கணைக்கால்களின் அழகிருப்பதென்கை. .... .... ... (58)

**भक्तानां यद्वपुषि दहरं पण्डितं पुण्डरीकं यच्चाम्लानं वरद सतताध्यासनादासनाब्जम् ।**
**आम्नायानां यदपि च शिरो यच्च मूर्धा शठारेः हस्त्यद्रेर्वा किमतिसुखदं तेषु पादाब्जयोस्ते ॥ ५९ ॥**

**பக்தாநாம் யத் வபுஷி தஹரம் பண்டிதம் புண்டரீகம்**
**யச்சாம்லாநம் வரத ஸததாத்யாஸநாதாஸநாப்ஜம் ।**
**ஆம்நாயாநாம் யதபி ச சிரோ யச்ச மூர்த்தா சடாரே:**
**ஹஸ்த்யத்ரேர் வா கிமதிஸுகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே ॥ 59 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே ! |
| பக்தாநாம் | பக்தர்களான யோகிகளுடைய |
| வபுஷி | சரீரத்தில் |
| பண்டிதம் | ஞானவிகாஸசாலியாய் |
| தஹரம் | தஹரமென்றும் பேருடையதாய் |
| யத் புண்டரீகம் | யாதொரு தாமரையுண்டோ, [பரமபதத்தில்] |
| ஸததாத்யாஸநாத் [அபி] அம்லாநம் | நீ எப்போதும் வீற்றிருந்தபோதிலும் வாட்டமடையாத |
| ஆஸநாப்ஜம் ச யத் | ஆஸனத் தாமரையென்று யாதொன்றுண்டோ, |
| ஆம்நாயாநாம் சிரோபி ச யத் | வேதாந்தமென்பது யாதொன்றுண்டோ ; |
| சடாரே: மூர்த்தா யச் ச | நம்மாழ்வாருடைய திருமுடி யாதொன்றுண்டோ ; |
| ஹஸ்த்யத்ரே: மூர்த்தா ச ய: | இந்த ஸ்ரீஹஸ்திகிரியின் சிகரம் யாதொன்றுண்டோ |
| தேஷு | ஆக ப்ரஸித்தமான இந்த ஸ்தானங்களுள் |
| தே பாதாப்ஜயோ: அதிஸுகதம் | உன் திருவடித் தாமரைகளுக்கு மிக்க ஸுகத்தைக் கொடுக்கிற இடம் |
| கிம் வா | எது கொல் ? |

* * * பேரருளாளனுடைய திவ்யாவயவஸந்நிவேசங்களின் ஸௌந்தர்யத்திலே ஈடுபாடாய்ச் செல்லுகிற இப் ப்ரகரணத்திலே இந்த ச்லோகம் ப்ராஸங்கிகமாயிராநின்றதாய்த்து. இத் திருவடிகளின் அருமை பெருமைகளுக்குத் தகுதியாம்படி பொருந்தி வர்த்திக்கைக்குரிய நிலம் திருவத்திமாமலையினுச்சியேயாமென்கிற தம் திருவுள்ளத்தை ஒரு விலக்ஷண ப்ரச்நபங்கியாலே அருளிச் செய்கிறார்.

எம்பெருமானுடைய திருவடிகளுக்கு அதிஷ்டாந ஸ்தானங்கள் பலவுண்டு. 'போதில் கமலவன் நெஞ்சம் புகுந்து' என்றும் 'பனிக்கடலுள் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்தென் மனக் கடலுள் வாழவல்ல மாயமணாளநம்பி' என்றும் 'விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்ட கோவலன்' என்றும் அருளிச் செய்தபடியே ஆழ்வார்கள் போல்வாரான பரமபக்தர்களின் ஹ்ருதய புண்டரீகம்-நலமந்தமில்லதோர் நாட்டிலே பகவத்பாதபீடியாக பகவச்சாஸ்த்ராதிகளில் ப்ரதிபாதிதமாய் விமலாத்யஷ்டசக்த்யதிஷ்டித தளாஷ்டகவிசிஷ்டமாய் கர்ணிகாபரிகர்மிதமாய் ஸதத விகாஸோந்முகமான ஆஸனபத்மம், 'நான்மறையுச்சியில் நன்கு விளங்கிய நாரணனார்பதமே' [வில்லிபுத்தூரார் பாரதம்] என்கிறபடியே, வேத மூர்த்தாவாகிய உபநிஷத்துக்கள்; 'வந்தெனதுச்சியுளானே' என்றும் 'திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலே யென்தலையே' என்றுமருளிச் செய்தபடியே—நம்மாழ்வாருடைய திருமுடி என்னுமித்யாதிஸ்தானங்கள் உன் திருவடிகள் பொருந்தி வர்த்திக்கைக்குப் பாங்கான இடங்களென்று கேட்டிருந்தோம்; நீ இப்போது ஹஸ்திகிரி மூர்த்தாவிலே பண்ணும் விருப்பத்தைப் பார்த்தால் அவ்வோ ஸ்தானங்களெல்லாம் 'கல்லும் கனைகடலு' மித்யாதியிற்படியே * புல்லென்றொழிந்தனகொல் ! என்னும்படியாய் இவ்விடத்தையே பரமபோக்யமான ஸ்தானமாக ஆதரிக்கிறாய் போலிராநின்றி; பெருமானே ! இன்ன இடந்தான் உன் திருவடிகளுக்குப் பாங்கான இடமென்று அறுதியிடமாட்டுகிறிலேன். நீயே தெரியவருளிச் செய்தருளவேணுமென்பது பரமதாத்பர்யம்.

ப்ரமாணபலத்தாலே பக்தஜநஹ்ருதயபுண்டரீகாதிகள் உன் திருவடிகளுக்குப் பாங்கான ப்ரதேசமென்றிருந்தாலும் ப்ரத்யக்ஷத்திலே ஸ்ரீஹஸ்திகிரிமூர்த்தாவே பாங்கான ப்ரதேசமென்று விளங்குகிறது. ஆகிலும் ப்ரத்யக்ஷத்தையே ப்ரதானமாகக் கொண்டு சாஸ்த்ரப்ரமாணங்களை உபமர்திக்கும்படி ஸாஹஸம் அடியேனுக்கில்லாமையால் உன் திருவடிகளுக்கு அபிமததமமான அதிஷ்டாநபூமி இன்னதென்னுமிடத்தை நீயே சோதிவாய் திறந்து அருளிச் செய்தருளா யென்கிறார்.

"சேயோங்கு தண்திருமாலிருஞ்சோலைமலையுறையுமாயா! எனக்குரையாயிது மறைநான்கினுளாயோ? தீயோம்பு கைமறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ? அறியேனே. [பெரியதிருமொழி. 7—9—7] என்னும் பாசுரத்தை ஒரு புடை அடியொற்றியது இந்த ச்லோகம். அந்தப்பாட்டின் வ்யாக்யாநத்திலே 'இத்தால் சொல்லிற்றுத்து—ஸௌபரி பல வடிவு கொண்டாப்போலே இவ்வோவிடங்கள் தோறும் இனி அவ்வருகில்லை யென்னும்படி குறையற வர்த்திக்கிறபடியைக் காட்டிக்கொடுத்தான்.' என்றருளிச் செய்திருக்கையாலே இந்த ச்லோகத்துக்கும் அதுவே தாத்பர்யமாகலாம்.

[பக்தாநாம் யத்வபுஷி தஹறாம் பண்டிதம் புண்டரீகம்] [சாந்தோக்யத்திலே 2—1—1] 'அத யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹறம் புண்டரீகம் வேச்ம..............' இத்யாதி ச்ருதியை அநுஸந்திப்பது. ஸ்ரீபாஷ்யத்தில் தஹராதிகரணப்ரமேயத்தையும் ஸ்மரிப்பது. ... ... (59)

**पद्यास्वद्यांगुलिषु वरद प्रान्ततः कान्तिसिन्धोः वीचीवीथीविभवमुभयीष्वम्भसो लम्भितासु ।**
**विन्दन्निन्दुः प्रतिफलनजां सम्पदं किं पदं ते छायाच्छद्मा नखविततितां लम्भितश्शुम्भितस्सन् ॥ ६० ॥**

**பத்யாஸ்வத்யாங்குளிஷு வரத ப்ராந்தத: காந்திஸிந்தோ:**
**வீசீவீதீவிபவமுபயீஷ்வம்பஸோ லம்பிதாஸு ।**
**விந்தந்நிந்து: ப்ரதிபலநஜாம் ஸம்பதம் கிம் பதம் தே**
**சாயாச்சத்மா நகவிததிதாம் லம்பித: சும்பிதஸ் ஸந் ॥ 60 ॥**

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே! |
| காந்திஸிந்தோ: | காந்திக்கடலினுடைய |
| அம்பஸ: ப்ராந்தத: | நீரைச்சுற்றி |
| வீசிவீதீவிபவம் | அலை வரிசையின் சோபையை |
| லம்பிதாஸு | அடைவிக்கப்பட்டிருக்கிற |
| பத்யாஸு உபயீஷு அங்குளீஷு | திருவடிகளிலே யுண்டான இரண்டு வகுப்பான திருவிரல்களில் |
| ப்ரதிபலநஜாம் ஸம்பதம் | ப்ரதிபலிப்பதனாலுண்டான சோபையை |
| அத்ய விந்தந் | இப்போது அடைகிறவனாய் [அத ஏவ] |
| சாயாச்சத்மா | ப்ரதிச்சாயா ஸ்வரூபனான |
| இந்து: | சந்திரனானவன் |
| நகவிததிதாம் | நகபங்க்தியாயிருக்கையை |
| லம்பிதஸ் ஸந் | அடைவிக்கப்பட்டவனாய் |
| தே பதம் | உனது திருவடியை |
| சும்பித: கிம் | விளங்கச் செய்தனன் கொல்? |

* * * திருவடிகளிலுள்ள திருநகங்களை வர்ணிக்கிறார். திருவிரல்களின் வர்ணநமும் ஊடே நிகழ்கின்றது—பேரருளாளனுடைய திருமேனியிலே ஒரு காந்திஸமுத்ரமுண்டாய்த்து; கடலாகில் அலைகளுமுண்டாகவேணுமிறே. அவ்வலைகள்தானே என்னலாம்படியிராநின்றன திருவிரல்கள். அத்திருவிரல்களிலே ப்ரதிபலியாநின்ற சந்திரன் ப்ரதிச்சாயையென்னும் வ்யாஜத்தாலே நகபங்க்தியாயிருக்கையை யடைந்து திருவடிகளுக்கு சோபாவஹமாக அமைந்தானென்கிறார். ஸுந்தரபாஹுஸ்தவத்திலே 'ஸௌந்தர்யஸாரஸம்ருதஸிந்துவீசீச்ரேணீஷு பாதாம்குலிநாமிகாஸு । ந்யக்க்ருத்ய சந்த்ரச்ரியமாத்மகாந்த்யா நகாவலீ சும்பதி ஸுந்தரஸ்ய ॥" என்றருளிச் செய்தபடி காண்க.

பத்யாஸு-பதஸம்பந்திநீஷு என்றபடி. 'சரீராவயவாத்யத்' [5—1—6] என்னும் ஸூத்ரத்தால் யத்ப்ரத்யயாந்தமாயிருக்கிறது. 'உபயீஷ்வங்குலிஷு' என்றது இரண்டு திருவடிகளிலுமுள்ளமையைப் பற்ற. உபௌ அவயவௌ ஆஸாமிதி உபய்ய: ; தாஸு.

[ப்ரதிபலநஜாம் ஸம்பதம் விந்தந் இந்து:] கடலலைகள்தோறும் சந்திரன் ப்ரதிபலித்துப் பல சந்திரனைக் காணநின்றோமிறே. அப்படியே இங்கும் ஸௌந்தர்யஸாகரத்தின் தரங்கமாகிய ஒவ்வொரு திருவிரலிலும் சந்திரன் தனித்தனியே ப்ரதிபலித்து நகாவளியாக விளங்குகின்றானென்கிறார். "ப்ரதிபலநம் விந்தந்" என்றாலே போதுமாயிருக்க 'ப்ரதிபலநஜாம் ஸம்பதம்' என்றது:—சங்கரன் சடையினில் தங்கிச் சீர்குலைந்திருக்கும் சந்திரனுக்குப் பேரருளாளனுடைய திருவிரல்களிலே ப்ரதிபலிப்பதானது ஒரு [illegible] ஐச்வர்யமே என்னும் திருவுள்ளமாய்த்து. ... ... ... (60)

शम्भोरम्भोरुहमुख सखा सन् सहाङ्कश्शशाङ्कः कुर्वन् सेवां वरद विकलो वृत्तहीनस्सुवक्रः ।
त्वत्पादाब्जे प्रियमख नखच्छद्मनाऽऽश्रित्य नित्यं सद्वृत्तोऽभूत् स च दशगुणः पुष्कलो निष्कलङ्कः ॥६०॥

**சம்போரம்போருஹமுக ஸகா ஸந் ஸஹாங்கச்சசாங்கஃ**
**குர்வந் ஸேவாம் வரத விகலோ வ்ருத்தஹீநஸ் ஸுவக்ரஃ ।**
**த்வத்பாதாப்ஜே ப்ரியமக நகச்சத்மநாச்ரித்ய நித்யம்**
**ஸத்வ்ருத்தோபூத் ஸ ச தசகுணஃ புஷ்கலோ நிஷ்கலங்கஃ ॥ 61 ॥**

| | |
|---|---|
| அம்போருஹ முக | தாமரை போன்ற திருமுகத்தை யுடையவனாய் |
| ப்ரியமக | யஜ்ஞப்ரியனை |
| ஹே வரத | ஓ பேரருளாளனே ! [ஏற்கனவே] |
| ஸஹாங்கஃ | பாபமுடையவனை (2) களங்கத்தை யுடையனை |
| ஸஃ சசாங்கஃ | அந்த சந்திரனனவன் |
| சம்போஃ | ருத்ரனுக்கு |
| ஸகா | தோழனாயிருந்துகொண்டும் |
| ஸேவாம் குர்வந் | [சிரோபூஷணமாய்] ஸேவையைச் செய்தவனாயும் |
| விகலஃ | வித்யா விஹீனனாய் (2) மூளியாய் |
| வ்ருத்தஹீநஃ | ஸதாசாரஹீனனாய் (2) உருண்டை வடிவமிழந்தவனாய் |
| ஸுவக்ரஃ | குடில ஹ்ருதயனாய், (2) மிகவும் கோணலான ஆகாரமுடையவனாய் |
| ஸந் | ஆகாநின்று |
| நகச்சத்மநா | நகங்களென்கிற வியாஜத்தாலே |
| த்வத் பாதாப்ஜே | உன் திருவடித்தாமரைகளை |
| நித்யம் ஆச்ரித்ய | தினமும் ஆச்ரயித்து |
| நிஷ்கலங்கஃ | களங்கமற்றவனாய் |
| புஷ்கலஃ | நித்ய பூர்ணனாய் |
| ஸத்வ்ருத்தஃ | ஸதாசாரமுடையவனாய், (2) உருண்டை வடிவமுடையவனாய் |
| தசகுணஃ | பதின்மடங்கு பெருகினவனாய் |
| அபூத் | ஆனான். |

* * * இப்படி சந்திரன் ப்ரதிச்சாயா வ்யாஜத்தாலாவது பேரருளாளன் திருவடியை ஆச்ரயித்தமையாலே பெற்ற நன்மைகளை ச்லேஷபங்கியாலே ஒரு சமத்காரம் தோற்ற அருளிச்செய்கிறார். சந்திரனனவன் ருத்ரனுக்கு ஸகாவாகவும் ஸேவகனாகவும் இருந்துகொண்டு பாபிஷ்டனாகவும் ஞானசூன்யனாகவும் துர்வ்ருத்தனாகவும் வக்ரசித்தனாகவும் ஆய்விட்டான். 'அஸேவ்யஸேவையினாலே நாம் இத்தனை கேடுகளை யடைந்தோமே' என்று அவன்றானே அநுதபித்து நகவ்யாஜத்தாலே தேவரீருடைய திருவடியையாச்ரயித்து அந்தக் கேடுகள் நீங்கி எல்லா நன்மைகளும் அடையப்பெற்றானென்கிறார்; வரதராஜபதாச்ரயணத்திற்கு முன்பு பாபிஷ்டத்வாதிதோஷவிசிஷ்டனாய் இருந்தானென்பது சப்தச்லேஷலப்யம். எங்ஙனேயென்னில்; [ஸஹாங்கஃ, விகலஃ, வ்ருத்தஹீநஃ, ஸுவக்ரஃ] அங்கேந ஸஹிதஃ ஸஹாங்கஃ, 'அங்கோலாஞ்சந உத்ஸங்கே கலங்கே பாபதுஃகயோஃ' இதி ஹலாயுதஃ. சந்திரன் களங்க விசிஷ்டனென்னுமிடம் ஸுப்ரஸித்தம். அங்கசப்தார்த்தம் பாபமுமாகையாலே பாபிஷ்டனாய்க் கிடந்தானென்னுமிடமும் தோற்றுகிறது. [விகலஃ] விகதா கலா யஸ்ய ஸஃ. கலா என்று சாஸ்த்ர விஜ்ஞானத்திற்கும் ஷோடசாம்சத்திற்கும் பெயர். 'கலா சில்பாதிவிஜ்ஞாநே பாகே சந்த்ரஸ்ய ஷோடசே' இதி மேதிநீ. ருத்ரசிரஸ்ஸிலுள்ள சந்திரன் கலாமாத்ரனாகையாலே பூர்ணனல்லனிறே. விகலனென்று மூளியென்றபடி, க்ஷயிஷ்ணு என்னவுமாம். இது வாஸ்தவார்த்தம். அறிவு கெட்டிருந்தானென்னுமர்த்தம் ச்லேஷசக்திலப்யம். [வ்ருத்தஹீநஃ] 'வ்ருத்தோऽதீதேऽப்யதீதேऽபி வர்துலேऽபி ம்ருதே வ்ருதே। வ்ருத்தேऽந்யலிங்கம் வா க்லீபே சந்தச்சாரித்ரவ்ருத்திஷு ।' இதி மேதிநீ. பூர்ணசந்த்ரனுக்கிறே வர்த்துலாகாரனாயிருக்கலாவது. அபூர்ணனாகையாலே வர்த்துலாகார சூந்யனென்பது வாஸ்தவார்த்தம். வ்ருத்தமென்பது ஸச்சரித்ரத்துக்கும் பேராகையாலே நல்ல நடத்தையில்லாதவனென்பது ச்லேஷசக்திலப்யார்த்தம் ॥ [ஸுவக்ரஃ] 'வக்ரஃ குடிலே க்ரூரபௌமயோஃ' இதி ஹைமஃ. சரீரத்திலே கௌடில்யமும் புத்தியிலே கௌடில்யமும் ஆக இரண்டுமுள்ளவனை வக்ரனென்பதுண்டு. இங்கே சரீரகத கௌடில்யம் வாஸ்தவார்த்தம். கோண

லான [அதாவது—ருஜுவல்லாத] புத்தியையுடையவனு யிருந்தானென்பது ச்லேஷசக்திலப்யார்த்தம். ஆக, ஸஹாங்கத்வம், விகலத்வம் வ்ருத்தஹீநத்வம் ஸுவக்ரத்வ மென்கிற நாலு தோஷங்கள் சந்த்ர னுக்கு முன்னே யிருந்தன. எந்த ஸமயத்திலே இக்குறைகள் இருந்தனவென்ருல், அதைக் காட்டுகிருர் [சம்போ: ஸகா ஸந் சம்போ: ஸேவாம் குர்வந் என்று.] ஈசாநதிக்கானது ஸோமதிக்குக்கு ஸந்நிஹிதமான மைபற்றி 'சம்போஸ்ஸகா ஸந்' என்றது. சிவசிரஸ்ஸுக்கு பூஷணமாயிருக்கும் தன்மைபற்றி 'ஸேவாம் குர்வந்' என்றது. 'ஸஹாங்க:' என்ற விசேஷணமொன்று மாத்திரம் 'குர்வந் ஸேவாம்' என்பதற்குப் பூர்வவர்த்தியாகையாலே ஸஹாங்கத்வமாகிற தோஷம் ஸ்வாபாவிகமென்றும் மற்ற விகலத்வாதிதோஷங் கள் அந்த தேவதாந்தரத்தின் ஸம்பந்தத்தாலே நேர்ந்தவையென்றும் விளங்காநிற்கும்.

இனி ஸ்ரீ தேவாதிராஜ சரணாரவிந்தஸமாச்ரயணத்தாலே இக் குறைகளெல்லாம் நீங்கி நன்மை பெற்ருனென்கிறது,—உத்தரார்த்தம். 'த்வத்பாதாப்ஜே' என்றது த்விதீயாத்விவசநம். 'ப்ரியமக!' என்று ஸம்போதனம். ஸஹாங்கனும் விகலனும் வ்ருத்தஹீநனும் ஸுவக்ரனும் இருந்த சந்திரன் பேரருளாளனுடைய திருவடித் தாமரைகளிலே நகவ்யாஜேந ஸமாச்ரயித்த பின்பு, நித்யம் ஸத்வ்ருத்த னும் தசகுணனும் புஷ்கலனும் நிஷ்கலங்கனுமாய்விட்டானென்கிற விதிலும் ச்லேஷமர்யாதை யாயிருக்கிறது. நகசந்த்ரனுக்கு வர்த்துலாகாரத்திலே குறையில்லாமையாலே ஸத்வ்ருத்தனென்கிறது. [ஸத் வ்ருத்தம் யஸ்மிந் ஸ:—வித்யமாநவர்த்துலாகார: என்றபடி.] பத்துத் திருவிரல்களிலும் பத்து (நக) சந்திரனுக வடிவுகொண்டமையாலே தசகுணனென்கிறது. நகத்வாவஸ்தையிலே பூர்த்திக்குக் குறை யில்லாமையாலே புஷ்கலனென்கிறது. மத்ய களங்கமுள்ளது ஆகாசஸ்த சந்த்ரனுக்கே யாகையாலும் நகசந்த்ரனுக்கு அப்படிப்பட்ட களங்கமிருக்க ப்ரஸக்தியில்லாமையாலும் நிஷ்களங்கனென்கிறது. பூர்வார்த்தத்திலே 'ஸஹாங்க:' என்றதுக்கு ப்ரதித்வந்த்வியாக இங்கே 'நிஷ்கலங்க:' என்றும் 'விகல:' என்றதற்கு ப்ரதிபடமாக 'தசகுண:' என்றும் 'வ்ருத்தஹீந:' என்றதற்கு ப்ரதியாக 'ஸத்வ்ருத்த:' என்றும் 'ஸுவக்ர:' என்றதற்கு ப்ரத்யநீகமாக 'புஷ்கல:' என்றும் அருளிச்செய்துள்ளபடி காண்க. நூநம் தேவதாந்தரஸேவா அபகர்ஷகரீ; பகவத்ஸேவா உத்கர்ஷகரீதி பாவ: இதி ஸம்ஸ்க்ருதவ்யாக்யாத ஸூக்தி:.

'யோ ஜாதக்ரசிமா மலீ ச சிரஸா ஸம்பாவிதச்சம்புநா ஸோऽயம் யச்சரணச்ரயீ சசதர: நூநம் நகவ்யாஜத:। பூர்ணத்வம் விமலத்வமுஜ்ஜ்வலதயா ஸார்தம் பஹுத்வம் ததா யாதஸ்தம் தருஷண்ட சைலநிலயம் வந்தாமஹே ஸுந்தரம்॥' என்ற ஸுந்தரபாஹுஸ்தவச்லோகமும் இங்கு நினைக்க. ... (61)

त्वत्पादाब्जे प्रजाता सुरसरिदभवत्प्राक्चतुर्धा ततस्तासु
एकां धत्ते ध्रुवस्सा त्रिभुवनमपुनात्त्रीन्पथो भावयन्ती।
तत्रैका खं व्रजन्ती शिवयति तु शिवं सा पुनस्सप्तधाऽभूत्
तास्त्वेका गां पुनाना वरद सगरजस्वर्गसर्गं चकार ॥ ६२ ॥

த்வத் பாதாப்ஜே ப்ரஜாதா ஸுரஸரிதபவத் ப்ராக் சதுர்த்தா ததஸ்தாஸு
ஏகாம் தத்தே த்ருவஸ் ஸா த்ரிபுவநமபுநாத் த்ரீந் பதோ பாவயந்தீ।
தத்ரைகா கம் வ்ரஜந்தீ சிவயதி து சிவம் ஸா புநஸ் ஸப்ததாபூத்
தாஸ்வேகா காம் புநாநா வரத ஸகரஜஸ்வர்கஸர்கம் சகார ॥ 62 ॥

| | |
|---|---|
| ஹே வரத | ஓ வரதனே! |
| த்வத்பாதாப்ஜே | உன் திருவடித்தாமரையில் |
| ப்ரஜாதா | உண்டான |
| ஸுரஸரித் | கங்கையானது |
| ப்ராக் | முந்துறமுன்னம் |
| சதுர்த்தா | நான்கு பிரிவாக |
| அபவத் | ஆயிற்று |
| தத: | பிறகு |
| தாஸு | அந்த நான்கில் |
| ஏகாம் | ஒன்றை |
| த்ருவ: | த்ருவனனவன் |
| தத்தே [ஸ்ம] | தரித்தான்; |

| | |
|---|---|
| ஸா | த்ருவனல் தரிக்கப்பட்ட அது |
| த்ரீந் ப்த: | மூன்று மார்க்கங்களை |
| பாவயந்தீ ஸதீ | உண்டாக்கா நின்றுகொண்டு |
| த்ரிபுவநம் | [ஸ்வர்க்க, அந்தரிக்ஷ, பாதாள] லோகத்ரயத்தை |
| அபுநாத் | பரிசுத்தமாக்கிற்று ; |
| தத்ர | மூன்று வழியாகப்பெருகின அவற்றுள் |
| கம் வ்ரஜந்தீ | அந்தரிக்ஷம் நோக்கிச் செல்கின்ற |
| ஏகா து | ஒரு நதியோவென்றால் |
| சிவம் சிவயதி | ருத்ரனைப் பரிசுத்தமாக்குகிறது ; |
| ஸா புந: | சிவனாலே தரிக்கப்பட்ட கங்கையோ வென்றால் |
| ஸப்ததா அபூத் | ஏழு பிரிவாக ஆயிற்று ; |
| தாஸு | அவைகளில் |
| காம் புநாநா | பூமியைப் பரிசுத்தமாகச் செய்கின்ற |
| ஏகா | ஒரு கங்கையானது |
| ஸகரஜ ஸ்வர்க்க ஸர்க்கம் சகார | ஸகரபுத்ரர்களுக்கு ஸ்வர்க்க ஸ்ருஷ்டியைப் பண்ணிற்று. [ஸகரபுத்ரர்களை ஸ்வர்க்கம் அடையச் செய்தது.] |

* * * பேரருளாளனுடைய திவ்யாவயவங்களின் வர்ணநம் கீழ் ச்லோகத்தோடே தலைக் கட்டிற்றாகிலும் இந்த ச்லோகமும் தச்சேஷபூதமாயிருக்கும். கீழ் திருக்கைகளை வர்ணித்தருளும்போது 'அம்போதேஸ்ஸ்வயமபிமந்தநம் சகர்த்த' என்னும் ச்லோகம் போலே இதுவும் ப்ராஸங்கிகமாம். பண்டொருகால் த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளின காலத்திலே "குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி - கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான் அண்டத்தான் சேவடியை யாங்கு" [நான்முகன் திருவந்தாதி] என்றருளிச் செய்தபடியே திருவடி விளக்கின தீர்த்தம் பலமுகமாய்ப் பெருகினபடியை அருளிச் செய்கிறார்.

[ப்ராக்] அன்றிவ்வுலகமளந்தகாலத்து. [த்வத்பாதாப்ஜே ப்ரஜாதா ஸுரஸரித் சதுர்த்தா அபவத்] தேவரீருடைய திருவடித்தாமரையில் நின்றும் பெருகின கங்கையானது நாலுபடியாய்ப் பெருகலுற்றது. அவற்றில் ஒரு படியை அருளிச்செய்கிறார் [தாஸ்வேகாம் தத்தே த்ருவ:] என்று. உத்தாநபாதனென்னும் சக்ரவர்த்தியின் புத்ரனாகிய த்ருவன் ஒரு கங்கையைத் தான் வஹியாநின்றான். த்ருவத்ருதையான அந்த கங்கை செய்தபடியை அருளிச்செய்கிறார். [ஸா த்ரிபுவநமபுநாத் த்ரீந் பதோ பாவயந்தீ] என்று. அந்த கங்கையானது மூன்று மார்க்கங்களை உண்டாக்கிக்கொண்டுபோய் ஸ்வர்க்கம், அந்தரிக்ஷம், பாதாளம் என்னும் த்ரிபுவநத்தையும் பரிசுத்தமாக்கிற்று. த்ருவனாலே தரிக்கப்பட்ட கங்கையானது மூன்று படியாகப் பெருகி மூவுலகங்களையும் தூய்மைபெறுவித்ததென்கை. அந்த மூன்று பெருக்குகளிலே ஒரு பெருக்கின் படியை அருளிச்செய்கிறார்.—தத்ரைகேத்யாதியாலே, [தத்ர கம் வ்ரஜந்தீ ஏகா து சிவம் சிவயதி] மூன்று வழியாகப்பெருகின அவற்றுள் அந்தரிக்ஷத்தை நோக்கிச்சென்ற ஒரு பெருக்கானது ருத்ரனுடைய சிரஸ்ஸுக்கு அணிகலமாகி அவனைப் பரிசுத்தனாக்கிற்று. "கஸ்ய பாதோதகேந ஸ சிவ: ஸ்வசிரோத்ருதேந?" என்றிறே ஆளவந்தாரருளிச் செய்தது. ஸ்ரீபாகவதத்திலும் 'ஸஞ்சிந்தயேத் பகவதச் சரணாரவிந்தம்' என்று தொடங்கி 'யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித் ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்நி வித்ருதேந சிவச்சிவோऽபூத்' என்று சொல்லிற்று. உத்யோகபர்வத்தில் 'அத்ர கங்காம் மஹாதேவ: பதந்தீம் ககநாச்யுதாம் ! ப்ரக்ருஹ்ய ப்ரததௌ லோகே மாநுஷே ப்ரஹ்மவித்தம: ॥ என்று கூடமாகச் சொல்லப்பட்டவிது ஈச்வரஸம்ஹிதையிலே 'த்ரவீபூதஸ்ததா தர்மோ ஹரிபக்த்யா மஹாமுநே ! க்ருஹீத்வா தர்ம பாநீயம் பதம் நாதஸ்ய துஷ்டயே ॥ க்ஷாலிதம் பரயா பக்த்யா பாத்யார்க்யாதிபிரர்ச்சிதம் | ததம்பு பரயா பக்த்யா ததார சிரஸா ஹர: । பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோऽஸ்மீத்யவதாரணாத் | வர்ஷாயுதாந்யத பஹூந் ந முமோச ததா ஹர: ॥' என்று ஸுவ்யக்தமாகக் கூறப்பட்டது. சிவசிரோத்ருதையான அந்த கங்கையின் படியை அருளிச் செய்கிறார் ஸா புநரித்யாதியாலே. [ஸா புந:]—சிவனைப் பரிசுத்தமாக்கின அந்த கங்கையோவென்றால், [ஸப்ததா அபூத்]—ஹ்ராதிநீ பத்மிநீத்யாதி நாமங்களாலே ஏழுபடியாகப் பெருகிற்று. [தாஸு ஏகா காம் புநாநா ஸதீ ஸகரஜஸ்வர்க்கஸர்க்கம் சகார] ஏழுபடியான அவற்றுள் ஒன்றானது பூமியைப் பரிசுத்தப் படுத்தாநின்றுகொண்டு ஸகரபுத்ரர்களுக்கு ஸ்வர்க்க ஸ்ருஷ்டியைப் பண்ணித் தந்தது. ஒருகால் ஸகரசக்ரவர்த்தி அச்வமேத யாகம் பண்ணுமளவிலே அந்த அச்வமானது காணமல் போக, அதனைத் தேடிக் கொணர்வதற்காகப் பிதாவாலே நியமிக்கப்பட்ட ஸகரபுத்ரர்கள், குற்றமற்ற பல ப்ராணிகளை ஹிம்ஸித்துக்கொண்டு பாதாளம் வரையில் நிலத்தைத் தோண்டிக்கொண்டு போகையில்

கபிலமஹாமுனியின் அருகிலே குதிரையைக் கண்டு அந்தக் கபிலமஹர்ஷியை அபிபவிக்கப்புக, உடனே அவர் இவர்களை பஸ்மீகரித்துவிட, பகீரதப்ரயத்நத்தினால் பூலோகத்திலே கொணரப்பட்ட கங்கையின் தீர்த்தத்தைத் தெளித்து பஸ்மமாய்க்கிடந்த அவர்கள் ஸ்வர்க்கலோக மடைவிக்கப்பட்டனர் என்று ஸ்ரீராமாயணத்தில் பாலகாண்டத்தில் [38-43 ஸர்க்கங்களில்] சொல்லப்பட்ட கதையை அநுஸந்திப்பது.

ஆகவிந்த ச்லோகத்தாலே—ஸர்வ லோகங்களையும் பரிசுத்தப்படுத்தவல்ல தீர்த்த விசேஷத்தை வெளிப்படுத்தின பெருமை எம்பெருமான் திருவடிக்கு அஸாதாரணமென்று அநுஸந்திக்கப்பட்டதாய்த்து.

இந்த ச்லோகம் முதல் 'நரஸிம்ஹதநூரகௌணீ' என்றும் ச்லோகமளவாகவுள்ள தசகம் கீழ்மேல் தசகங்கள் போலே ஒரே வ்ருத்தத்திலே அமையாதே நாநாவ்ருத்தங்களிலே அமைந்திருக்கும். இந்த ச்லோகம் ஸ்ரக்தராவ்ருத்தம். 'ம்ரப்நைர்யாநாம் த்ரயேண த்ரிமுநியதியுதா ஸ்ரக்தரா கீர்த்திதேயம்' இதி தல்லக்ஷணம் ॥ .... .... — .... .... .... (62)

परिजनपरिबर्हा भूषणान्यायुधानि प्रवरगुणगणाश्च ज्ञानशक्त्यादयस्ते ।
परमपदमथाण्डान्यात्मदेहस्तथाऽऽत्मा वरद सकलमेतत् संश्रितार्थं चकर्थ ॥ ६३ ॥

**பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி ப்ரவரகுணகணாச்ச ஜ்ஞாநசக்த்யாதயஸ்தே ।**
**பரமபதமதாண்டாந்யாத்மதேஹஸ் ததாத்மா வரத ஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த ॥ 63 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | வரதனே ! | ப்ரவரகுண கணாச்ச | சிறந்த குணகணங்களும் |
| பரிஜந பரிபர்ஹா: | சேஷ சேஷாசநாதி பரிஜநங்களும் சத்ரசாமராதிபரிச்சதங்களும் | பரமபதம் | பரமபதமும் |
| பூஷணாநி | கிரீடகுண்டலாதி பூஷணங்களும் | அத அண்டாநி | அண்டங்களும் |
| ஆயுதாநி | திருவாழி திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்களும் | ஆத்மதேஹ: | ஸ்வாஸாதாரணவிக்ரஹமும் |
| | | ததா ஆத்மா | திவ்யாத்மஸ்வரூபமும் |
| ஜ்ஞாநசக்த்யாதய: | ஜ்ஞாநசக்தி முதலிய | ஏதத் ஸகலம் | ஆகிய இவையெல்லாவற்றையும் |
| | | ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த | ஆச்ரிதர்களுக்காக்கினாய். |
| தே | ப்ரஸித்தங்களான | | |

* * * இந்த வரதராஜஸ்தவமாகிறது த்வயவிவரணமென்றிறே பலகாலும் சொல்லிப்போந்தது. 'ஸ்ரீநிதிம் நிதிமபாரமர்த்திநாம்' என்கிற ச்லோகத்தாலே ஸ்ரீமத்பதத்தை விவரித்து, மேல் ப்ரதம தசகம் முடிய நாரபதார்த்தத்வேந திருமலையின் சிறப்பையருளிச்செய்து, நாராயணபதத்திலே குணப்ராதாந்ய விவக்ஷையாலே திருக்கல்யாண குணங்களை த்விதீயதசகத்திலருளிச்செய்து, திவ்யமங்களவிக்ரஹயோகமும் நாராயணசப்தார்த்தமாகையாலும் சரணசப்தார்த்ததயா ஆக்ஷேபத: ப்ராப்தமாகையாலும் அத்திருமேனியை யநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி 'பாணிபாதவதநேக்ஷணசப்தை:' என்று தொடங்கி கீழ் ச்லோகமளவாக வடிவழகு வர்ணநத்திலே ஊன்றினர். இந்த திவ்யமங்களவிக்ரஹாநுபவமானது ராம க்ருஷ்ணாதிவிபவாவதாரத் திருமேனியநுபவத்திலே கொண்டு மூட்டிற்று. மேல் அப்படியே அநுபவிக்கப் புகுகிறாராய் அதற்கு முகவுரையாய் இராநின்றதாய்த்து இந்த ச்லோகம். 'ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம் ! ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே' என்ற ஜிதந்தாச்லோகவிவரணமாயாய்த்து இந்த ச்லோகமிருப்பது. எம்பெருமானுடைய ஸ்வரூபரூபாதிகளெல்லாம் பரார்த்தமாகையாலே அந்த பாரார்த்த்யம் வெளியாம்படிக் குறுப்பாகத் திருவவதாரங்கள் செய்தருள நேர்ந்ததென்று இத்தால் அருளிச் செய்கிறபடி.

[பரிஜநபரிபர்ஹா:] பரிஜநபரிச்சதங்கள் ஆச்ரிதார்த்தமாயிருக்கையாவதெங்ஙனே யென்னில்; அடியார்கள் குழாங்களையுடன் கூடுவதென்றுகொலோ? என்று ஆழ்வார் வாய்வெருவுகையாலே பகவத பரிஜநம் ஆச்ரிதர்க்கு ப்ராப்யமாயிறே யிருப்பது. பரிஜநமாவது நித்யஸூரி வர்க்கம். ஆச்ரிதராவார் ஆழ்வார்போல்வார். பகவதர்த்தமாக அன்று காணும் நித்யஸூரிகள் சமைத்திருப்பது; ஆச்ரிதர்க்கு உசாத்துணையாவதற்கேயிறே. 'நித்யாபிவாஞ்சிதபரஸ்பரநீசபாவை: மத்தைவதை: பரிஜநைஸ்தவ ஸங்க

ஸீய [ஸ்ரீவைகுண்டஸ்தவே] என்னக்கடவதிறே. இனி பரிபர்ஹமாவது சத்ரசாமராதிபரிச்சத. வர்கம், இவை ஸூரிகோடியிலே அந்தர்ப்பூதமாயிருக்கச் செய்தேயும் நித்யஸூரிகளுக்குக் கைங்கர் யோபகரணமாயிறேயிருப்பது; ஆகையாலே இவையும் ஆச்ரிதார்த்தமாயின.

[பூஷணானி] தந்தாமுடைய பூஷணாதிகள் எம்பெருமானுக் குறுப்பாகவேணுமென்று அல்லாதார் விரும்பாநிற்க, எம்பெருமான் தன்னுடைய பூஷணாதிகளை ஸ்வாச்ரிதர்களுக்குறுப்பாகவிறே விரும்பிப் போருகிறது.

[ஆயுதாநி] இவையும் ஆச்ரித விரோதி நிரஸநத்திற்கு ஆயுதமாகவும், வினையற்று அநுபவிப் பார்க்கு ஆபரணமாயுமிருக்கும். எவ்வகையிலும் பாரார்த்யமேயாய்த்து இவற்றுக்கு வடிவாயிருப்பது, 'எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்' என்றும், 'கூரா ராழி வெண் சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்' என்றுமிறே அருளிச்செயல். ஆயுதத்தின் பாரார்த்யத்தை ஜயத்ராதவதப்ர கரணத்திலே தெளியக் கண்டுகொள்வது. 'நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற' இத்யாதி.

[ஜ்ஞாநசக்த்யாதயஃ ப்வரகுணகணாஃ ச] ஜ்ஞாநம்—அஜ்ஞர்க்கு, சக்தி—அசக்தர்க்கு, க்ஷமை—ஸாபராதர்க்கு, க்ருபை—துக்கிகளுக்கு, வாத்ஸல்யம்—ஸதோஷர்க்கு, சீலம்—மந்தர்க்கு, ஆர்ஜவம்—குடிலர்க்கு, ஸௌஹார்த்தம்—துஷ்டஹ்ருதயர்க்கு. மார்தவம்—விச்லேஷபீருக்களுக்கு, ஸௌலப்யம்—காணவாசைப்பட்டவர்க்கு என்கிற இவ்வடைவிலே திருக்கல்யாணகுணங்களெல்லாம் ஆச்ரிதார்த்த மாயிறே யிருப்பது. சௌர்யவீர்யாதிகுணங்களுக்கு ஆச்ரிதார்த்தத்வமுண்டோவென்னில்; ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தயா க்ரோதாதேரபி கல்யாணகுணசப்தேந ஸங்க்ரஹஃ' என்றுகத்ய பாஷ்யத்திலே தேசிக னருளிச் செய்த கட்டளையிலே அவையும் ஆச்ரிதார்த்தமாகக் குறை யில்லை.

[பரமபதம்] இதுவும் போகஸ்தானமன்றிக்கே ஆச்ரிதர்க்காகச் சமைந்ததாயிருக்கும், திருவாய் மொழி [3—8—8] 'வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்ளென்று வீடும் தரும் நின்று நின்றே' என்ற விடத்திலே ஈடு ஸேவிப்பது.

அண்டங்களெல்லாம் எம்பெருமானுடைய க்ரீடையிலே விநியுக்தங்களாயிருக்குமென்று சொல்லி யிராநிற்க, இங்கே 'ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த' என்ற தெங்ஙனே? என்னில்; இவற்றையெல்லாம் ஆச்ரி தர்க்கு உறுப்பாக்குகை தான் எம்பெருமானுடைய லீலைக்கு விஷயமிறே. ஆகையாலேவ்யாகாதமில்லை.

[ஆத்மதேஹஃ] திவ்யமங்கள விக்ரஹமும் ஆச்ரிதர்க்கேயாயிருக்கும். பரமபதத்திலே ஸூரிக ளுக்கு போகயோக்யமாயிருக்கும். வ்யூஹத்தில் வந்தால் ச்வேதத்வீபவாஸிகளுக்கு போகயோக்யமா யிருக்கும். ப்ரஹ்மாதிகளுக்கு ஆச்ரயணீயமா யிருக்கும். விபவங்களில் வந்தால் அதீந்த்ரியமான விக்ரஹத்தை ஸாதுபரித்ராணார்த்தமாக இந்த்ரியகோசரமாக்கி அநுபவிப்பிக்கைக்கு உரித்தாயிருக்கும்! அர்ச்சாவதாரங்களிலே வந்தால் 'பின்னானார் வணங்கும் சோதி' என்கிறபடியே அஸ்மதாதிகளுக்கேயா யிருக்கும்.

இங்ஙனே பல சொல்லி என்? உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபமே பரார்த்தமாயிருக்கு மென்கி றார். [ஆத்மா—இத்யேதத் ஸகலம் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த] நிலாத்தென்றல் சந்தநாதிகள் போலே தனக் கென்ன ஒன்றின்றிக்கே பிறர்க்கேயாயிருக்குமித்தனை.

இந்த ச்லோகம் மாலினீவ்ருத்தம். ... ... ... ... (63)

अनाप्तं ह्याप्तव्यं न तव किल किंचिद्वरद ते जगज्जन्मस्थेमप्रलयविधयो धीविलसितम् ।
तथाऽपि क्षोदीयस्सुरनरकुलेष्वाश्रितजनान् समाश्लेष्टुं पेष्टुं तदसुखकृतां चावतरसि ॥ ६४ ॥

அநாப்தம் ஹ்யாப்தவ்யம் ந தவ கில கிஞ்சித் வரத! தே
ஜகஜ்ஜந்மஸ்தேமப்ரலயவிதயோ தீவிலஸிதம் ।
ததாபி க்ஷோதீயஸ் ஸுரநரகுலேஷ்வாச்ரிதஜநாந்
ஸமாச்லேஷ்டும் பேஷ்டும் ததஸுகக்ருதாம் சாவதரஸி ॥ 64 ॥

| | |
|---|---|
| ஹே வரத ! | வரதனே !: |
| தவ | உனக்கு |
| அநாப்தம் | முன்பு கிடைக்காததாய் |
| ஆப்தவ்யம் | பிறந்து படைக்கவேண்டியதான |
| கிஞ்சித் | ஒன்றும் |
| ந கில | இல்லையிறே, |
| ஹி | ஏனென்றால் |
| ஜகஜ்ஜந்மஸ்தேம ப்ரலய விதய: | ஜகத்துக்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கார்யங்கள் |
| தே தீ விலஸிதம் | உனது ஸங்கல்பத்தின் விலாஸமாக நிகழ்கின்றதிறே ; |
| ததாபி | அப்படிப்பட்ட அவாப்தஸமஸ்த காமனாயினும் |
| ஆச்ரித ஜநாந் | [க்ஷண விரஹாஸஹிஷ்ணுக்களான] பாகவதர்களை |
| ஸமாச்லேஷ்டும் | அணைக்கைக்கும் |
| தத்ஸுக்ருதாம் | அந்த பாகவதர்களுக்குத் தீங்கிழைக்கும் துஷ்டர்களை |
| பேஷ்டும் ச | பொடிபடுத்துவதற்கும் |
| க்ஷோதீயஸ்ஸுர நரகுலேஷு | அதிக்ஷுத்ரமான தேவ மநுஷ்யாதி ஜாதிகளில் |
| அவதரஸி | அவதரித்தருளா நின்றாய். |

* * * 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்' என்று எம்பெருமான்றானே * சோதிவாய் திறந்து அருளிச் செய்ததை விவரியாநின்றுகொண்டு அவதாரஹேது இன்னதென்னுமிடத்தை அருளிச் செய்கிறார். ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துவதற்காகத் திருவவதரிக்கின்றானென்று சிலர் நினைக்கக் கூடுமென்று திருவுள்ளம்பற்றி அவற்றுக்கு அந்யதாஸித்தியை அருளிச் செய்கிறார் பூர்வார்த்தத்தாலே. [வரத ! தவ அநாப்தம் ஆப்தவ்யம் கிஞ்சிந்நாஸ்தி கில] நீ அவாப்த ஸமஸ்த காமனென்றிறே ப்ரஸித்தி பெற்றிரா நின்றாய். இது வரையில் பெறுததாய் இனிப் பெறக்கடவதான ஒன்றும் இவ்வுலகில் இல்லை காண். ஆகையாலே ஏதேனுமொரு அபீஷ்ட ஸித்திக்காக நீ இந்நிலத்திலே வந்து திருவவதரிக்கிறா யென்கைக்கு அவகாச மில்லை. 'விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூய: ஸஞ்ஜஹ்ருஷ:' இத்யாதிப்படியே ஸங்கல்ப மாத்ரத்தாலே ஸ்ருஷ்ட்யாதிகளை நிர்வஹிக்க வல்ல நீ ததர்த்தமாக அவதரித்தா யென்கை அஸங்கதம், 'ஸோகாமயத | பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி | ஸ தபோதப்யத, ஸதபஸ் தப்த்வா | இதம் ஸர்வமஸ்ருஜத | யதிதம் கிஞ்ச' என்றிறே ஓதிக்கிடக்கிறது.

பின்னை எதுக்காகத் திருவவதரித்த தென்ன [ஆச்ரித ஜநாந் ஸமாச்லேஷ்டும் தத்ஸுக்ருதாம் பேஷ்டும் சாவதரஸி] என்கிறார். ஸங்கல்பமாத்ரத்தாலே எதையும் செய்தருளக் கூடுமாகிலும் ஸாது பரித்ராணம் ஸங்கல்ப ஸாத்யமாகாதிறே. 'கள்ள மாயா ! உன்னை என்கண் காணவந்து ஈயாயே' என்றும், 'என் கண்கட்குத் திண்கொள்ள வொருநாள் அருளாய் உன் திருவுருவே' என்றும் ப்ரார்த்திக்கு மவர்களுடைய காதலை ஸங்கல்பத்தாலே தலைக்கட்டப் போகாதிறே. 'மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும் பாயார்க்களித்தாலுன் சுடர்ச்சோதி மறையாதே' இருந்தவிடத்திலே இருந்து ஸங்கல்பரூபஜ்ஞானத்தாலே ரக்ஷித்தாயாகில் 'ஆனையிடர்ப்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத் தலைகுலைய உணர்த்தியற்று வந்து விழுந்தான்' என்கிற நிரவதிக தேஜஸ்ஸு இழந்ததேயன்றோ என்றாரிறே. ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய கையில் பூவைச் செவ்வியழியாமே திருவடிகளிலே இடுவித்துக் கொண்டது ஸங்கல்பத்தாலே ரக்ஷிக்கப் பார்க்குமன்று பொருந்தாதிறே. இவ் வர்த்த விசேஷங்கள் தோன்றுகைக்காக வாய்த்து 'ஆச்ரித ஜநாந் ரக்ஷிதும்' என்னாதே 'ஸமாச்லேஷ்டும்' என்றருளிச் செய்தது.

[தத்ஸுக்ருதாம் பேஷ்டும் ச] தத் —கீழ்ச் சொன்ன ஆச்ரித ஜநங்கள் என்றபடி. * ஸாது சனத்தை நலியும் கஞ்சன்போல்வாரைக் கிழங் கெடுக்கைக்காகவும் என்கை.

துஷ்டர்களை ஸங்கல்பத்தாலே அழித்துவிட முடியாதோ? அதற்காக வந்து பிறக்கவேணுமோ வென்னில் ; ஸ்ரீ வசனபூஷணத்தில்—'ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறுமை யென்று ஜீயர் அருளிச் செய்வர்." என்ற விடத்து வ்யாக்க்யானம் ஸேவித்துத் தெளிக. "ஸங்கல்பமாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னை யழிய மாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்யராவணாதி நிரஸந ரூபங்களான அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் தொடக்கமான அவ்வொ பாகவத விஷயங்களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று ஆப்ததம

[illegible] நஞ்சீயர் அருளிச் செய்வர்" என்பது மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகள். ஸாது பரித்ராணத்தையும் துஷ்ட நிரஸநத்தையும் ஸங்கல்பத்தினலேயே ஸாதிக்க வல்லவனயினும் அப்படி ஸாதிக்க எம்பெருமானுக்குத் திருவுள்ள மில்லை யென்றதாயிற்று. இந்த ச்லோகம் சிகரிணீ வ்ருத்தம். (64)

**विवेकधियमेकतो ह्यभिनिवेशलेशो हरेत् महत्त्वभिनिवेशनं किमुत तन्महिम्नस्तव ।**
**अहो विसदृशे जगत्यवततर्थ पार्थादिकं निजं जनमुदञ्चयन् वरद तं समाश्लेषकः ॥ ६५ ॥**

**விவேகதியமேகதோ ஹ்யபிநிவேசலேசோ ஹரேத்**
**மஹத்த்வபிநிவேசநம் கிமுத தந்மஹிம்நஸ் தவ ।**
**அஹோ விஸத்ருசே ஜகத்யவததர்த்த பார்த்தாதிகம்**
**நிஜம் ஜநமுதஞ்சயந் வரத தம் ஸமாச்லேஷக: ॥ 65 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத! | பேரருளாளனே! | தவ மஹிம்ந: | உனது பெருமைக்கு |
| ஏகத: | ஒரு வஸ்துவிலுள்ள | விஸத்ருசே | அநுருபமல்லாத |
| அபிநிவேச லேச: | ஆசாலேசமும் | ஜகதி | இந்த லோகத்தில் |
| விவேகதியம் | [இது தக்கது, இது தகாதது என்று பகுத்தறிவதாகிற] விவேகஜ்ஞானத்தை | பார்த்தாதிகம் | அர்ஜுநாதிகளை |
| | | நிஜம் ஜநம் உதஞ்சயந் | பந்துஜநமாக ஸம்பாவியா நின்றவனாய் |
| ஹரேத் ஹி | கொள்ளைகொள்ளுமிறே; | தம் | அந்த அர்ஜுநாதி ஜனத்தை |
| மஹத் அபிநிவேசநம் து | அதிகமான ஆசையோ வென்றல், | ஸமாச்லேஷக: | தன்னேடு ஒரு நீராக்கச் செய்கிறவனாய் |
| கிமுத | விவேகத்தை அழிக்கு மென்பதில் என்ன ஸம்சயம்?. | அவததர்த்த | அவதரித்தருளினாய்; |
| | | அஹோ | இதொரு ஸௌசீல்ய மிருந்தபடியென்! |
| தத் | ஆகையால் | | |

* * * கீழ் ச்லோகத்தில் ப்ரஸ்துதமான ஸௌசீல்யத்தை அநுஸந்தித்து விஸ்மிதராகிருர். ஏகத: அபிநிவேசலேச: விவேகதியம் ஹரேத்] ஒரு வஸ்துதன்னிலே ஸ்வல்பமபிநிவேசமுண்டானலும் அது விவேகஜ்ஞானத்தைக் குலைத்துவிடுமென்னுமிடம் ஜகத் ப்ரஸித்தமிறே. 'இந்த வஸ்து நமக்குக் கிடைத்தாகவேணும்' என்று நெஞ்சில் பட்டால் பின்பு அது தன்னைப் பெறுகைக்காக ப்ரவர்த்திக்குமவன் ஒரு வரம்பிலே நில்லானய்த்து. 'இது கர்த்தவ்யம், இது அகர்த்தவ்யம், இது பக்ஷ்யம், இது அபக்ஷ்யம், இவன் அஸேவ்யன், இவன் ஸேவ்யன், இது வக்தவ்யம், இது அவக்தவ்யம் என்றிவ்வளவு ஆராய்ச்சி செய்யமாட்டாதே ஏதேனுமொரு வழியிலே நுழைந்து தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளுமிறே ஈடுபாட்டின் பணி.

'அபிநிவேசவசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:' என்றிறே ஆகமப்ராமாண்யத்திலே ஆளவந்தாரு மருளிச் செய்தது. 'ஆசை பெருக ஆராய்ச்சி குறுகும்' என்பர்களிறே.

[மஹதபிநிவேசநம் து கிமுத] அத்யல்பமான அபிநிவேசம் படுத்துகிற பாடு இதுவானல் அவ்வபிநிவேசம் அறவிஞ்சினல் விவேகம் குலைகிறபடி வாசாமகோசரமிறே. அபிநிவேசத்தின் அளவு ஏற ஏற [illegible]க க்ஷயத்தின் அளவும் ஏறுமிறே. இந்த ஸாமாந்ய ந்யாயத்தை ப்ரக்ருதத்தில் அதிதேசிக்கிருர் [illegible]தியாலே] தத்—மஹத்தான அபிநிவேசம் உண்டானல் விவேகம் நன்ருகக் குலையுமாகையாலே [illegible].

[illegible] [தவ மஹிம்நோ விஸத்ருசே ஜகதி] பிரானே! உன் பெருமைக்கும் நீ வந்து பிறந்த இவ்வுலகத் [illegible] என்ன சேர்த்தியுண்டு? 'அவஜாநந்தி மாம் மூடா:' என்று தானே முடிமேல் மோதிக்கொள்ளும் [illegible] கேட்டுக்கு எல்லை நிலமாயிறே இவ்விருள் தருமா ஞால மிருப்பது. 'விண்ணுளார் பெருமாற்

கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுள் என்னைப் பெற்றாலென் செய்யா?' என்று சிறந்த ஞானிகளும் நெஞ்சுளைந்து நடுங்கும்படியிறே இவ்வுலகத்தின் கொடுமை தானிருக்கும்படி. இப்படிப்பட்ட நிலவுலகிலே [அவததர்த்த] தேவரீர் அவதாரம் செய்தருளிற்று. இங்ஙனே பொருத்தமில்லா வுலகத்திலே திருவவதரிக்கைக்குக் காரண மின்னதென்னுமிடம் தோன்ற அருளிச் செய்கிறார். [பார்த்தாதிக மித்யாதி] அர்ஜுநன், அக்ரூரர், விதுரர், மாலாகாரர் முதலானோரைத் தம் சுற்றமாகத் திருவுள்ளம் பற்றி அவர்களோட்டை ஸம்ச்லேஷத்திலே யுள்ள எல்லை விஞ்சிய ஈடுபாடுதான் 'இவ்விருள் தருமா ஞாலத்திலே நாம் போய்ப் பிறக்கையாவதென்?' என்று ஆராய வொட்டாதே பிறந்துகொடு நிற்கக் காரணமாயிற்றென்றபடி. * மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷமாகிற ஸௌசீல்யம் அநுஸந்திக்கப் பட்டதாய்த்து. [அஹோ] இப்படியு மொரு ஸௌசீல்யம் உண்டாவதே! என்று ஆச்சர்யப் படுகிறார். இந்த ச்லோகம் ப்ருத்வீ வ்ருத்தம். .... .... ... .... (65)

**संश्लेषे भजतां त्वरापरवशः कालेन संशोध्य तानानीय स्वपदे स्वसङ्गमकृतं सोढुं विलम्बं बत ।**
**अक्षाम्यन् क्षमिणां वरो वरद सन्नत्रावतीर्णो भवेः किं नाम त्वमसंश्रितेषु वितरन् वेषं वृणीषे तु तान् ॥**

**ஸம்ச்லேஷே பஜதாம் த்வராபரவச: காலேந ஸம்சோத்ய தாந்**
**ஆநீய ஸ்வபதே ஸ்வஸங்கமக்ருதம் ஸோடும் விலம்பம் பத ।**
**அக்ஷாம்யந் க்ஷமிணாம் வரோ வரத ஸந்நத்ராவதீர்ணோ பவே:**
**கிம் நாம த்வமஸம்ச்ரிதேஷு விதரந் வேஷம் வ்ருணீஷே து தாந் ॥ 66 ॥**

| | |
|---|---|
| ஹே வரத! | ஓ பேருளாளனே! |
| க்ஷமிணாம் வர: த்வம் | பொறுமைசாலிகளுள் சிறந்த நீ |
| பஜதாம் | பக்தர்களுடைய |
| ஸம்ச்லேஷே | கலவியில் |
| த்வராபரவச: | மிகவும் த்வரிதனாய் [அத ஏவ] |
| தாந் | அந்த பக்தர்களை |
| காலேந | காலக்ரமமாக |
| ஸம்சோத்ய | சீர்திருத்தி |
| ஸ்வபதே ஆநீய | தனது நிலையிடமாகிய பரமபதத்திலே கொணர்ந்து சேர்த்துக் கொண்டு [அல்லது] உனதடி சேர்த்துக்கொண்டு |
| ஸ்வஸங்கம க்ருதம்விலம்பம் | அவர்களை உன்னோடே அணையச் செய்வதில் ஏற்படுகிற விலம்பத்தை |
| ஸோடும் | ஸஹிப்பதற்கு |
| அக்ஷாம்யந் | வல்லவனல்லவனாய் |
| அத்ர | இவ்விருள்தருமா ஞாலத்தில் |
| அவதீர்ண: பவே: | பிறந்தாயாகில் பிறந்திடுதிடாய்; [அதைப்பற்றி நான் ஒன்றும் கேட்கவரவில்லை] |
| கிம் து | பின்னையோ வென்றால் |
| அஸம்ச்ரிதேஷு | அநாச்ரிதர்களிடத்தில் |
| வேஷம் | உனது திவ்யவிக்ரஹத்தை |
| விதரந் | அநுபாவ்யமாகக் கொடாநின்றவனாய் |
| தாந் | அவர்களையும் |
| த்வம் வ்ருணீஷே | நீ திருவுள்ளம் பற்றுகிறாயே |
| [இதம்] கிம் நாம | இது என்கொல்? |

* * * கீழ் ச்லோகத்தில் சொன்ன ஸௌசீல்யம் அநாச்ரிதர் பக்கலிலும் வீறு பெற்று விளங்கு படியை அருளிச்செய்கிறாரிதில். எம்பெருமான் ஒரு சேதனனைத் தன் திருவடித் தாமரைகளிலே அத்தணிச் சேவகத்துக்கு ஆளாக்கிக் கொள்ளத் திருவுள்ளம் பற்றினால் அந்த பகவந்மநோரதம் அப்போதே சடக்கெனத் தலைக்கட்டுவ தொன்றல்ல; 'ஜன்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞான ஸமாதிபி: । நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே' என்னும், 'ஒன்றிநின்று நல்தவம் செய்து ஊழி யூழி தோறெலாம்' என்றும் சொல்லுகிறபடியே ஜந்மாந்தர ஸஹஸ்ரங்களிலே அருமையான பக்தி விளையப் பெற்றவனேயிறே நலமந்த மில்லதோர் நாட்டிலே போய்ப் புகப் பெறுவன். இதுதான் ஸ்வல்ப காலத்திலே ஸுலபமாகக் கடவதன்றிறே. இந்த க்ரமத்தாலே சேதநர்கள் பரமபதத்தேற வருமளவும் பார்த்திருக்கும்படியான விலம்ப ஸஹிஷ்ணுத்வம் எம்பெருமானுக் கில்லை யென்கிறது பூர்வார்த்தத்தாலே.

[காலேந ஸம்சோத்ய தாநித்யாதி] த்வீபாந்தரத்திலே பக்வமாவதொரு பலத்தை ஸ்வதேசத்திலே புஜிக்க விரும்புவா னொருவன் அதற்கு வேண்டிய ஸம்ஸ்காரங்கள் பலவற்றையும் அடைவே செய்து நெடுங் காலம் பரிச்ரமப்பட்டாலிறே அபீஷ்டம் ஸித்திப்பது. அத்தனை விளம்பத்தைப் பொறுக்கமாட்டானாகில் ஸ்வதேசத்தை விட்டொழிந்து அந்த பலமுள்ளவிடத்திலே செல்லவேணு மித்தனையிறே. அப்படியே 'ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்' என்று கொண்டு விரும்பப்படும் ஜ்ஞாநிசேதநர்களை யநுபவிக்க விரும்பு கின்ற பரவாஸுதேவன் அவர்களை ஸம்ஸ்கார க்ரமத்தினாலும், கால க்ரமத்தினாலும் வரப் பார்த்திருக்கும் விளம்பம் பொறாதவனாய் ஸ்வதேசத்தை விட்டகன்று அவர்கள் வாழுமிடமான இருள் தருமா ஞாலத்திலே தானே அடியிட்டு வந்தருளினான் அவர்களோட்டை ஸம்ச்லேஷத்தின் பெருவிருப்பத்தாலே. இப்படி ஆச்ரித ஜந ஸம்ச்லேஷத்திலே அபிநிவேசாதிசயத்தாலே ஓடிவந்து அவதரித்தாயாகில் இதுபற்றி உன்னை ஆக்ஷேபிப்பா ராருமில்லை. ஆசாபாசத்தாலே செய்தாயென்றிட்டு அது தன்னில் காமசாராநுஜ்ஞை பண்ணக்கடவோ மென்கிறார் [அத்ராவதீர்ணோ பவே: என்னு மளவாலே].

[கிம் நாமேத்யாதி] ஆச்ரிதஜந ஸம்ச்லேஷ சாபலத்தாலே நீ இங்கே வந்து பிறந்ததில் விப்ரதிபத் தியும் பண்ணுகின்றிலோம். வந்து அவதரித்தவிடத்திலே உகவாத கம்ஸ சிசுபாலாதிகளுக்கும் உன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை அநுபவயோக்யமாக்கித் தந்து அந்தப் படுபாவிகளையும் திருவடி சேர்த்துக் கொண்டா யென்பது யாதொன்றுண்டு ; இது என் கொல்! என்று இது தன்னிலே போர விப்ரதிபந்நரா யிரா நின்றோம் காணென்கிறார்.

[அஸம்ச்ரிதேஷு வேஷம் விதரந் தாந் வ்ருணீஷே—இதம் கிம் நாம?] 'வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும் மாறில்போர், செய்து நின்னசெற்ற தீயில்வெந்தவர்க்கும் வந்துனை, எய்தலாகுமென்பர்' [திருச் சந்த விருத்தம்] என்றருளிச் செய்தார் திருமழிசைப்பிரான். உன்னுடைய நிரங்குச ஸ்வாதந்த்ரியம் கரையழியப் பெருகப்புக்கால் 'உகந்தார், உகவாதார்' என்று வாசிவையாதே எல்லாரையும் ஒக்கத் திருவுள்ளம் பற்றுகிறபடி என்கொல்! என்று தலை சீய்க்கிறார்.

இதில் இரண்டாவது பாதத்தில் * ஆநீய ஸ்தபதே ஸ்வஸங்கமக்ருதம் * என்கிற பாடமே ப்ரஸித்தமாக வுள்ளது. * ஆநீய ஸ்வபதேந ஸங்கமயிதும் * என்பதே சுத்தமும் ப்ரசிநமுமான பாட மென்று கோயில் பத்தராவிஸ்வாமி அருளிச் செய்வராம். இந்த ச்லோகம் சார்த்தூல விக்ரீடித வ்ருத்தம்.

**वरद यदि न भुव्यवातरिष्यः श्रुतिविहितास्त्वदुपासनार्चनाद्याः ।**
**करणपथविदूरगे सति त्वयि अविषयतानिकृताः किलाभविष्यन् ॥ ६७ ॥**

**வரத யதி ந புவ்யவாதரிஷ்ய: ச்ருதிவிஹிதாஸ் த்வதுபாஸநார்ச்சநாத்யா: ।**
**கரணபதவிதூரகே ஸதி த்வயி அவிஷயதாநிக்ருதா: கிலாபவிஷ்யந் ॥ 67 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ! | ஓ வரதனே ! | ச்ருதிவிஹிதா: | வேதங்களில் விதிக்கப்பட்ட |
| புவி | இவ்வுலகில் | த்வதுபாஸந அர்ச்சநாத்யா: | உன்னையுபாஸித்தல் ஆராதித்தல் முதலிய க்ரியைகள் |
| நாவாதரிஷ்ய: யதி | நீ அவதரியாமல் போவாயாகில் | அவிஷயதா நிக்ருதா: | நிர்விஷயங்களா யொழிவதனால் திரஸ்க்ருதங்களாக |
| த்வயி | [பரவ்யூஹாந்தர்யாம்யாகார மாயிருக்கிற] நீ | அபவிஷ்யந் கில | ஆய்விடுமத்தனையிறே. |
| கரண பதவிதூரகே ஸதி | இந்த்ரியமார்க்கங்களுக்கு தூரஸ்த னாயிருக்குமளவில் | | |

* * * இங்ஙனே எம்பெருமான் அவதாரம் செய்தருளாவிடில் ச்ருதிஸ்ம்ருத்யாதி ஸகல சாஸ்த் ரங்களும் நிர்விஷயங்களா யொழியும் என்று சொல்லி அவதாரத்தின் ஆவச்யகதையை அருளிச்செய்கிறார்.

[ஹே வரத த்வம் புவி நாவாதரிஷ்யோ யதி] பேரருளாளனே! தேவரீர் இந்த பூமண்டலத்திலே ஸஜாதீயரூபேண திருவவதரியா தொழியில், அத ஏவ [த்வயி கரண பத விதூரகே ஸதி] ப்ரவ்யூ

ஹாந்தர்யாமி ரூபேண நின்று இந்த்ரிய மார்க்கத்துக்கு அணித்தாகாதே அவ்வருகு பட்டால், 'அப்பால் முதலாய் நின்ற அளப்பரியவாரமுது' என்கிறபடியே லீலாவிபூதிக்கு அப்பாற்பட்டிருக்கிற பரத்வமானது அண்டத்துக்குப் புறம்பே பெருகிக் கிடக்கிற ஆவரணஜலம் போலேயாய்; 'பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்' என்கிறபடியே கேட்டிருக்கு மித்தனை யல்லது சென்று காணவரிதாம்படியா யிருக்கிற வ்யூஹமானது பரத்வம் போலே அதி விப்ரக்ருஷ்ட மன்றிக்கே யிருந்தாலும் த்ருஷார்த்தனுக்கு துஷ்ப்ராபமான பாற்கடல் போலேயாய், கண்டு பற்றவேணுமென்று ஆசைப் பட்டவனுக்கு ஹ்ருதயத் திலே யிருக்கச் செய்தேயும் 'கட்கிலீ' என்கிறபடியே கண்ணுக்கு விஷயமன்றிக்கே அஷ்டாங்கயோக ரூப மஹாயத்நத்தாலே காணவேண்டும்படியான அந்தர்யாமித்வ மானது—த்ருஷார்த்தனுக்குக் கொட்டும் குந்தாலியும் கொண்டு கல்லின லல்லது குடிக்கக் கிடையாத பூகத ஜலம் போலேயாய்—இப்படி இவை யெல்லாம் காணவாசைப்பட்டவர்க்கு உறுப்பன்றிக்கே யொழிகையாலே 'மண்மீதுழல்வாய்' என்கிற படியெ பெருக்காறு பெருகினாற்போலே பூமியிலே அவதரித்து ஸஞ்சரித்தருளா தொழிந்தால் சாஸ்த்ரங்க ளில் 'நிதித்யாஸிதவ்ய:' என்றும், 'அர்ச்சயேத்' என்றும் 'ப்ரணமேத்' என்றும் 'ப்ரதக்ஷிணீகுர்யாத்' என்றும் விதிக்கப்பட்டுள்ள உபாஸநார்ச்சந ப்ரதக்ஷிண நமஸ்கார ப்ரப்ருதிகளான வழிபாடுகளுக்கு விஷய மன்றிக்கே யொழியுமிறே யென்றாராயிற்று இந்த ச்லோகம் புஷ்பிதாக்ரா வ்ருத்தம். ... (67)

**यदपराधसहस्रमजस्रजं त्वयि शरण्य हिरण्य उपावहत् ।**
**वरद तेन चिरं त्वमविक्रियः विकृतिमर्भकनिर्भजनादगाः ॥ ६८ ॥**

**யதபராதஸஹஸ்ரமஜஸ்ரஜம் த்வயி சரண்ய ஹிரண்ய உபாவஹத் ।**
**வரத தேந சிரம் த்வமவிக்ரிய: விக்ருதிமர்ப்பகநிர்ப்பஜநாதகா: ॥ 68 ॥**

| | | | |
|---|---|---|---|
| சரண்ய | ரக்ஷகனே | தேந | அந்த அபராதஸஹஸ்ரத்தால் |
| ஹே வரத | ஓ வரதனே ! | சிரம் | நெடுநாள் வரையில் |
| ஹிரண்ய: | ஹிரண்யகசிபுவானவன் | அவிக்ரிய: | விகாரமேயுண்டாகாதிருந்த |
| த்வயி | உன் விஷயத்தில் | த்வம் | நீ |
| அஜஸ்ரஜம் | ஸார்வகாலிகமான | அர்ப்பக நிர்ப்பஜநாத் | சிறு குழந்தையாகிய ப்ரஹ்லாத னுக்கு நேர்ந்த நலிவு காரணமாக |
| யத் | யாதொரு | | |
| அபராதஸஹஸ்ரம் | ஆயிரக்கணக்கான அபாரதத்தை | விக்ருதிம் | மனோவிகாரத்தை |
| உபாவஹத் | செய்தானோ | அகா: | அடைந்தாய். |

ஸங்கல்பமாத்ரத்தால் ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன் தன்னை யழியமாறி இதர ஸஜாதீயனாயவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநரூப அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் தொடக்கமான அவ்வோ பாகவத விஷயங் களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே என்னும் அர்த்தமேயாய்த்து இந்த ச்லோகத் திலே அருளிச் செய்யப்படுகிறது.

[ஹே சரண்ய! வரத! ஹிரண்ய: த்வயி அஜஸ்ரஜம் யதபராத ஸஹஸ்ரம் உபாவஹத், தேந (அபராத ஸஹஸ்ரேண) சிரம் அவிக்ரிய: ஸ்திதஸ்த்வம் அர்ப்பக நிர்ப்பஜநாத் விக்ருதி மகா:] எம்பெரு மான் தன்னளவிலே தீரக்கழிய அபராதப் படுமவர்களைப் பற்றி ஒன்றும் கணிசியான். ஸ்வாச்ரிதர் விஷயத் தில் ஸ்வல்பமபராதம் பண்ணுவானுண்டாகிலும் அவனை அப்போதே தலையறுத்துப் போடுவானென்றிறே இதிஹாஸ புராணாதிகளில் ப்ரஸித்தியிருப்பது. [த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம] சக்ரவர்த்தித் திருமகனார் எழுந்தருளி நிற்கச் செய்தே ராவணன் கோபுரசிகரத்தில் வந்து தோன்றின வாறே 'ராஜத்ரோஹியான பையல் திருமுன்பே நிற்கையாவதென்?' என்று மஹாராஜர் அவன்மேலே எழப் பாய்ந்து வென்று வந்தபோது இங்ஙனே அருளிச் செய்கிறார்.—நீர் மஹாராஜரான தரம் குலைய அவன் ஒரு வார்த்தை சொல்லுமாகில் நீர் தேடிப்போகிற சரக்குத்தான் நமக்கு என் செய்ய? என்னுமிறே

**இங்ஙனேயிறே** ஆச்ரித விஷயத்திலே எம்பெருமான் பக்ஷபதித்திருப்பது; 'ப்ராணேப்யோபி கரீயாம்ஸ:' **என்னும்**படியான அந்த பாகவதர்களுக்கு ஒரு தீங்கு நேர்ந்தால், தனக்குத் தீங்கு நேரும்போது பிறக்கும் **சீற்றம்** குளப்படி யென்னலாம் படியிறே **சீற்றம்** பெருகிச் செல்கிறபடி. ஸமுத்ரராஜனை சரணம் புகச் செய்தேயும் அவன் முகம் காட்டிற்றிலனாக, 'கோபமாஹாரயத் தீவ்ரம்' என்னும்படி சீற்றத்தை வர வழைத்துக் கொண்டார் பெருமாள். பின்பு ராவணனாலே திருவடி நோவுபட்டவாறே 'கோபஸ்ய வசமேயிவாந்' என்னும்படி கோபமிட்டவழக்கானார். இங்ஙனேயிறே பாகவத விஷயத்திலே எம்பெருமா னுக்குள்ள பரிவின் மிகுதியிருப்பது.

ஹிரண்யகசிபுவானவன் எம்பெருமான் திறத்திலே நேர்கொடு நேரே அபசாரப்பட்டுத் திரிந்த நாள்கள் எண்ணிறந்தவையுண்டு. அந்நாள்களிலே எம்பெருமானுடைய திருவுள்ளம் அவ்வளக்களவிலே சிறிதும் விகரிக்கவில்லை. * பள்ளியிலோதிவந்த தன் சிறுவன் வாயிலோராயிர நாமம், ஒள்ளியவாகிப் போத ஆங்கதனுக்கு ஒன்றுமோர் பொறுப்பிலனாகிப் பிள்ளையைச் சீறி வெகுண்டு நலிந்தானென்றறிந்த வாறே 'நம்மளவிலே எத்தனை தீம்பனாயிருந்தாலும் பொறுத்திருப்புதோம்; நம்முடையனான சிறுக்கனை நலிந்தானென்னா இனிப் பொறுத்திருக்கவோ?' என்று ஆறியிருக்கமாட்டாதே அப்போதே வந்து தோன் றிப் புடைத்தானாயிற்று.

'வரத்தால் வலிநினைந்து மாதவ நின்பாதம் சிரத்தால் வணங்கானாமென்றே? உரத்தினால் ஈரரி யாய் நேர்வலியோனாய விரணியனை ஓரரியாய் நீ யிடந்ததூன்.' (முதல் திருவந்தாதி—90) என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தை இந்த ச்லோகத்தோட இணைத்து நிர்வஹித்துக் கொள்க. (அப்பாசுரத்தின் திவ்யார்த்ததீபிகை காண்க) இந்த ச்லோகம் த்ருத விலம்பித வ்ருத்தம். .... .. (68)

**त्वामामनन्ति कवयः करुणामृताब्धे ज्ञानक्रियाभजनलभ्यमलभ्यमन्यैः ।**
**एतेषु केन वरदोत्तरकोसलस्थाः पूर्वं सदूर्वमभजन्त हि जन्तवस्त्वाम् ॥ ६९ ॥**

**த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்தே! ஜ்ஞாநக்ரியாபஜநலப்யமலப்யமந்யை: !**
**ஏதேஷு கேந வரதோத்தரகோஸலஸ்தா: பூர்வம் ஸதூர்வமபஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம் ॥ 69 ॥**

| | |
|---|---|
| கருணாம்ருதாப்தே | அருளாகிற அம்ருதத்திற்குக் கடல் போன்ற |
| ஹே வரத | ஓ வரதனே ! |
| கவய: | [பராசரபாராசர்யாதி] கவிகள் |
| த்வாம் | உன்னை |
| ஜ்ஞாநக்ரியா பஜநலப்யம் | ஞானயோக கர்மயோக பக்தி யோகங்களால் ப்ராப்யனாகவும் |
| அந்யை: | உபாயாந்தரங்களினாலே |
| அலப்யம் | அப்ராப்யனாகவும் |
| ஆமநந்தி | ஓதிவைத்திருக்கிறார்கள் ; |
| பூர்வம் | முன்பு [ஸ்ரீராமாவதாரத்தில்] |
| உத்தரகோஸலஸ்தா: ஜந்தவ: | உத்தரகோஸலத்திலுள்ள ஜந்துக்கள் |
| ஸதூர்வம் | த்ருணமுட்பட |
| த்வாம் அபஜந்த ஹி | உன்னை அடைந்தனவன்றோ ? [அப்படி அடைந்ததானது] |
| ஏதேஷு | கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞான பக்தி யோகங்களுள் |
| கேந | எந்த உபாயம் கொண்டு? |

யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத் விசேஷங்கள் சாஸ்த்ரவிஹிதமும் சேதன விதிதமுமன்றி யிருக்கத் தானே கல்பித்தும் கல்பிதமான அவை தன்னை ஒன்றை அனேகமாக்கி யும் நடத்திக் கொண்டு போருமவனான ஈச்வரனுடைய ஸஹஜகாருண்ய விபவம் ஸ்ரீராமாவதாரத்திலே நன்கு விளங்கின படியை இந்த ச்லோகத்திலே அநுஸந்தித் தருளுகிறார்.

[கருணாம்ருதாப்தே] கருணையாகிற அம்ருதத்திற்குக் கடல் போன்றவனே ! தேவபிரானுகிறுன் திருவருளுக்குப் பிறந்தகம் என்னுமிடம் 'பேரருளாளன்' என்னும் திருநாமத்தாலேயே விளங்குமிறே. [கவய:] அப்ரத்யக்ஷதத்வார்த்தஸாக்ஷாத்காரக்ஷமர்களான பராசரபாராசர்யாதிகளென்கை. 'கவி: க்ராந்த தர்சீ' என்னக்கடவதிறே. [த்வாம் ஜ்ஞானக்ரியாபஜநலப்யம் அந்யைரலப்யம் ச ஆமநந்தி] ஜ்ஞாநயோக,

கர்மயோக, பக்தியோகங்களாலே உன்னை ப்ராபிக்கலாமத்தனை போக்கி வேறென்றாலும் ப்ராபிக்கலாகா தென்கிறார்கள். [யே உத்தரகோஸலஸ்த்தா: ஜந்தவ: பூர்வம் த்வாம் ஸதூர்வமபஜந்த, தே ஏதேஷு கேந?] * முனிவன் வேண்டத் திறல் விளங்கு மிலக்குமனைப் பிரிந்ததனால் தரிக்கமாட்டாதே போர க்லேசித்த பெருமாள் ராஜ்யத்தை விட்டெழுந்தருளத் தொடங்கியபோது அயோத்யா நகரத்துயிர்களெல் லாம் பெருமாளைச் சரணமடைந்து தேவரீர் எங்குச் சென்றாலும் அடியோங்களையும் கூடவே அழைத்துக் கொண்டெழுந்தருளவேணுமென்று ப்ரார்த்திக்க, பெருமாள் அவர்களுடைய பக்திப்ரகர்ஷத்தைக் கண்டு 'ததாஸ்து' என்றருளிச் செய்து அனைவரையும் தன்னைப் பின் தொடர்ந்து வருமாறு பணித்தருளி ப்ரயா ணப்பட்டார். அப்பொழுது அந்நகரத்திலிருந்த மநுஷ்யர்கள் மாத்திரமேயல்லாமல் பசுபக்ஷ்யாதி ஸமஸ்த வஸ்துஜாதமும் அகமகிழ்ந்து பெருமாளைப் பின் சென்றன. இப்படி பலரும் புடைசூழப் பெருமாள் ஸரயூ நதியிலிறங்கித் தன்னடிச்சோதிக் கெழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றி ஸரயுவில் மூழ்கி உடம்பைத் துறந்த எல்லாவுயிர்கட்கும் ப்ரஹ்மலோகத்துக்கு மேற்பட்டதாய் பரமபதம்போலவே அபுநராவ்ருத்தியாகிற சிறப்புள்ளதான ஸாந்தாநிகமென்னும் லோகத்தை அளித்தரு ளினார் என்கிற இதிஹாஸம் ப்ரஸித்தம். 'ஸதூர்வம்' என்றது த்ருணாதிகளுமுட்பட வென்றபடி. [ஏதேஷு கேந] கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞான பக்திகளில் எந்த வுபாயத்தை யனுஷ்டித்து அவை வீடு பெற்றன பிரானேயென்று மடிபிடிக்கிறார். கேவலம் உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையே பற்றாசாக உய்வித்தாயத் தனையிறே. இது தோன்றவாய்த்து 'கருணாம்ருதாப்தே' என்று ஸம்போதித்தது. இப்படிப்பட்ட க்ருபை * மஹாதகவர்ஜமோ? என்கை இங்கு உள்ளுறை. இந்த ச்லோகம் வஸந்ததிலக வ்ருத்தம். ... (69)

**भजत्सु वात्सल्यवशात् समुत्सुकः प्रकाममत्रावतरेर्वरप्रद ।**
**भवेश्च तेषां सुलभोऽथ किंन्विदं यदङ्ग दाम्ना नियतः पुराऽरुदः ॥ ७० ॥**

**பஜத்ஸு வாத்ஸல்யவசாத் ஸமுத்ஸுக: ப்ரகாமமத்ராவதரேர் வரப்ரத ।**
**பவேச்ச தேஷாம் ஸுலபோ த கிந்ந்விதம் யதங்க தாம்நா நியத: புராருத: ॥ 70 ॥**

| | | | |
|---|---|---|---|
| அங்க வரப்ரத | வாராய் வரதனே ! | ஸுலபப்பச்ச | ஸுலபனையும் |
| த்வம் | நீ | பவே: | ஆகுகிடாய்; |
| பஜத்ஸு | பக்தர்கள் பக்கலில் | புரா | பண்டு [க்ருஷ்ணாவதாரத்தில்] |
| வாத்ஸல்யவசாத் | ப்ரீதி விசேஷத்தாலே | தாம்நா | தாம்பினால் |
| ஸமுத்ஸுக: | மிக்க விருப்பமுடையவனாய் | நியத: | கட்டுண்டவனாய் |
| அத்ர | இவ்விபூதியில் | அருத: இதி யத் | அழுதாய் என்பது யாதொன் றுண்டோ |
| ப்ரகாமம் அவதரே: | வேண்டியபடி அவதரித்துக்கொள்; | | |
| அத | அதற்குமேல் | | |
| தேஷாம் | அந்த அன்பர்களுக்கு | இதம் கிம் நு | இது என்கொல் ? |

* * * ஸம்ப்ரதிபந்தமான க்ருஷ்ணாவதார ஸௌலப்யத்தை அநுஸந்திக்கிறார். 'ஸம்ச்லேஷே பஜதாம்' என்னும் ச்லோகத்தில் பாதத்ரயத்தால் அருளிச்செய்த அர்த்தத்தை இதில் பூர்வார்த்தத்தாலே ஸங்க்ரஹித்தாராய்த்து. [அங்க! வரப்ரத!] 'அங்க' என்றது—ஹே! என்றபடி; ஸம்போதநார்த்தகம வ்யயம். [வாத்ஸல்யவசாத் பஜத்ஸு ஸமுத்ஸுகஸ்ஸந்] தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பிதாவி னுடைய ஹ்ருதயம் அவகாஹித்துத் துடிக்குமாபோலே, நித்யமுக்தரோடே கூடியிருந்து பரிபூர்ணாநுபவம் அவிச்சிந்நமாய்ச் செல்லாநிற்கச் செய்தேயும் அது உண்டதுருக் காட்டாதே ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய் இவர்களைப் பிரிந்து ஆற்றமாட்டாதே இவர்களோடே கலந்து பரிமாறுகைக்காக இவ்விபூதியில் வந்து பிறந்தாயாகில் வேண்டியமட்டும் பிறந்து போருகிடாய். அந்த ஸம்ஸாரிகள் பக்க லிலே உன் ஸௌலப்யத்தை விநியோகித்தாயாகில் அதுவும் வேண்டிய மட்டும் விநியோகித்துப் போரு கிடாய். இவற்றில் அடியேனுக்கு அல்பமும் விப்ரதிபத்தியில்லை. கவ்யஸ்தேய நிமித்தமாகத் தாம்பால் ஆப்புண்டு அழுதா யென்று யாதொரு வ்ருத்தாந்தமுண்டு; இது இப்படி இருக்கும்படியென்? என்று

இதிலே போர விசிகித்ஸிதனுயிரா நின்றேனென்கிருர். மநுஷ்யத்வைகாந்தமான அஜ்ஞான அசக்திகளைத் தான் ஏறிட்டுக் கொண்டாயே, பின்னை அமுது தீரவும் வேணுமோ? இது என்ன ஸௌலப்ய பரம காஷ்டை! என்று உள்குழைந்து உருகுகின்றமை பேச்சிலே தோன்றும்.

இந்த ச்லோகம் 'வம்சஸ்த வ்ருத்தம்'. .... ... ... (70)

**नरसिंहतनुरगौणी समसमयसमुद्भवश्च भक्तगिरः।**
**स्तम्भे च संभवस्ते पिशुनयति परेशतां वरद! ॥ ७१ ॥**

**நரஸிம்ஹதநுரகௌணீ ஸமஸமயஸமுத்பவச்ச பக்தகிர:।**
**ஸ்தம்பே ச ஸம்பவஸ் தே பிசுநயதி பரேசதாம் வரத ॥ 71 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | ஓ வரதனே! | ஸ்தம்பே ஸம்பவ: ச | [அதுதன்னிலும்] தூணில் வந்து தோன்றியதும் |
| அகௌணீ | அப்ராக்ருதமான | தே | உன்னுடைய |
| நரஸிம்ஹதநு: | நரஸிம்ஹதிருக்கோலமும் | பரேசதாம் | பரமேச்வரத்வத்தை |
| பக்தகிர: ஸமஸமயஸமுத்பவச்ச | பக்தனுகிய ப்ரஹ்லாதனுடைய [எங்குமுளன் என்ற] வாய்ச் சொல்லில் வந்து தோன்றியதும் | பிசுநயதி | தெரிவிக்கிறது. |

* * * 'ந்ருஸிம்ஹராமக்ருஷ்ணேஷு ஷாட்குண்யம் பரிபூரிதம்' என்று அவதாரத்ரயத்திலே ஷாட்குண்ய பரிபூர்ததி சொல்லப்பட்டிருக்கிறபடியே—ஸர்வாவதாரங்களிலும் வைத்துக்கொண்டு ப்ரக்ருஷ்டதமமான அந்த அவதாரத்ரயத்திலே வாத்ஸல்யக்ருபா ஸௌலப்யாதிசயத்தை * யதபராத ஸஹஸ்ரமித்யாதி ச்லோகத்ரயத்தாலே அடைவே அருளிச்செய்து, ஸிம்ஹாவலோகனந்யாயத்தாலே மீண்டும் நரஸிம்ஹாவதாரத்திலே அபிநிவேசித்துச் செல்லுகிருர். ஸ்ரீஹஸ்திகிரியின் அடியிலே கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீ ந்ருஸிம்ஹனை மங்களாசாஸநம் செய்தருளின ச்லோகம் இது என்பாருமுளர்.

[ஹே வரத! தே அகௌணீ நரஸிம்ஹதநுச்ச, பக்தகிர: ஸமஸமய ஸமுத்பவச்ச, ஸ்தம்பே ஸம்பவச்ச பரேசதாம் பிசுநயதி] அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநசாலியான நரஸிம்ஹ வேஷத்தைப் பரிக்ரஹித்தும், 'எங்கு முளன் கண்ணன்' என்று சிறுக்கன் சொன்ன க்ஷணத்தில் தானே வந்து தோன்றியதும், அந்தத் தோற்றந்தான் ஸம்பாவித ஸ்தலத்தில் நின்றுமாகாமே தூணிலிருந்து ஆனதும் ஆக இதெல்லாம் உன்னுடைய பரமேசித்ருத்வத்தை நன்கு விளக்குகின்றன வென்கிருர்.

அகௌணீ' என்றது அப்ராக்ருதையென்றபடி. ஸத்வ ரஜஸ் தமோமயமாயிறே ப்ரக்ருதி தானிருப்பது. 'ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:' என்கையாலே சுத்த ஸத்வமயமாயிறே ந்ருஸிம்ஹமூர்த்தியிருப்பது. தனியே மாநுஷ மூர்த்தியாகப் பிறக்கலாம், ஸிம்ஹமூர்த்தியா யிருக்கலாம்; இங்ஙனே நரங்கலந்த சிங்கமாய்ப் பிறந்தது பரமேசித்ருத்வ ப்ரயுக்தமிறே. இப்படி ஸங்கீர்ணமூர்த்தியாகப் பிறவாதொழியில் ஹிரண்யவதம் அமையாதிறே. அவன் பெற்ற வரங்களைப் பழுதாக்காதபடியிறே எம்பெருமான் வ்யாபரிப்பது.

[பக்தகிரஸ் ஸமஸமய ஸமுத்பவச்ச] 'எங்குமுளன்' என்று ப்ரஹ்லாதன் சொல்லி வாய்மூடுவதற்கு முன்னமேயிறே வந்து தோன்றிற்று.

[தே பரேசதாம் பிசுநயதி] இவை யெல்லாம் உன்னுடைய பரமேசித்ருத்வத்தைக் கோட்சொல்லித் தாராநின்றன வென்கிருர். பரமபுருஷனன்றிக்கே ஸாமாந்யபுருஷனுகில் இத்தனை சக்தி விசேஷம் கூடாதிறே யென்று கருத்து.

ஆக, கீழ் ச்லோகத்திலே ஸௌலப்யத்தை யநுஸந்தித்தாராய் இந்த ச்லோகத்திலே பரத்வத்தை யநுஸந்தித்தாராய்ச் செல்லுகிறது. பரத்வே ஸதி ஸௌலப்யமிறே அபிநந்தநீயமாகத் தக்கது. கேவல ஸௌலப்யமும் கேவல பரத்வமும் அப்ரயோஜகமிறே. இனி இந்த ச்லோகத்தை இங்ஙனே பரத்வமா

தக் கொள்ளாதே கீழ்ச்லோகங்களுக்குச் சேர ஸௌலப்யபரமாகவே நிர்வஹித்துப் போருவாருமுளர். அதுதானெங்ஙனேயென்னில், [பரேசதாம்] பர: ஈச: யஸ்ய ஸ:, பரேச:, பரதந்த்ர: என்றபடி. பரேசதாம் என்றது பாரதந்திரியத்தை யென்றதாய்த்து. தேவாதி சதுர்விதஜாதியிலுள்ளவற்றில் ஒன்றின் கையிலும் படக்கடவனல்லனாகவும், பகலிரவுகளுள் ஒரு காலத்திலும் படக்கடவனல்லனாகவும், அஸ்த்ரசஸ்த்ரங்களி லொன்றாலும் படக்கடவ னல்லனாகவும் இப்படியெல்லாம் ப்ரஹ்மருத்ராதிகள் கொடுத்த வரத்துக்கு விரோதம் வாராதபடியாகவும், ப்ரஹ்லாதனுடைய வார்த்தைக்கு உடன்பட்டபடியாகவும் நரஸிம்ஹாபதா நத்திலே காண்கையாலே தேவபாரதந்த்ரியமும் ஆச்ரிதபாரதந்த்ரியமும் தோன்றக்கடவதிறே. ஸ்வதந் த்ரனாகில் அவர்கள் கொடுத்த வரத்தைப் பாழ்படுத்தியே யதேச்சமாக வந்து பிறந்து வதைக்கலாமிறே. நரஸிம்ஹமாய்ப் பிறக்கவும் அந்திப்போதிலே தோன்றவும் திருவுகிர்களாலே கீளவும் மடியிலே வைத்து முடிக்கவும் வேண்டாவே. ப்ரஹ்லாதனுடைய ப்ரதிஜ்ஞா ஸமகாலத்திலே வந்துதோன்றவும் வேண்டாவே.

தேவர்கள் கொடுத்த வரத்தைப் பழுதாக்கவொண்ணாமையாகிற தேவபாரதந்த்ரியமும் ப்ரஹ்லா தனை விததப்ரதிஜ்ஞனையுடையனாக்கவொண்ணாமையாகிற ஆச்ரிதபாரதந்த்ரியமும் உள்ளமையாலிறே இப்படியெல்லாம் செய்யவேண்டிற்று. ஆகையாலே 'பரேசதாம்' என்றதற்குப் பாரதந்த்ரியமென்று பொருள் பணித்தது பொருந்தத் தட்டில்லை. .... .... .... .... (71)

**तापत्रयीमयदवानलदह्यमानं मुह्यन्तमन्तमवयन्तमनन्त नैव ।**
**स्थातुं प्रयातुमुपयातुमनीशमीश हस्तीश दृष्ट्यमृतवृष्टिभिराभजेथाः ॥ ७२ ॥**

**தாபத்ரயீமயதவாநலதஹ்யமாநம் முஹ்யந்தமந்தமவயந்தமநந்த நைவ ।**
**ஸ்தாதும் ப்ரயாதுமுபயாதுமநீசமீச ஹஸ்தீச த்ருஷ்ட்யம்ருதவ்ருஷ்டிபிராபஜேதா: ॥ 72 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஈச | ஸர்வஸ்வாமியாய் | நைவ அவயந்தம் | அறியாதவனையும் |
| அநந்த | அபரிச்சிந்நரூபனாய் | ஸ்தாதும் ப்ரயாதும் உபயாதும் அநீசம் [மாம்] | கை யொழிந்து நிற்பதற்கும் ஒன்றைச் செய்யப் போவதற்கும் உன்னைக் கிட்டுகைக்கும் அசக்தனா வடியேனை |
| ஹஸ்தீச | ஹஸ்திகிரிநாதனான வரதனே | | |
| தாபத்ரயீமய தவாநலதஹ்யமாநம் | தாபத்ரயமான காட்டுத்தீயால் தபிக்கப் பெற்றிருக்கிறவனாய் [அத ஏவ] | த்ருஷ்டி அம்ருத வ்ருஷ்டிபி: | கடாக்ஷாம்ருத வர்ஷங்களால் |
| முஹ்யந்தம் | மயக்கமுடையவனையும் | | |
| அந்தம் | [இந்த ஆர்த்தியின்] எல்லையை | ஆபஜேதா: | புடைசூழக் கடவாய். |

* * * ஸமஸ்தகல்யாணகுண விசிஷ்டனாய் ஆச்ரயண ஸௌகர்யாவஹ திவ்யவிக்ரஹ விசிஷ்டனாய் பத்நீபரிஜநாதிவிசிஷ்டனாய் ஸாதுபரித்ராணார்த்தமாக கேவலம் க்ருபாமாத்ரத்தாலே வந்து திருவவதரித் தருளுமவனான பேரருளாளனை விஸ்தரேண அநுபவித்துப் பேசின இவ்வளவால் த்வயத்தில் 'ஸ்ரீமந் நாராயண சரணௌ' என்னுமளவும் விவரித்தாராய் இனி 'சரணம் ப்ரபத்யே' என்னுமிடத்தை விவரிக்கப் புகுகிறாராய் பேரருளாளன் திருவடிகளிலே ப்ரபத்திபண்ண விழுந்தவர் தம்முடைய தோஷபூயஸ்த்வத்தை ஆவிஷ்கரித்தருளுகிறார் மேல் எட்டு ச்லோகங்களாலே. ஸ்வதோஷபூயஸ்த்வாநுஸந்தாந மென்கிற இது தன்னைச் சிலர் ப்ரபத்திக்கு பூர்வாங்கமாகவும் சிலர் உத்தராங்கமாகவும் சிலர் உபயாங்கமாகவும் செய்து போரக் காணாநின்றோம். ஆளவந்தாரும் எம்பெருமானாரும் ப்ரபத்திக்கு உத்தரத்திலே விசேஷித்து ஸ்வதோஷ பூயஸ்த்வாநு ஸந்தாநம் பண்ணினார்கள். ஆழ்வான் இங்கு ப்ரபத்திக்குப் பூர்வத்திலே ஸ்வதோஷபூய ஸ்த்வாநுஸந்தாநம் பண்ணுகிறார். ஆழ்வார்கள் ப்ரபத்திக்குப் பூர்வத்திலும் உத்தரத்திலும் பண்ணிப் போருவர்கள்.

[தாபத்ரயீமயதவாநலதஹ்யமாநம்] தாபத்ரயமாவது, ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதை விகம் எனப்பட்ட மூன்று தாபங்கள். ஆதிவ்யாதிகள் ஆத்யாத்மிகதாபமாம். 'பசுபக்ஷிமநுஷ்யாத்யை: பிசாசோரகராக்ஷஸை: । ஸரீஸ்ருபாத்யைச்ச ந்ருணாம் ஜாயதே சாதிபௌதிக: ॥' என்னப்பட்டது ஆதி பௌதிகம். 'சீதவாதோஷ்ண வர்ஷாம்புவைத்யுதாதி ஸமுத்பவ: । தாபோ த்விஜவரச்ரேஷ்டை: கத்யதே

சாதிதைவிக॰ ॥' என்னப்பட்டது ஆதிதைவிகம். ஆக இந்த தாபத்ரயத்திலே அகப்பட்டவன் தப்பிப் பிழைப்பது அரிதாயிருக்கையாலே இது தன்னை தாவாக்னியாகச் சொல்லக்கடவதாயிருக்கும். காட்டுத் தீயிலே அகப்பட்டவனுக்கும் தப்பிப் பிழைக்கை அரிதிறே. இப்படிப்பட்ட தாபத்ரயாத்மக தாவாக்னி யாலே தபிக்கப்படா நின்றேனடியேனென்கிறார்.

[அத ஏவ முஹ்யந்தம்] வஹ்நிதக்தனுக்கு மோஹப்ராப்தி அவர்ஜநீயமிறே. தாபத்ரயத்திலே தகர்ப்புண்ட அடியேனுக்கு அறிவு குடி போய்த்து என்கிறார்.

[அந்தம் நைவாவயந்தம்] இப்படி எத்தனைகாலம் அறிவழிந்துபடக்கடவேனோ அறிகிலேன்பிரானே யென்கிறார். தேசத॰ காலதோ வஸ்துதச்ச அபரிச்சிந்நனான வுன்னை ஒருபடி பரிச்சேதித்தறியிலுமாம். இந்த மோஹாவதியைப் பரிச்சேதித்தறியவல்லேனல்லே னென்கிறார்.

நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதல் முதலான ப்ரவ்ருத்தி ஸாமாந்யத்திற்கும் நீயே கடவனாகை யாலே ஸ்வாதந்த்ரியேண நான் ஒன்றுக்கும் கடவனன்றிக்கே யிரா நின்றே னென்கிறார்.

[ஸ்தாதுமநீசம்] கருமயோகம் முதலிய உபாயங்களை அநுஷ்டிக்கை தவிர்ந்து வெறுமனே கிடக்க மாட்டிற்றிலேன். ஏனெனில், 'ச்ருதிஸ்ஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே। ஆஜ்ஞாச் சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ॰ ॥' என்ற உன் திருமுகப் பாசுரத்தைப் பார்த்தவாறே சாஸ்த்ரவிஹிதங்களானவற்றை எங்ஙனே விட்டொழிவதென்று தளும்பாநின்றேன். [ப்ரயாதுமநீசம்] அவைதான் ஸ்வரூபவிருத்தங்களாகையாலும்; துக்க பஹுளமாகையாலும், பலவாகையாலும், ஸாபாய மாகையாலும், ஸ்வத॰ பலஸாதநங்களல்லாமையாலும், ஸாபேக்ஷங்களாகையாலும், விளம்பித பலங்க ளாகையாலும் அவற்றை யநுஷ்டிக்கப் போகமாட்டுகிறிலேன். [உபயாதுமநீசம்] உன்னைக் கிட்டவும் மாட்டுகிறிலேன். ப்ரபத்திபண்ணவும் மாட்டிற்றிலேனென்கை. ஏனென்னில், ஸ்வரூபாநுருபமாய் ஸுகரமாய் ஸுகரூபமாய் நிரபாயமாய் ஸ்வதஸ்ஸாதனமாய் நிரபேக்ஷமாய் அவிலம்பிதபலமாய் அயத்ந ஸாத்யமாய் ஸித்தமாய் ஏகமான வுபாயத்தை சோகநிராகரணார்த்தமாகச் சொன்னாலும் பூர்வாங்கமாக தர்மத்யாகத்தைப் பண்ணியே ப்ரபத்தியை அநுஷ்டிக்க வேண்டுகையாலும், மஹாவிச்வாஸமில்லாமை யாலும் ஆத்யந்திகமான ஆர்த்தி இல்லாமையாலும் ப்ரபத்தி பண்ணத் திகைத்து நிற்கவேண்டிற்றுமிறே. அன்றிக்கே, ஸ்வீகாரமும் ஸ்வாதந்த்ரிய கர்பமாகையாலே "உபயாதுமநீசம்' என்கிறாரென்னவுமாம். 'என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே' என்று இத்தலையில் நினைவுக்கும் அடி அவனாகையாலே 'பறவையேறு பரம் புருடா! நீ யென்னைக் கைக்கொண்டபின்' என்னும்படியான அவனுடைய ஸ்வீகாரமே யொழிய தன் நினைவாலே பெறவிருக்கையானது 'உன் மனத்தாலென் நினைந் திருந்தாய்' என்கிற வதிகாரத்திற்குக் கொத்தையிறே. * நெடுநாள் அந்யபரையாய்ப்போந்த பார்யை லஜ்ஜா பயங்களின்றிக்கே பர்த்ருஸகாசத்தில் நின்று என்னை அங்கீகரிக்க வேணுமென்று அபேக்ஷிக்கு மாபோலே யிருப்பதொன்றாகையாலே 'உபயாதுமநீசம்' என்கிறார். இப்படிப்பட்ட வடியேனை கடாக்ஷா ம்ருதவர்ஷதாரைகளாலே குளிரச் செய்யவேணும். 'தக்தம்' என்று பூதகாலமாகச் சொல்லாதே 'தஹ்ய மாநம்' என்று வர்த்தமாநமாகச் சொல்லுகையாலே த்ருஷ்ட்யம்ருதவ்ருஷ்டிஸேகம் பலவத்தாக ப்ரஸக் தியுண்டென்று காட்டினபடி. 'தாமரைக் கண்களால் நோக்காய்' என்றும் 'அங்கணிரண்டுங் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல், எங்கள்மேல் சாபமிழிந்து' என்றும், 'த்வதீக்ஷண ஸுதாஸிந்துவீசி விக்ஷேபசீகரை॰। காருண்யமாருதா நீதைச் சீதலைரபிஷிஞ்சமாம் ॥' என்றும் அருளிச்செய்து வைத்தார்க ளிறே. 'கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித்கதாசன' என்ற திருமுகப் பாசுரத்திலே 'கஞ்சித்' என்றதற்கு அடியேனை விஷயமாக்கவேணும்; 'கதாசந' என்றதற்கு அத்ய வர்த்தமாநகாலத்தை விஷயமாக்கவேணுமென்கிறார்.

[ஆபஜேதா॰] என்றது அடியேனைச் சூழ்ந்துகொள் என்றபடி. என்னைச் சுற்றி த்ருஷ்ட்யம்ருத வ்ருஷ்டி பெய்ய வேணுமென்கை.

இந்த ச்லோகம் முதல் 'போகா இமே' என்னும் ச்லோகமளவாக வுள்ள தசகம் வஸந்ததிலக வ்ருத்தம். ... .... ... .... ... .... (72)

नानाविधासु विदिशासु दिशासु चाहो वन्ध्यैर्मनोरथशतैर्युगपद्विकृष्टः।
त्वत्पादयोरनुदितस्पृह एष सोऽहं न स्वरित हरितनिरितनाथ! निशामयामि ॥ ७२ ॥

**நாநாவிருத்தவிதிசாஸு திசாஸு சாஹோ வந்த்யைர் மநோரதசதைர் யுகபத் விக்ருஷ்ட:।
த்வத்பாதயோரநுதிதஸ்ப்ருஹ ஏஷ ஸோஹம் ந ஸ்வஸ்தி ஹஸ்திகிரிநாத நிசாமயாமி ॥ 73 ॥**

| | |
|---|---|
| ஹஸ்திகிரிநாத | பேரருளாளனே ! |
| வந்த்யை: | [ஊமைகண்ட கனுப்போலே] பழுதாயொழிகின்ற |
| மநோரதசதை: | பல மனோரதங்களால் |
| நாநாவிருத்த விதிசாஸு | விருத்தங்களான பலபல குறுக்கு வழிகளிலும் |
| திசாஸு ச | நல்வழிகளிலும் |
| யுகபத் | ஒரே காலத்தில் |
| விக்ருஷ்ட: | இழுக்கப்பட்டவனாய் |
| த்வத்பாதயோ: | உன் திருவடிகளில் |
| அநுதித ஸ்ப்ருஹ: | அன்பு உதிக்கப்பெறாதவனாயிருக்கிற |
| ஏஷ ஸோஹம் | அடியேன் |
| ஸ்வஸ்தி | நன்மையை |
| ந நிசாமயாமி | நோக்குகின்றிலேன். |

* * * பேரருளாளனுடைய த்ருஷ்ட்யம்ருதவ்ருஷ்டியைப் பெற்றாலல்லது மற்றொருபடியாலும் தமக்கு நன்மையுண்டாக மாட்டாமையை அருளிச்செய்கிறார். [நாநாவிருத்த விதிசாஸு] பலவகைப்பட்ட தப்பு வழிகளிலும், [திசாஸு ச] நல்ல வழிகளிலும். தப்பு வழிகளாவன—நரகப்ராபகங்களான துச்சரிதங்கள். 'திசாஸு' என்னப்பட்ட திக்குக்களாவன—ஐஹிகாமுஷ்மிகபோக ஸாதனங்களான வழிகள், இவற்றிலே, [வந்த்யை: மநோரதசதை: யுகபத் விக்ருஷ்ட:] நரகஸாதநங்களான துரிதங்களிலும் ஸ்வர்க்காதி ஸாதனங்களான ஸுக்ருதங்களிலும் நிஷ்ப்ரயோஜனங்களான பல பல மனோரதங்கள் விளைவதுண்டிறே, * வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார் வனமுலைப்பயனே பேணவேணுமென்றும், * புலம்படிந்துண்ணும் போகமே பெருக்க வேணுமென்றும், * ஓடியு முழன்றுமுயிர்களே கொல்லவேணுமென்றும் இப்படியெல்லாம் தீய வழிகளிலே யுண்டாகக் கடவ மனோரதங்களுக்கு ஒரு வரம்பில்லையிறே. இப்படியே புத்ரபச்வந்நாதி ஸாதனங்களான காம்யேஷ்டிகளிலுண்டாகக் கடவ மனோரதபரம்பரைகளுக்கும் ஒரு வரையறையில்லையிறே. இந்த மனோரதந்தான் * ஊமனார் கண்ட கனவிலும் பழுதாயொழிகையாலே 'வந்த்யை:' என்கிறது. தீய வழிகளிலும் நல்ல வழிகளிலும் நினைத்தபடி காரியம் கை கூடாமையாலே சவலைப்பட்டுக் கொண்டே காலம் கழிக்க வேண்டிற்றித்தனை போக்கி பலனொன்றும் பெற்றிலேனென்கிறார்.

[த்வத்பாதயோரநுதிதஸ்ப்ருஹ ஏஷ ஸோஹம்] * உன்னடிப்போது நானணுகாவகை வேற்று வழிகளிலே திரிந்துழல்கின்றேனத்தனை போக்கி 'நின்மூர்த்தி பல்கூற்றிலொன்று காணலுமாங்கொல் ?' என்கிற ஸ்ப்ருஹாலேசமுமில்லையே பாவியேனுக்கென்கிறார்.

[ஏஷ ஸோஹம் நஸ்வஸ்தி நிசாமயாமி] பகவதநுராகத்தைக் கனக்கண்டறியாத நான் ஒரு நன்மை பெறுவேனாக எண்ணியிருக்கைக்கு என்ன ப்ரஸக்தியுண்டென்கிறார். .... (73)

**है निर्भयोऽस्म्यविनयोऽस्मि यतस्त्वदङ्घ्रौ लिप्सामलब्धवति चेतसि दुर्विनीते।
दुष्कर्मवर्मपरिकर्मित एष सोऽहम् अग्रे वरप्रद ! तव प्रलपामि किंचित् ॥ ७४ ॥**

**ஹை நிர்ப்பயோஸ்ம்யவிநயோஸ்மி யதஸ் த்வதங்க்ரௌ லிப்ஸாமலப்தவதி சேதஸி துர்விநீதே।
துஷ்கர்மவர்மபரிகர்மித ஏஷ ஸோஹம் அக்ரே வரப்ரத தவ ப்ரலபாமி கிஞ்சித் ॥ 74 ॥**

| | |
|---|---|
| ஹே வரப்ரத | வரதனே ! |
| ஏஷ ஸோஹம் | இவ்வடியேன் |
| நிர்ப்பய: அஸ்மி | அச்சமற்றவனாயிருக்கிறேன் ; |
| அவிநய: அஸ்மி | விநயமற்றிருக்கிறேன் ; |
| ஹை | அந்தோ ! |
| யத: | ஏனெனில், |
| துர்விநீதே | சீர்திருந்தாமலிருக்கிற |
| சேதஸி | [என்] நெஞ்சானது |
| த்வதங்க்ரௌ | உனது திருவடிகளில் |
| லிப்ஸாம் | விருப்பத்தை |
| அலப்தவதி ஸதி | அடையாதிருக்குமளவில் |
| துஷ்கர்மவர்ம பரிகர்மித: | தீவினைகளாகிற கவசங்களை அணிந்துள்ள |
| ஏஷ ஸோஹம் | இவ்வடியேன் |
| தவத் அக்ரே | உன் எதிரில் |
| கிஞ்சித் | வாயால் வந்ததொன்றை |
| ப்ரலபாமி | பிதற்றுகின்றேன். |

* * * 'த்வத்பாதயோரநுதிதஸ்ப்ருஹ:' என்று சொன்னவிது பொய்யன்றிக்கே உண்மையாயிருக்கப்பெற்ற அடியேன், திருமுன்பே நிற்கைக்கும் அயோக்யனாயிருந்து வைத்து 'ஹஸ்தீச! த்ருஷ்டயம்ருதவ்ருஷ்டி பிராபஜேதா:' என்று வாய்கூசாதே விண்ணப்பம் செய்வது என்ன அச்சங்கெட்ட அநீதியென்று அநுசயிக்கிறார்.

[ஹை!] கெட்டேன் கெட்டேனென்கிறார். அவனுடைய வைலக்ஷண்யத்தையும் தம்முடைய ஸ்வருபத்தையும் கண்டார். தார்மிகன் வைத்த தண்ணீர்ப் பந்தலை யழிப்பாரைப்போலே ஆழ்வா போன்ற மஹான்களுக்கு அநுபாவ்யமான வஸ்துவை நாம் ஸம்போதித்துப் பேசி தூஷிக்கிறபடியென்னே ! என்று வெறுக்கிறார்.

[நிர்ப்பயோஸ்மி] புரோடாசத்தை விரும்புகின்ற நாய்க்குப் போலே நமக்கும் தக்க தண்டம் தவிராதென்று அஞ்சி நடுங்க ப்ராப்தமாயிருக்க பயலேசமுமற்றிருந்தே னென்கிறார். கடதாஸீ ஸார்வபௌமன் பாடேவந்து 'என்னை நோக்காய்' என்று விரும்புமாபோலே நம்மைப் பாராதே விலக்ஷண விஷயத்தைக் காமுற்றோமே, இதனைப் பிறரறியில் என்படுவோம் ! என்று அஞ்சாதே கிடக்கிறேன்.

[அவிநயோஸ்மி] 'நெடுநாள் ஸதாசார்ய ஸேவை பண்ணி ஸ்வருபஜ்ஞராய்ப் போந்த நீர் இங்ஙனே வெறுத்துக்கொள்ளக்கடவீரோ' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, அந்தோ! ஆசார்ய ஸேவையை நான் கனவிலும் செய்தறியே னென்கிறார். அவிநய:=அசிக்ஷித: என்றபடி, ஆசார்ய ஸேவையில்லாமையாலே அசிக்ஷிதனாயிராநின்றே னென்கை, 'உம்முடைய நிர்பயத்வத்தையும் அவிநீதத்வத்தையும் எதுகொண்டு நிச்சயித்தீர்?' என்று எம்பெருமான் கேட்டானாகக்கொண்டு மறுமாற்ற முரைக்கிறார். [யத இத்யாதிநா] துர்விநீதே மம சேதஸி த்வதங்க்ரௌ லிப்ஸாமலப்தவதி ஸதி-யத: த்வதாக்ரே கிஞ்சித்ப்ரலபாமி-[தத ஏவ] ஒரு படியாலும் திருந்தாதே சீர்குலைந்து கிடக்கிற பாவியேன் நெஞ்சு தேவரீர் திருவடித்தாமரைகளிலே ஆசாலேசமும் அமையப் பெறுதிருக்க, தேவரீர் திருமுன்பே நின்று வாய்திறக்க விரகுண்டோ? ஞானபக்திகள் தலையெடுத்தார் பேசும்படிகளை அநுகரித்துச் சில பாசுரங்கள் பேசாநின்றேனே! பயவிநயங்கள் அடியேனுக் குண்டாகில் இங்ஙனே பேச ப்ரஸக்தியுண்டோ? இது கொண்டே யாய்த்து அடியேன் 'நிரப்பயோஸ்மய விநயோஸ்மி, என்றே னென்கிறார். 'நாணமில்லாச் சிறுதகையேன் நானிங்கலற்றுவதென்?' ... ... ... ... (74)

सव्याधिराधिरवितुष्टिरनिष्टयोगः स्वाभीष्टभञ्जनममर्षकरो निकर्षः ।
कृन्तन्ति सन्ततमिमानि मनो मदीयं हस्तीश! न त्वदभिलाषनिधिप्रहाणिः ॥ ७५ ॥

ஸவ்யாதிராதிரவிதுஷ்டிரநிஷ்டயோக: ஸ்வாபீஷ்டபஞ்ஜநமமர்ஷகரோ நிகர்ஷ: ।
க்ருந்தந்தி ஸந்ததமிமாநி மநோ மதீயம் ஹஸ்தீச ந த்வதபிலாஷநிதிப்ரஹாணி: ॥ 75 ॥

| | |
|---|---|
| ஹஸ்தீச | ஹஸ்திகிரி நாதனே! |
| ஸவ்யாதி: | சரீர வ்யாதியோடு கூடின |
| ஆதி: | மனோவ்யாதியென்ன |
| அவிதுஷ்டி: | [நெடுநாளநுபவித்தும்] த்ருப்தி பிறவாமையென்ன |
| அநிஷ்டயோக: | வேண்டாதவை வந்துசேர்வதென்ன |
| ஸ்வாபீஷ்ட பஞ்ஜநம் | விரும்பிய பொருள் கிடைக்காதபடி தடைபடுவதென்ன |
| அமர்ஷகர: நிகர்ஷ: | கோபத்தை யுண்டாக்கவல்ல தாழ்ச்சியென்ன |
| இமாநி | ஆக இவைகள் |
| மதீயம் மந: | என் மனதை |
| ஸந்ததம் | எப்போதும் |
| க்ருந்தந்தி | ஈர்கின்றன. |
| த்வதபிலாஷநிதி ப்ரஹாணிஸ்து | உன்னிடத்தில் அன்பு வைப்பதாகிற நிதியினிழவோ வென்றால் |
| ந க்ருந்ததி | வருத்துகின்றதில்லை [உன்னிடத்தில் அன்பு இல்லையே என்கிற துக்கம் மாத்திர மில்லை யென்கை]. |

* * * கீழ் 'த்வதங்க்ரௌ லிப்ஸாமலப்தவதி சேதஸி' என்றதை விவரிக்கிறதாய்த்து இந்த ச்லோகம். ''யந்முஹூர்த்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே । ஸா ஹாநிஸ்தந் மஹச்சித்ரம்

ஸா ப்ராந்திஸ் ஸா ச விக்ரியா ॥ " என்று ஒரு க்ஷணம் ஒரு பகவத் சிந்தை மாறினலும், அதுவேதான் மஹத்தான ஆபத்தென்றும், 'ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாந வர்ஜிதே! தஸ்யுபிர்முஷிதே நேவ யுக்த மாக்ரந்திதும் ந்ருணும் ॥ " என்று பகவதநுத்யாநமின்றிக்கே ஒரு நொடிப்பொழுது கழிந்தாலும் ஸர்வஸ்வத்தையும் பறிகொடுத்தவன்போலே ஊணுமுறக்கமுமற்றுக் கதறக்கடவதென்றும் இப்புடைகளிலே சாஸ்த்ரம் சொல்லா நிற்க, அதிலே நான் கரையாதே கிடக்கிறேனென்கிறார். எனக்கும் சில கரைதல்களுண்டு; அவை விஷயாந்தரங்களிலேயாயிருக்கு மத்தனை போக்கி "தேவரீர் பக்கல் பாவபந்தம் குலையப்பெற்றதே!' என்னுமத்தாலே யுண்டாகக் கடவ கரைதல் மாத்திரம் ஒருநாளுமெனக்கில்லை யென்கிறார்.

[ஸவ்யாதிः ஆதிः] ஆதியும் வ்யாதியுமென்றபடி ஆதிவ்யாதிகளுண்டானல் அடியேன் கரைகின்றேனே யொழிய பகவத் விஷயகபாவபந்தத்துக்கு ஹாநிவந்துவிட்டதே யென்று ஒருபோதும் கரைகிறேனில்லை யென்கை. [அவிதுஷ்டிः]—சிரகாலம் பஹுசோ புக்தேஷ்வபி விஷயேஷ்வத்ருப்திः. விஷயங்களை நெடுநாள் வயிறுர வுண்டு போந்தாலும் த்ருப்தனன்றிக்கே யொழிகை. [அநிஷ்டயோகः] விரும்பாதவை வந்து சேருகை. [ஸ்வாபீஷ்ட பஞ்ஜநம்] விரும்பினது கைபுகுரா தொழிகை, 'இன்னுமொரு பிள்ளை பிறக்கவேணும்' என்று விருப்பாநிற்கச் செய்தே ஏற்கனவே பிறந்துள்ள பிள்ளையும் செத்து, க்ருஹிணி தானும் செத்து நிற்கும்படியான சில ஸம்பவங்களுண்டிறே ஸம்ஸாரத்திலே; இவையாய்த்து அநிஷ்ட யோகமும் ஸ்வாபீஷ்ட பஞ்ஜநமும்.

[அமர்ஷகரோ நிகர்ஷ:] அமர்ஷமாவது ரோஷம். அதனை விளைக்கக்கடவதான நிகர்ஷம்—தண்மை. குலம், ரூபம், வித்யை, குணம் என்னுமிவற்ருல் தான் குறைய நிற்க, பிறர் அவற்ருல் நிறைய நின்ருல் வருவதொரு அஸஹிஷ்ணுதை யுண்டிறே ப்ராக்ருத ஜனங்களுக்கு, அப்படிப்பட்ட அஸஹிஷ்ணுதைக்கு நிமித்தமான குலரூபவித்யாதநாதிஷு நிகர்ஷம். அதவா [அமர்ஷகரோ நிகர்ஷः] நம் சௌரவம் குறையும்படி பிறர் ஒரு வார்த்தை சொன்னவாறே அவன் தலையை அரிந்து போகடும்படியானதொரு ரோஷமுண்டாகக் கடவதிறே; அந்த ரோஷஜனகமான நிகர்ஷமாகவுமாம்.

[இமாநி] ஆகக் கீழ்ச்சொல்லப்பட்ட இவை. ஆதிவ்யாதிகள், அவிதுஷ்டி, அநிஷ்டயோகம், அபீஷ்ட பஞ்ஜனம், அமர்ஷகரமான நிகர்ஷம் என்னப்பட்ட இவை. 'இமாநி' என்று ஸாமாந்யே நபும்ஸகம். [மதீயம் மநः ஸந்ததம் க்ருந்தந்தி] ஐயோ! நமக்கு சரீர பீடை யுண்டாயிற்றேயென்றும், மனோவ்யாதி யுண்டாயிற்றேயென்றும் இப்படிப்பட்ட குறைகளைப் பற்றி அடியேன் அஹோராத்ரம் கவலைப்படா நின்றேனே யொழிய [த்வதபிலாஷநிதிப்ரஹாணிஸ்து [கிஞ்சிதபி] மதீயம் மநோ ந க்ருந்தந்தி] த்வதபிலாஷநிதிப்ரஹாணிः=த்வயி அபிலாஷः, ஸ ஏவ நிதிः; ப்ரக்ருஷ்டா ஹாநிः ப்ரஹாணிः; நிதேः] ப்ரஹாணிः, 'பேரருளாளனுடைய பாதபங்கயத்திலே அநுராகம் குலையப்பெற்றோமே' என்று ஒருபோதும் கவலைப்படுகின்றிலே னென்கை. பகவத் விஷயத்திலே அபிலாஷை மாத்ரமே அக்ஷய பலப்ரத மாகையாலே அதனை நிதி யென்கிறார். ... ... ... ... (75)

विद्वेषमानमदरागविलोभमोहाद्याज्ञानभूमिरहमत्र भवे निमज्जन्।
निर्द्वन्द्व नित्यनिरवद्य महागुणं त्वां हस्तीश! कश्श्रयितुमीक्षितुमीप्सितुं वा ॥ ७६ ॥

**வித்வேஷமாநமதராகவிலோபமோஹாதி ஆஜ்ஞாநபூமிரஹமத்ர பவே நிமஜ்ஜந்।**
**நிர்த்வந்த்வ நித்யநிரவத்ய மஹாகுணம் த்வாம் ஹஸ்தீச கः ச்ரயிதுமீக்ஷிதுமீப்ஸிதும் வா ॥ 76 ॥**

| | | | |
|---|---|---|---|
| நிர்த்வந்த்வ | ஜ்ஞாஜ்ஞானங்கள் ஸுகதுக்கங்கள் என்கிற த்வந்த்வமில்லாதவனையும் | வித்வேஷமாந மதராகவிலோப மோஹாதி ஆஜ்ஞாந பூமிः | வித்வேஷ-ஒரு வஸ்துவில் அகாரணமாகப் பகைகொள்வதென்ன. மாந-ஆபிஜாத்யாதி ப்ரயுக்தமாக அஹங்கரிக்கையென்ன, மத-விஷய லாபத்தாலே கொழுப்படைவதென்ன, ராக-விஷய ப்ராப்தியை விருப்புகையென்ன, விலோப - |
| நித்யநிரவத்ய | ஸ்வபாவமாகவே ஹேயப்ரதிபடனையுமுள்ள | | |
| ஹஸ்தீச! | பேரருளாளனே! | | |

| | |
|---|---|
| | விசேஷ லோபமென்ன, மோஹ - மோஹமென்ன, ஆதி-இவை முதலான துர்க்குணங்களுக்கு, ஆஜாந பூமி: பிறப்பிடமாய் |
| அத்ர பவே | இந்த ஸம்ஸாரத்தில் |
| நிமஜ்ஜந் | மூழ்கிக்கிடக்கிற |
| அஹம் | அடியேன் |
| மஹாகுணம் | சிறந்த குணமுடைய |
| த்வாம் | உன்னை |
| ச்ரயிதும் | அடைவதற்கும் |
| ஈக்ஷிதும் | காண்பதற்கும் |
| ஈப்ஸிதும் | அடையவிரும்புவதற்கும் |
| க: | எவ்வளவன்! [ஒன்றுக்கும் அதிகாரியல்லேன்] |

* * * 'உன் விஷயதிலே அபிலாஷையில்லையே' என்கிற அநுதாபமுமில்லை யென்றார் கீழ் ச்லோகத்தில்; அந்த அபிலாஷை தானும் அடியேனுக்கு அவத்யமென்கிறாரிதில்; நிகர்ஷத்தின் எல்லையிலே நிற்கிற நான் ஸர்வாதிகனான வுன்னை அபிலஷிக்க எவ்வளவன் என்கிறார். இதில் பூர்வார்த்தத்தாலே தம்முடைய தன்மையை அருளிச் செய்து, உத்தரார்த்த—ஏகதேசத்தாலே பேரருளாளனுடைய ஸர்வாதிகத்வத்தை அருளிச்செய்து, சரமபாதத்தாலே தம்முடைய அநர்ஹதையை அருளிச் செய்கிறார்.

[வித்வேஷமாநமதராக விலோப மோஹா த்யாஜாந பூமிரஹம்] வித்வேஷ மாவது—நிர்நிமித்தமாக ஒருவன் பக்கலிலே பகைகொள்ளுகை. மாநமாவது.—'மாநச்சித்த ஸமுந்நதி:' என்கிறபடியே ஆபிஜாத்யாதிப்ரயுக்தமான மேனணிப்பு; கர்வம். மதமாவது-விஷபலாபத்தாலே யுண்டாகக்கடவ மனக்களிப்பு. ராகமாவது விஷயப்ராப்தியில் அபிலாஷம். விலோபமாவது.—ப்ராப்தமான பொருளை ஸத் பாத்ரத்திலே விநியோகிக்கைக்கு இடைச்சுவரான அபிநிவேசம். மோஹமாவது—க்ருதக்ருத்யங்களைப்பற்றித் தெளிவில்லாமை. ஆதிசப்தத்தாலே காமக்ரோதாதிகளை க்ரஹிக்கக்கடவது. இப்படிப்பட்ட தோஷங்களுக்குத் தம்மை ஜந்மபூமியாக அருளிச்செய்கிறார்—ஸத்குணகணாகரரான இவர்!

[நிர்த்வந்த்வ]: த்வந்த்வசூந்யனே! 'க்ஷுத்பிபாஸே சோகமோஹௌ ராகத்வேஷௌ ததைவ ச| காமக்ரோதப்ரப்ருதய: த்வந்த்வ சப்தேந வர்ணிதா:||' என்னுநின்றதிறே. 'கொள்கை கொளாமையிலாதான், எள்கலிராகமிலாதான்' என்னுமாபோலே ராகத்வேஷசோகமோஹாதிகளற்றவனே! என்கை. அன்றிக்கே 'நிர்த்வந்த்வநித்யநிரவத்ய மஹாகுணம்' என்னுமளவும் ஸமஸித்து நிர்வஹிப்பாருமுண்டு; அப்போது த்வந்த்வபதம் ஸத்ருசவாசியாய், நிர்த்வந்த்வா: [அஸத்ருசா:] நித்யா: நிரவத்யா: யே மஹாகுணா:, தே யஸ்மிந் ஸ: என்றுப் அநுபமங்களாய் நித்யங்களாய் நிஷ்கல்மஷங்களான மஹாகுணங்களையுடையவனே! என்றதாகிறது.

[த்வாம் அஹம் ஈப்ஸிதும் வா ச்ரயிதும் வா ஈக்ஷிதும் வா க:? வித்வேஷாதிதோஷ பூயிஷ்டனான அடியேன் ஹேயப்ரத்யநீககல்யாணகுணாகரனான வுன்னை விரும்பவும் தொழவும் காணவும் எவ்வளவிலேன்? ஸர்வாத்மநா அடியேன் அநதிகாரியென்கை. ... ... .... (76)

पुत्रादयः कथममी मयि संस्थिते स्युः इत्यप्रतिक्रियनिरर्थकचिन्तनेन ।
दूये न तु स्वयमहं भवितास्मि कीदृक् इत्यस्ति हस्तिगिरिनाथ विमर्शलेशः ॥ ७७ ॥

புத்ராதய: கதமமீ மயி ஸம்ஸ்திதே ஸ்யு: இத்யப்ரதிக்ரியநிரர்த்தகசிந்தநேந |
தூயே ந து ஸ்வயமஹம் பவிதாஸ்மி கீத்ருக் இத்யஸ்தி ஹஸ்திகிரிநாத விமர்சலேச: || 77 ||

| | |
|---|---|
| ஹஸ்திகிரிநாத | பேரருளாளனே! |
| மயி ஸம்ஸ்திதே ஸதி | நான் மாண்ட வளவில் |
| அமீ புத்ராதய: | இந்த மக்கள் முதலானவர்கள் |
| [illegible] இதி | எப்படியாவர்களோ என்று |
| [illegible] சிந்தநேந | ப்ரதீகார மற்றதாய் [அத ஏவ] வ்யர்த்தமான சிந்தையால் |
| அஹம் | அடியேன் |
| தூயே | கஷ்டப்படுகிறேன்; |
| ஸ்வயம் கீத்ருக் பவிதாஸ்மீதி து | நாமெப்படி ஆகப்போகிறோ மென்பது மாத்திரம் |
| விமர்சலேச: | சிறிது ஆராய்ச்சியும் |
| [மே] நாஸ்தி | அடியேனுக்கு இல்லை, |

* * * கீழ் ப்ரஸ்துதமான தம்முடைய அநதிகாரித்வத்தையே இதில் ப்ரகாராந்தரேண ப்ரதிபாதித்தருளுகிறார். ஸ்ரீ வசன பூஷணத்தில் ஸச்சிஷ்யலக்ஷண ப்ரகரணத்திலே 'ஸ்வதோஷத்துக்கும் பகவத்பாகவத குணங்களுக்குமே காலம் போருகையாலே' என்றருளிச் செய்யுமிடத்து 'ஸ்வதோஷத்துக்கும்' என்று முதலிலே சொல்லுகையாலே பகவத்பாகவத குணநுஸந்தானத்திற் காட்டிலும் ஸ்வதோஷா நுஸந்தானமே ப்ரதான கர்த்தவ்யம் என்னுமிடம் ஸித்தமாக நின்றதிறே. ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகளில் பகவத்குணநுஸந்தானம் சுருங்கி ஸ்வதோஷா நுஸந்தானம் பெருகியிருக்குமென்றிறே ப்ரஸித்தியிருப்பது. ஆகையிறே சிஷ்ய லக்ஷணத்துக்கு இவர் ப்ரதம நிதர்சந பூமியாய்த்து. எம்பெருமானார் திருவடிகளிலே பலகோடி நூறாயிரம் முதலிகள் ஆச்ரயித்தார்களாயிருக்கச் செய்தேயும் 'ஸ்ரீவத்ஸ சிஹ்நசரணம் யதிராஜமீடே' என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தமை கண்டிரே.

[மயிஸம்ஸ்த்திதே ஸதி] மயி மரணம் கதே ஸதி, என்றபடி. 'பராஸுப்ராப்த பஞ்சத்வபரேத ப்ரேதஸம் ஸ்த்திதா꞉ । ம்ருத ப்ரமீதௌ த்ரிஷ்வேதே' என்பது அமரம். [அமீ புத்ராதய꞉ கதம் ஸ்யுரிதி] நாம் முடிந்தபிறகு நம்முடைய புத்ரகளத்ராதிகள் எப்பாடு படப்புகுகிறார்களோ வென்று [அப்ரதிக்ரிய நிரர்த்தக சிந்தநேந தாயே] லோகத்திலே ஜநிதர்மாக்களுக்குப் பல சிந்தைகள் விளைவதுண்டு; அவை ப்ரதீகாரஸஹங்களாயும் அத ஏவ ஸார்த்தகங்களாயுமிருக்கும்; நான் படுகிற சிந்தையோ வென்றால், 'இந்த கோபுரமிடிந்து கீழே விழுந்தால் செய்வதென்? இந்த மதிலிடிந்து மேலே விழுந்தால் செய்வதென்? கடல் வெள்ளம் நாட்டிலே வந்து பெருகிற் செய்வதென்?' இத்யாதி சிந்தைகள் போலே அப்ரதீகாரமாய் அத ஏவ நிரர்த்தகமாயிருக்கும். அப்படிப்பட்ட சிந்தையினால் அடியேன் நெஞ்சு தளர்ந்து புண்பட்டிருப்பதென்கிறார்.

[அஹம் ஸ்வயம் கீத்ருக் பவிதாஸ்மி? இதி து விமர்சலேசோபி நாஸ்தி] 'நாம் நாளைக்கு எப்பாடு படப்புகா நின்றோமோ' என்று அல்பமும் சிந்தித்தறியேன் கிடாயென்கிறார். ... (77)

शंपाचलं बहुलदुःखमनर्थहेतुः अल्पीय इत्यपि विमृष्टिषु दृष्टदोषम् ।
दुर्वासनादृढिमतस्सुखमिन्द्रियोत्थं हातुं न मे मतिरलं वरदाधिराज ॥ ७८ ॥

**சம்பாசலம் பஹுலதுக்கமநர்த்தஹேது꞉ அல்பீய இத்யபி விம்ருஷ்டிஷு த்ருஷ்டதோஷம் ।**
**துர்வாஸநாத்ரடிமதஸ்ஸுகமிந்த்ரியோத்தம் ஹாதும் ந மே மதிரலம் வரதாதிராஜ ॥ 78 ॥**

| | |
|---|---|
| வரதாதிராஜ | பேரருளாளப்பெருமாளே! |
| விம்ருஷ்டிஷு | ஆராய்ச்சி செய்யுமளவில் |
| சம்பாசலம் இதி | மின்னல்போல் க்ஷணிகமானதென்றும் |
| பஹுளதுக்கமிதி | துக்கப்ரசுரமானதென்றும் |
| அநர்த்தஹேதுரிதி | அநர்த்தங்களுக்குக் காரணமென்றும் |
| அல்பீய꞉ இத்யபி | அத்யல்பமென்றும் [இப்படியாக] |
| த்ருஷ்ட தோஷம் | ப்ரத்யக்ஷிக்கப்பட்ட தோஷங்களையுடையதாயும் |
| இந்த்ரியோத்தம் | இந்த்ரியஜந்யமாயுள்ள |
| ஸுகம் | விஷயஸுகத்தை |
| மே மதி꞉ | என் புத்தியானது |
| துர்வாஸநாத்ரடிமத꞉ | துர்வாஸனையின் உறைப்பினாலே |
| ஹாதும் நாலம் | விடமாட்டாதிருக்கிறது. |

* * * விஷயதோஷ ஸமஷ்டியை ஸ்பஷ்டமாகக் கண்டு கொண்டிருக்கச் செய்தேயும் துர்வாஸநாதார்ட்யத்தாலே அவற்றில் நசையறப்பெறுகின்றிலேனென்கிறார்.

[ஹே வரதாதிராஜ! விம்ருஷ்டிஷு சம்பாசலமிதி பஹுல துக்கமிதி அநர்த்தஹேதுரிதி அல்பீய இதி ச த்ருஷ்ட தோஷமபி இந்த்ரியோத்தம் ஸுகம், மே மதி꞉ துர்வாஸநாத்ரடிமத꞉ ஹாதும் நாலம்.] ஐந்த்ரியிகமான ஸுகாபாஸங்களிலே பரமபோக்யதா புத்தியானது ஆபாதப்ரதீதியிலே தோன்றினாலும் விவேகிகளாயிருப்பார் சிறிது விமர்சித்தவாறே அவற்றினுடைய தோஷங்களடங்கலும் கையிலங்கு நெல்லிக்கனிபோலே விளங்கக்கடவதாயிருக்குமிறே. [விம்ருஷ்டிஷு] விம்ருஷ்டியாவது—விமர்சம்—ஆராய்ச்சி. ஆவ்ருத்தி பஹுத்வத்தைப்பற்ற 'விம்ருஷ்டிஷு' என்று பஹுவசனமாய்க் கிடக்கிறது.

ஒருகால் ஆராய்ந்தவாறே விஷயங்களின் தோஷபூயஸ்த்வம் அறியவரிதாய் பலகால் ஆராய்ந்தாலிறே அது அறியக்கடவதாயிருக்கும். அது தோன்றவாய்த்து 'விம்ருஷ்டௌ' என்னாதே 'விம்ருஷ்டிஷு' என்றது. வி-பூர்வகமான ம்ருசதாது-க்திந் ப்ரத்யயாந்தமாய் விம்ருஷ்டி யென்றாகக்கடவது.

[சம்பாசலம்] 'மின்னின் னிலையில மன்னுயிராக்கைகள்' என்றும், 'கர்ப்பேபி லீயதே பூய: ஜாயமாநோஸ்தமேதி ச । ஜாதமாத்ரேபி ம்ரியதே பால பாவேத யௌவநே । மத்யமஞ்ச வய: ப்ராப்ய வார்த்தகே வா த்ருவா ம்ருதி:' என்றும், 'ஸம்பத: ஸ்வப்ந ஸங்காசா: யௌவநம் குஸுமோபமம் । தடிச்சஞ்சலமாயுச்ச கஸ்ய ஸ்யாஜ்ஜாநதோ த்ருதி:' என்றும் சொல்லுகிறபடியே சரீரம் அஸ்திரமென்றால், சரீரோபாதிகமான இந்த்ரியஸுகம் ததோபி க்ஷணிகமென்னத் தட்டில்லையிறே. ஆயிடுக; க்ஷணிகமேயாகிலும் அந்த க்ஷணத்திலாவது ஸுகரூபமாயிருக்குமோ வென்னில், அதுவுமில்லை யென்கிறார் [பஹுல துக்கம் என்று.] இந்த்ரிய ஸுகத்தை ஸுகமென்றே கொண்டாலும் து:க்காம்சமே ப்ரசுரமா யிருக்குமென்கை. இந்த ஸுகாபாஸமானது மேலுள்ள காலத்திலும் துக்கங்களை விளைக்கக் கடவதாயிருக்கு மென்கிறார். [அநர்த்த ஹேது: என்று.] கண்டார், கண்டவிடங்களிலெல்லாம் கர்ஹிக்கும்படியாயும், மேல் கோரநரகப்ரவேச ஹேதுவாயுமிறெ இதிருப்பது. நாலு நாளிலே ஸர்வஸ்வத்தையு மிழந்து கையும் கபாலமுமாய்ப் படுகிற அநர்த்தங்கள் வாசாமகோசரமாயிறே யிருப்பது. [அல்பீய:=அத்யந்தமல்பம் என்றபடி. 'சிற்றின்பம்' என்றிறே வைஷயிக ஸுகங்களைப் பாமரர்களும் வ்யவஹரித்துப் போருகிறது.

[இதி த்ருஷ்டதோஷமபி] இங்ஙனே இதினுடைய தோஷங்கள் ஸுவ்யக்தமாகக் கண்டுகொண்டிருக்கச் செய்தேயும் அநாதி துர்வாஸநாவிபவமானது இந்த ஸுகாபாஸங்களிலே மேன்மேலென அபிநிவேசத்தைப் பெருக்குமத்தனை போக்கி விரக்தி ஹேதுவாகிறதில்லை யென்கிறார். ... (78)

बुद्ध्वा च नो च विहिताकरणैर्निषिद्धसंसेवनैः त्वदपचारशतैरसह्यैः ।
भक्तागसामपि शतैर्भवताऽप्यगण्यैः हस्तीश ! वाक्तनुमनोजनितैर्हतोऽस्मि ॥ ७९ ॥

**புத்த்வா ச நோ ச விஹிதாகரணைர் நிஷித்தஸம்ஸேவநைஸ் த்வதபசாரசதைரஸஹ்யை: ।**
**பக்தாகஸாமபி சதைர்பவதாப்யகண்யை: ஹஸ்தீச! வாக்தநுமநோஜநிதை: ஹதோஸ்மி ॥ 79 ॥**

| | | | |
|---|---|---|---|
| புத்த்வா ச | தெரிந்தும் | நிஷித்த ஸம்ஸேவநை: | சாஸ்த்ர நிஷித்தங்களைச் செய்கை யாகிற பாபங்களாலும் |
| நோ புத்த்வா ச | தெரியாமலும் | த்வதபசார சதை: | உன் திறத்தில் செய்யும் பல பல அபசாரங்களாலும் |
| வாக்தநுமநோ ஜநிதை: | வாக்கென்ன, சரீரமென்ன, மனஸ்ஸென்ன இவைகளால் உண்டாக்கப் பட்ட | அஸஹ்யை: | ஸர்வ ஸஹிஷ்ணுவான வுனக்கும் பொறுக்க முடியாத |
| பவதாபி அகண்யை: | [ஸர்வசக்தனான] உன்னாலும் எண்ண முடியாத | பக்தாகஸாம் சதைரபி | பல பல பாகவதாபசாரங்களாலும் |
| விஹித அகரணை: | விஹிதங்களைச் செய்யாமையாகிற பாபங்களாலும் | ஹதோஸ்மி | கெட்டேன். |

* * * வைஷயிகஸுகாபிநிவிஷ்டனென்னுமித்தனையேயோ ? கரணத்ரயத்தாலும் அடியேன் செய்து போரும் அபசாரங்களுக்குத் தான் ஒரு வரம்புண்டோ வென்கிறார். [புத்த்வா ச நோ ச] புத்த்வா ச நோ புத்த்வா ச என்றபடி. [அறிந்தும் அறியாமலும்] அபசாரங்கள் புத்தி பூர்வகம், ப்ராமாதிகம், அகதிகம் என்று த்ரிவிதமாயிருக்கும். இங்கு 'புத்த்வா ச நோ ச' என்று புத்தி பூர்வகத்தையும் ப்ராமாதிகத்தையும் நிர்தேசித்தது அகதிகத்துக்கும் உபலக்ஷணமென்னலாம்.

[விஹிதாகரணை:] 'இடகிலேனோன்றட்டகில்லேனைம்புலன் வெல்லகில்லேன், கடவனாகிக் காலந்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன். [நிஷித்த ஸம்ஸேவநை:] 'விஹிதாகரணை:' என்றாப் போல் 'நிஷித்தகரணை:' என்னாதே 'ஸம்ஸேவநை:' என்றது—நிஷித்தக்ருத்யங்களில் ஆதரபூர்வகமாக அபிநிவேசித்தமை தோற்றுகைக்காக. த்விதீயபாதத்தில் 'த்வதபசாரசதை: அகண்யை:' என்றும், த்ருதீயபாதத்தில் 'பவதாப்யஸஹ்யை:' என்றும் ப்ராசீநபாடமென்று கேட்டிருக்கை. அந்த பாடத்திலே

பகவதபசாரபாகவதாபசாராஸஹ்யாபசாரரூப நாநாவிதாநந்தாபசாராந்' [சரணுகதிகத்யே] என்றதை, நினைக்க.

அக்ருத்யகரணத்திற்காட்டில் பகவதபசாரம் க்ரூரதரமாய், அதிலும் பாகவதாபசாரம் க்ரூரதரமாய், அது தன்னிலும் அஸஹ்யாபசாரம் அதிமாத்ரக்ரூர தரமாயிருக்கும். இதுக்கடி பூர்வபூர்வங்களிற்காட்டில் உத்தரோத்தரங்களில் பகவந்நிக்ரஹமதிசயித்திருக்கை. [பவதாப்யகண்யை:] ஸர்வசக்தனை உன்னுலும் எண்ணவொண்ணுதபடியிறே அடியேன் அபராதம் செய்திருப்பது. 'பஹவோ ந்ருப கல்யாண குணு: புத்ரஸ்ய ஸந்தி தே' என்ற உன் கல்யாண குணங்களை ஒருபடி எண்ணி முடித்து விடலாம். அடியேனுடைய கல்யாண குணங்கள் வஸ்துத: அஸங்க்யேயங்களென்கிருர். இந்த விசேஷணம் 'விஹிதாகரணை:' இத்யாதிகளெல்லாவற்றிலும் அந்வயிக்கக் கடவது. [வாக்தநுமநோ ஜநிதை:] ஸமித்தையறுக்கக்கொடுத்த வாளைக்கொண்டு அந்தோ! கண்ணைக் குத்திக் கொண்டேனென்கிருர். [ஹதோஸ்மி] இட்படிப்பட்ட அபசாரஸஹஸ்ரங்களாலே ஸ்வரூபஸத்தையே கெட்ட தென்கிருர். .... (79)

**त्वद्दास्यमस्य हि मम स्वरसप्रसक्तं तच्चोरयन्नयमहं किल चस्खल प्राक् ।**
**त्वं मामकीन इति मामभिमन्यसे स्म हस्तीश! संशमय नस्तमिमं विवादम् ॥ ८० ॥**

**த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்நயமஹம் கில சஸ்கல ப்ராக்**
**த்வம் மாமகீந இதி மாமபிமந்யஸே ஸ்ம ஹஸ்தீச ஸம்சமய நஸ் தமிமம் விவாதம் ॥ 80 ॥**

| | |
|---|---|
| ஹஸ்தீச | பேரருளாளனே! |
| அஸ்ய மம | இப்படிப்பட்ட [மஹா பாபியான] எனக்கு |
| த்வத்தாஸ்யம் | உன்பக்கல் அடிமையாயிருப்பதன்றே |
| ஸ்வரஸப்ரஸக்தம் ஹி | ஸ்வாரஸிகமானது [ஸ்வதஸ்ஸித்தம்]; |
| அயம் அஹம் | இந்த நான் |
| ப்ராக் | பண்டெல்லாம் |
| தத் | அந்த ஸ்வதஸ்ஸித்ததாஸ்யத்தை |
| சோரயந் | களவுகாணுநின்றவனுய் |
| சஸ்கல கில | நழுவிப் போந்தேன் காண்; |
| த்வம் | [நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனுகிய] நீ |
| மாம் | [இப்படிப்பட்ட] என்னை |
| மாமகீந: இதி | 'இவன் நம்முடையவன்' என்று |
| அபிமந்யஸே ஸ்ம | அபிமானித்தருளினுய்; |
| ந: | உனக்கும் நமக்குமுண்டான |
| தம் இமம் விவாதம் | நான் உன் தாஸனல்லேன் காண் என்று கைகழியப் போவதும், "நீ என் தாஸன்" என்று என்னை நீ பின் தொடர்வதுமான இந்த விஸம்வாதத்தை |
| ஸம்சமய | இனியெப்போதும் தலையெடுக்கவொண்ணுதபடி ஸமூல சாந்தி செய்தருள்வாய். |

* * * ஆக இவ்வளவும் ஸ்வதோஷ ஸமுதாயரநுஸந்தானம் செய்தருளி, பரகதஸ்வீகாரமடியாக ஸ்வரூபஸத்தை பெற்றேனென்கிருரிதில். [அஸ்ய மம த்வத்தாஸ்யம் ஹி ஸ்வரஸப்ரஸக்தம்] இங்ஙனே தோஷவிசிஷ்டவேஷைகநிருபணீயனை அடியேனுக்கு தேவரீருடைய திருவடித்தாமரைகளில் தாஸ்ய வ்ருத்தியேயிறே ஸ்வரஸத: ப்ராப்தமாயிருப்பது. சேஷத்வாதிகளும் ஜ்ஞாத்ருத்வாதிகளும் ஆத்மதர்மங்களாயிருக்கச்செய்தே சேஷத்வாதிகளை ப்ரதாநமாக்கி ஜ்ஞாத்ருத்வாதிகளை ததநுகுணமாக யோஜிப்பர்களாய்த்து நம்மவர்கள்.

எம்பெருமானுர் கோஷ்டியிலே உபயவேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நடவா நிற்க, 'ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிருபகமாகச் சொல்லா நின்றது. இவற்றில் அந்தரங்க நிருபகமேது?' என்று ஒரு நாள் திருவோலக்கத்திலே ப்ரஸ்துதமாக எம்பெருமானுர் தாமெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இவ்வர்த்த விசேஷத்தை ஆசார்யமுகேந வெளியிட வேணுமென்று திருவுள்ளம் பற்றி ஆழ்வானை நோக்கி 'வாரீர் ஆழ்வான்! திருக்கோட்டியூருக்குச் சென்று, நம்பியை ஸேவித்து இதனை அறிந்து வாரும்' என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பி ஸந்நிதிக்கெழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்து வ்ருத்தாந்தத்தை

விண்ணப்பம் செய்து ஆறுமாஸம் ஸேவித்திருந்தும் நம்பிகள் இரங்கியருளக்காணுமையாலே 'எம்பெருமானுர் ஸந்நிதியேற விடை கொள்ளுகிறேன்' என்று புறப்படப்புக, நம்பி ஆவசையழைத்து "* மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்றருளிச் செய்ய, ஆழ்வானும் 'தங்யோஸ்மி' என்று மீண்டெழுந்தருளினர்.

இதன் கருத்து என்னென்னில், திருவாய்மொழியில் 'கண்கள் சிவந்து' என்கிற பாட்டும் 'அடியேனுள்ளான்' என்கிற பாட்டும் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கு மவை. இவற்றுள் 'அடியேனுள்ளான்' என்ற பாட்டில் முதல் விசேஷணத்தாலே 'எம்பெருமான் ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்றருளிச் செய்யக் கருதிய ஆழ்வார் 'ஆத்மாவிலுள்ளான்' என்ருவது 'என்னுள்ளான்' என்ருவது சொல்லாமல் 'அடியேனுள்ளான்' என்று—அடிமையையிட்டு ஆத்மாவை நிருபித்தமை தோற்ற அருளிச்செய்கையாலே ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களிற் காட்டிலும் சேஷத்வமே ப்ரதான நிருபகமென்றதாயிற்று.

அடியேனுக்கு த்வத்தாஸ்யம் அந்தரங்கநிருபகமாயிருக்கச் செய்தேயும் [அயமஹம் ப்ராக் தத் சோரயந் சஸ்கல கில] முன்புள்ள காலமெல்லாம் ஆத்மாபஹாரக் கள்ளனுய்ப் போந்தேன். [சோரயந்] த்வத்தாஸ்யமே ஸ்வரூபமென்னுமிடம் அறியாதொழிந்தேனல்லேன். அறிந்து வைத்தே உன்னை வஞ்சிக்கப்புகுந்தேன் காண். [ப்ராக் சஸ்கல] 'தெரிந்துணர் வொன்றின்மையால் தீவினையேன், வாளாவிருந்தொழிந்தேன் கீழ் நாள்களெல்லாம்' என்னுமாபோலே 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்கைக்கு ப்ராப்தியுண்டா யிருக்க அனுதிகாலம் இழந்து போந்தேன். சஸ்கல=ஸ்கல தாது, லிட். உத்தமபுருஷம் ஏக வசனம். நழுவினேனென்கை. இப்படி அனுதிகாலம் * யானேயென்னை யறியகிலாதே யானே யென்றனதேயென்றிருந்த வென்னை * 'இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானை நீ உன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே இசைவித்தருளினையத்தனைகாணென்கிருர். [த்வம் மாம் மாமகீந இத்யபிமந்யஸேஸ்ம] 'இவன் நம்முடையானிறே; இவனை நாம் கைவிட்டிருக்க வொண்ணுமோ? உடைமையைப் பேணவேண்டுவது உடையவனுடைய பரமேயிறே' என்று திருவுள்ளமாய் இன்றளவிலே நீயேகாண் என்னையபிமானித்தருளினுய்.

இங்ஙனே ஆழ்வான் விண்ணப்பம் செய்யக் கேட்ட பேரருளாளன் 'அப்படியாகில் இனி உமக்கு ஒரு குறையுமில்லையே? இனி நாம் உமக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லையே? ஸமீஹிதஸித்தி பெற்றீரன்றோ? இனி நம்மை ஒன்றுக்கும் கால்கட்டாதே விடக்கடவீரன்றோ?' என்ன, [ஹஸ்தீச ஸம்சமய நஸ்தமிமம் விவாதம்]—என்கிருர். 'ஏதத்தத் புநரபி தைவதுர்விபாகாதாலர்க்கம் விஷமிவ ஸர்வதஃ ப்ரஸக்தம்' என்னுமாபோலே பழைய துர்வாஸனையே மீண்டும் மறுவலிட்டுப் பாவியேனைப் படுகுழியிலே வீழ்த்துமோ வென்று ப்ரக்ருதிஸ்வபாவத்தாலே போர பயப்படா நின்றேன். அடியேன் ஸ்வதஸ்ஸித்தமான தாஸ்யத்தை மறந்து * அந்நாள் நீ தந்த ஆக்கையின் வழியுழன்று திரிந்தது ஒருநாள் இருநாள் அல்ல. அனுதிகாலமுண்டு இங்ஙனே கழிந்தது. 'த்வம் மே' என்ருல் 'அஹம்மே' என்று நெடுநாளாக மார்பு நெறித்துக்கிடந்த அடியேனை இன்று நீ நிர்ஹேதுகமாக அபிமானித்து உரிமைப்படுத்திக் கொண்டாயென்னு என்னுடைய அஹங்கார மமகாரங்கள் வேருன்றிக் கிடந்தவை இன்ருேடு முதலற்றுப் போய்விடுமோ? 'விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறுமைம்புலனிவை மண்ணுளென்னைப் பெற்ருல் என் செய்யா' என்று * மயர்வற மதி நலமருளப் பெற்றவர்களே அஞ்சி நடுங்கும் போது நீசனேன் எவ்வளவிலேன்? இன்று அபிமதனுய்ப் போந்திருக்கிற அடியேனே நாளைக்கு 'கோயம் விஷ்ணுஃ' என்றுப்போலே க்ஷேபித்துச் சொல்லவும் எதிரம்பு தொடுக்கவும் நேருமாகையாலே இவ்வளவிலே அடியேன் த்ருப்தனுகிறிலேன்.' 'நஃ தமிமம் விவாதம் ஸம்சமய'=த்வம் மே ஹம் மே என்கிற விவாதம் இனி நமக்கு ஒருநாளு முண்டாகாதபடி ஸமூலமாகப் போக்கியருள வேணும். * சீமாலிகனவனேடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமர்றவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய் * என்ற உன்படியை நினைக்குந்தோறும் * ஆற்றங்கரை வாழ் மரம் போலஞ்சுகின்றேன்; ஆகையாலே ஆத்ம ஜ்ஞானமுள்ளதனையும் அடியேன் உன்றன்ருேடு விவாதப்படாதபடி க்ருபை செய்தருளவேணுமென்கிருர்.

— .... .... .... .... ... ...

**भोगा इमे विधिशिवादिपदं च किंच स्वात्मानुभूतिरिति या किल मुक्तिरुक्ता ।**
**सर्वं तदूषजलजोषमहं जुषेय हस्त्यद्रिनाथ! तव दास्यमहारसज्ञः ॥ ८१ ॥**

**போகா இமே விதிசிவாதி பதம் ச கிஞ்ச ஸ்வாத்மாநுபூதிரிதி யா கில முக்திருக்தா ।**
**ஸர்வம் ததூஷஜலஜோஷமஹம் ஜுஷேய ஹஸ்த்யத்ரிநாத தவ தாஸ்யமஹாரஸஜ்ஞ: ॥ 81 ॥**

| | |
|---|---|
| ஹஸ்த்யத்ரிநாத | திருவத்தி மாமலை நாதனே ; |
| தவ | உன்னுடைய |
| தாஸ்யமஹா ரஸஜ்ஞ: | அடிமைச் சுவடறிந்த |
| அஹம் | அடியேன் |
| [யே] இமே போகா: | ஐஹிகங்களான யாவை சில போகங்களுண்டோ |
| [யத்] விதி சிவாதி பதம் ச | ப்ரஹ்மருத்ராதிகளுடைய பதவி யாதொன்றுண்டோ |
| கிம் ச | இன்னமும் |
| ஸ்வாத்மாநு பூதிரிதி | ஆத்மாநுபவ மென்று |
| உக்தா | சொல்லப்பட்ட |
| யா கில முக்தி: | யாதொரு மோக்ஷமுண்டோ |
| ஸர்வம் தத் | ஆகிய அவை எல்லாவற்றையும் |
| ஊஷஜலஜோ ஷம் ஜுஷேய | ஊஷரஜலப்ராயமாக [அஸாரமாக] நினைக்கக்கடவேன். |

* * * தமக்குப் பேரருளாளன் தாஸ்யரஸஜ்ஞாபனம் பண்ணினபடியை அருளிச்செய்தார் கீழ் ச்லோகத்திலே; அடிமைச்சுவடு நெஞ்சில் பட்டவாறே ப்ரயோஜநாந்தர வைரஸ்யம் பிறக்கக்கடவதிறே. அது பிறந்தபடியை அருளிச் செய்கிறாரிதில். இவ்வுலகத்தி லிருந்துகொண்டு அநுபவிக்கப்படுகிற புத்ர பௌத்ராதிஸந்தாந ஸம்ருத்தி, பசு ஸம்ருத்தி, அன்ன ஸம்ருத்தி முதலிய போகங்களென்ன, ஸ்வர்க்காதி லோகங்களிலே இருந்துகொண்டு அனுபவிக்கப்படுகிற ரம்பாபரிரம்பாதி போகங்களென்ன, [ப்ரஹ்மபட்டம் ருத்ரபட்டம் என்றிப்புடைகளிலே உத்துங்கமாக ஓதப்படுகிற பதவிகளென்ன] கேவலாத்மாநுபவமென்று சொல்லப்படுகிற அவர மோக்ஷமென்ன.—இவை யெல்லாவற்றையும் அஸாரமாக புத்திபண்ணக் கடவேன் ; பேரருளாளனே! உன் திறத்திலே தாஸ்யரஸம் ஜ்ஞாநகோசரமானால் இந்த போகாபாஸங்களெல்லாம் ரோகமாகத் தோற்றுமத்தனை போக்கி ஒரு போகமாகத் தோற்றுமோ தான்! என்கிறார்.

[தத் ஸர்வம் ஊஷஜலஜோஷம் ஜுஷேய] ஊஷஜலமாவது- உப்புத்தண்ணீர். ஊஷஜலத்தை எப்படி ஒருபொருளாக மதிக்கமாட்டார்களோ அப்படி அடியேன் பகவதநுபவ வ்யதிரிக்த போகங்களை ஒரு பொருளாக மதிக்கமாட்டேன் என்றதாய்த்து. ... .... ... (81)

**विषयविषधरव्रजव्याकुले जननमरणनक्रचक्रास्पदे ।**
**अगतिरशरणो भवाब्धौ लुठन् वरद! शरणमित्यहं त्वां वृणे ॥ ८२ ॥**

**விஷயவிஷதரவ்ரஜவ்யாகுலே ஜநநமரணநக்ரசக்ராஸ்பதே ।**
**அகதிரசரணோ பவாப்தௌ லுடந் வரத சரணமித்யஹம் த்வாம் வ்ருணே ॥ 82 ॥**

| | |
|---|---|
| வரத | வரந்தரும் பெருமானே ! |
| விஷயவிஷதர வ்ரஜவ்யாகுலே | சப்தாதி விஷயங்களாகிற ஸர்ப்ப ஸமூஹங்களால் நிபிடமாயும் |
| ஜநந மரண நக்ர சக்ராஸ்பதே | பிறப்பிறப்பாகிற முதலைக்கூட்டங்களுக்கு இருப்பிடமாயுமிருக்கிற |
| பவாப்தௌ | ஸம்ஸாரக் கடலில் |
| லுடந் | புரளாநின்ற |
| அஹம் | அடியேன் |
| அகதி: அசரண: இதி | உபேயாந்தரசூந்யன், உபாயாந்தர சூந்யன் என்ற காரணத்தினாலே |
| த்வாம் | உன்னை |
| சரணம் வ்ருணே | சரணம் புகுகின்றேன். |

* * * இவ்வளவாலே தம்முடைய ப்ரபத்த்யதிகார பூர்த்தியை வெளியிட்டருளி, இனி ப்ரபத்தி பண்ணுகிறாரிதில். இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தாலே ஸம்ஸாரத்தின் க்ரௌர்யத்தை யருளிச் செய்கிறார்.

ஸம்ஸாரத்தை ஸமுத்ரமாக ரூபித்தமைக்குச் சேர இரண்டு விசேஷணமிட்டருளுகிறுர். பாம்புகளும் முதலைகளும் முதலிய பல துஷ்ட ஜந்துக்களுக்கு ஸமுத்ரம் ஆஸ்பதமாக இருக்கிறுப்போலே யாய்த்து இந்த ஸம்ஸாரந் தானுமிருக்கும்படி. சப்தாதி விஷயங்களாகிற பாம்புத் திரள்களும், ஜநநமரணங்களாகிற முதலைத்திரள்களும் இந்த ஸம்ஸாரஸாகரத்திலே கிடக்கின்றனகிடீர். பாம்பின் வாயிலே யகப்பட்டவனுக்கும் விஷயங்களின் வாயிலே அகப்பட்டவனுக்கும் மதிமயக்கம் ஒத்திருக்கையாலே விஷயங்களை விஷதரங்களாகச் சொல்லுகிறது. [ஜநந மரணநக்ரசக்ராஸ்பதே] கடலிலே விழுந்தவர்கள் முதலைகளுக்குத் தப்பிப் பிழைக்கவொண்ணுதாப்போலே யாயிற்று இந்த ஸம்ஸாரத்திலே ஜநநமரணங்களுக்கும்.

இப்படிபட்ட ஸம்ஸார ஸமுத்ரத்திலே 'ஆவாரார்துணை யென்றலை நீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல், பிறவிக்கடலுள் நின்று நான் துளங்க' என்கிறபடியே ஓர் அவலம்பமின்றிக்கே இங்குமங்கும் தட்டித் தடுமாறுகின்ற அடியேன் ஸர்வஜ்ஞனுய் ஸர்வசக்தனுய் சேஷியாகையாலே ப்ராப்தனுன வுன்னை உபாயமாகப் பற்றுகிறேன். 'சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினுலும் தேவபிரானையே அடைந்த' என்கிறபடியே கரணத்ரயத்தாலுண்டான ஸ்வீகாரம் அதிகார பூர்த்திக்கு உடலாகையாலே அம் மூன்றும் அபேக்ஷிதமாயிருந்தாலும் ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே அவையிரண்டையுமொழிய இங்கு மாநஸமான வரணமாத்ரத்தைச் சொல்லுகிறதென்று சிலர் சொல்லுவர்கள். வாசிகமானவளவைய்யே சொல்லுகிறதென்று பெரியார் பணிக்கும்படி. 'சரணவரணவாகியம் யோதிதா ந பவதி பத ஸாபி தீபூர்விகா' என்று மேலே அருளிச் செய்ததற்கு இந்த நிர்வாஹம் பொருந்தியதாமிறே.

இந்த ச்லோகம் முதலான 'ப்ரியமிதரததாபி' என்ற ச்லோகமளவாகவுள்ள தசகம் கௌரீவ்ருத்தம். .... ... ... ... ... ... (82)

अकृतसुकृतकस्सुदुष्कृततरः शुभगुणलवलेशदेशातिगः ।
अशुभगुणपरस्सहस्रावृतः वरदमुरुदयं गतिं त्वां वृणे ॥ ८३ ॥

அக்ருதஸுக்ருதகஸ் ஸுதுஷ்க்ருத்தர: சுபகுணலவலேசதேசாதிக: |
அசுபகுணபரஸ்ஸஹஸ்ராவ்ருத: வரதமுருதயம் கதிம் த்வாம் வ்ருணே || 83 ||

| | | | |
|---|---|---|---|
| அக்ருதஸுக்ருதக: | அல்ப ஸுக்ருதத்தையும் அநுஷ்டிக்காதவனுய் | உருதயம் | பேரருளாளனுய் |
| ஸுதுஷ்க்ருத்தர: | பாபிஷ்டர்களில் அக்ர கண்யனுய் | வரதம் | வரம்தரும் பெருமாளான |
| சுபகுணலவலேச தேச அதிக: | நல்ல குணத்தின் லவ லேசத்திற்கும் அதிதூரஸ்தனுய் | த்வாம் | உன்னை |
| அசுபகுண பரஸ் ஸஹஸ்ர ஆவ்ருத: | காமக்ரோதம் முதலிய பல்லாயிரம் தீய குணங்கள் சூழப்பட்டவனுன அடியேன் | கதிம் வ்ருணே | சரணமாக அடைகிறேன். |

* * * தம்முடைய தோஷபூயஸ்த்வத்தைக் கீழில் தசகத்திலே பன்னி யுரைத்திருந்தாலும் அவ்வளவிலே பர்யாப்தி பெற மாட்டாத ஸ்வபாவத்தாலும் சரணவரண ஸமகாலத்திலே தோஷப்ராசுர்யாநுஸந்தான மாவச்யகமென்னு மிடத்தை வெளியிடுகைக்காகவும் மீண்டும் ஸ்வதோஷபூயிஷ்டத்வாநுஸந்தான ஸஹிதமாக ப்ரபத்தி பண்ணுகிறுர். 'ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த:' என்ற நூல் வரம்பிலே நிற்குமவர்களன்றே நம் ஆழ்வாராசார்யர்கள். இப்ப்ரபத்தி தன்னை தேஹ யாத்ரா சேஷமாகவிறே நம்மவர்கள் கொண்டிருப்பது. ஸுகுமாரனுன ராஜகுமாரனுக்குப் பிடி தோறும் நெய்யையொழிய இழியாதாப்போலே இதின்றிக்கே செல்லாதாய்த்து நம்மவர்களுக்கு. ஒருகால் ப்ரபத்தி பண்ணியாயிற்றென்னு மிளுமவர்களன்றே.

[அக்ருதஸுக்ருதக:] அல்பம் ஸுக்ருதம் ஸுக்ருதகம்; தத் அக்ருதம் யேந ஸ:—ஸ்வல்ப புண்ணியமும் பண்ணுதவ னென்றபடி. ஸுக்ருதமிவ ஸுக்ருதம் என்று இவார்த்தே கப்ரத்யயமாய் ஸுக்ருதம் போல் தோற்றக்கூடிய தொன்றும் செய்திலேனென்பதாகவும் உரைக்கலாம். அதாவது—சில

அஜ்ஞாத ஸுக்ருதங்களை எம்பெருமான்றனே ஆரோபித்து மடிமாங்காயிடுவதற்கு ஏற்ற க்ருத்ய லேசமும் செய்திலே னென்கை. ஸுக்ருதம் செய்யாதொழிந்தவளவேயோ? [ஸுதுஷ்க்ருத்தர:] துஷ்கர்மம் செய்தவர்களிலே என்னில் மிக்காருண்டோவென்கிறார். [சுபகுணலவலேசதேசாதிக:] சுபகுணஸ்ய ய: லவலேச:—அம்சமாத்ரம் தத் யத்ர தேசே வர்த்ததே, தம் தேசமதிகச்சதி—அதி க்ராமதீதி—சுப குணலவலேச தேசாதிக:—அத்யல்பம் சுப குணமுள்ள விடத்திலும் கால் தாழாதே கடக்க நிற்குமவ னென்கை. நான் குடியிருக்கும் ஊரிலும் ஸத்வகுணமமையாதுகாணென்கிறார். [அசுபகுணபரஸ் ஸஹஸ்ராவ்ருத:] துர்குணங்களிலே வ்யுத்பத்தி பண்ணவேண்டுவார் என் பக்கலிலே யதேஷ்டமாக வ்யுத்பத்தி பண்ணிக் கொள்ளலாமென்கிறார். காமக்ரோதலோபமோஹமதமாத்ஸர்யங்களென்றுப் போலே ஐந்தாறு துர்குணங்களையேயிறே நாட்டார் ஓலைப்புறத்திலும் சில வ்யக்திகளிலும் கண்டறிவது என் பக்கலிலே காணப்புகில் ஆயிரம் பதினாயிரம் என்ற கணக்கிலே அவற்றைக் கண்டறியலாம் கிடீர் என்கிறார் போலும். அசுபகுணநாம் பரஸ்ஸஹஸ்ரம், தேந ஆவ்ருத: ஆச்சாதித:, ஓரோ மயிர்க்குழிகளும் ஓராயிரம் துர்குணங்கள் காணக்கிடைக்கு மென்கிறார் போலும். இப்படிப்பட்ட அடியேன் *பிணி யொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமானும் * மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி யிலே வரம் தருமாமணிவண்ணனாயெழுந்தருளியிரா நின்ற தேவரீரை அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வமாக இஷ்ட ப்ராப்தியைப் பண்ணித்தர வல்ல உபாயமாகப் பற்றுகிறேன்—என்றாராயிற்று. ... (83)

**शरणवरणवागियं योदिता न भवति बत साऽपि धीपूर्विका ।**
**इति यदि दयनीयता मय्यहो वरद! तव भवेत् ततः प्राणिमि ॥ ८४ ॥**

**சரணவரணவாகியம் யோதிதா ந பவதி பத ஸாபி தீபூர்விகா ।**
**இதி யதி தயநீயதா மய்யஹோ வரத தவ பவேத் தத: ப்ராணிமி ॥ 84 ॥**

| | | | |
|---|---|---|---|
| **அஹோ வரத** | வரதராஜனே! | தீபூர்விகா ந பவதி | புத்தி பூர்வமாக வல்ல. |
| யா | யாதொரு | பத | **அந்தோ !** |
| **இயம்** | **இந்த** | இதி | என்று [திருவுள்ளம்பற்றி] |
| சரணவரணவாக் | சரணாகதிவாக்கு | மயி தயநீயதா | **அடியேன் மீது இரக்கம்** |
| **உதிதா** | [அடியேனிடத்தில்] உண்டாயிற்றோ | தவ பவேத் யதி | **உனக்கு உண்டாகுமாகில்** |
| **ஸாபி** | **அதுவும்** | தத: ப்ராணிமி | பிறகு பிழைத்திடுவேன். |

* * * தேவரீரோ பேரருளாளப் பெருமாளாயிரா நின்றீர். அடியேனோ பிறவிக்கடலுளாழ்ந்து துளங்கா நின்றேன். ஆனபின்பு தேவரீர் அருளுக்குப் பாத்ரம் தேடுமவராயும், அடியேன் அருள்புரி வாரைத் தேடுமவனாயுமிருக்கிற இவ்விருப்புக் கேற்ப அடியேனை தயநீயனாகத் திருவுள்ளம் பற்றுமாகில் அடியேன் உய்யத்தட்டில்லை யென்கிறார்.

'இரைத்து நல்ல மேன்மக்களேத்த யானுமேத்தினேன்' என்றும், 'எப்படியூராமிலைக்கக் குருட்டாமிலைக்கு மென்னுமப்படி யானும் சொன்னேன்' என்றும் சொல்லுமாபோலே அடியேன் ஏதோ த்ருணச்சேத கண்டூயநாதி நிர்விசேஷதயா அபுத்திபூர்வமாகச் சொன்ன சரணவரண வாக்கை உபாய கோடியிலே அந்வயிப்பித்து அடியேனை நெகிழ்க்க நினையாதே கேவலம் ஸ்வகீய நிர்ஹேதுக க்ருபையாலே வாழ்விக்கவேணுமென்கிறாராகவுமாம்.

[மயி தயநீயதா தவ பவேத் யதி] 'இவன் கைம்முதல் கொண்டு ரக்ஷிக்கத் தக்கவனல்லன்; கேவலம் நமது நிர்ஹேதுக க்ருபைக்கே விஷயபூதன்' என்று திருவுள்ளம் பற்றுமாகில் [தத: ப்ராணிமி] அவ்விரக்கமடியாக உய்ந்துபோகக் கடவேன். இத்தால் 'உன்மனத்தாலென் நினைந்திருந்தாய்' என்கிற படியே ப்ராப்திக்குபாயம் அவன் நினைவு என்றதாய்த்து. தயநீயதா என்றது—தயநீயோயமிதி புத்தி:' என்றபடி. ப்ராணிமி என்று வர்த்தமான ப்ரயோகமாயினும் பவிஷ்யதர்த்தம் கொள்ளவடுக்கும். .... (84)

**निरवधिषु कृतेषु चागस्स्वहो मतिरनुशयिनी यदि स्यात् ततः।**
**वरद! हि दयसे न संशेमहे निरनुशयधियो हता है वयम्॥ ८५॥**

**நிரவதிஷு க்ருதேஷு சாகஸ்ஸ்வஹோ மதிரநுசயிநீ யதி ஸ்யாத் தத: !**
**வரத ஹி தயஸே ந ஸம்சேமஹே நிரநுசயதியோ ஹதா ஹை வயம் ॥ 85 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரத | வரதனே ! | தத: | அந்த அநுதாப மடியாக |
| ஆகஸ்ஸு | குற்றங்கள் | தயஸே ஹி | இரங்கியருள்வாய் காண் ; |
| நிரவதிஷு | எல்லையில்லாமல் | ந ஸம்சேமஹே | [இதில்] ஸம்சயப் படுகிறோமில்லை. |
| க்ருதேஷுஸத்ஸுச | செய்யப்பட்ட வளவிலும் | வயம் து | நாமோவென்றால் |
| மதி: | புத்தியானது | நிரநுசயதிய: | அநுதாப புத்தி யற்றவர்களாக |
| அநுசயிநீ ஸ்யாத் யதி | பச்சாத்தாபத்தையுடையதாகுமே யாகில் | ஹதா: | கெட்டுப்போனோம் |
| | | ஹை | அந்தோ. |

* * * அந்த தயநீயதைக்கும் அவ்வருது பட்டேன் பாவியேனென்கிறார். செய்த குற்றங்களுக்கு அநுதபிக்கவேணுமே சேதனனானவனுக்கு. பாபங்களினுடைய ப்ராயச்சித்தங்களிலே அநுதாபமிறே முதல் நிற்பது. 'அநுதாபாதுபரமாத் ப்ராயச்சித்தோந் முகத்வத: ! தத்பூரணச் சாபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதச:' [ரஹஸ்யத்ரய ஸாரே] என்றும், 'பாபே க்ருதே யதி பவந்தி பயாநுதாப லஜ்ஜா: புந: கரணமஸ்ய கதம் கடேத' என்றும் சொல்லக்கடவதிறே. தீரக்கழிய அபராதங்கள் பண்ணினாலும் 'ஐயோ! என் செய்தோம்!' என்று கையைப் பிசைந்து அநுதபிக்கவாகிலும் பெற்றதாகில் 'இனி இவன் தீநெறியில் புகாதே செவ்வனே வர்த்திப்பான்' என்று தோற்றி எம்பெருமான் க்ருபையைப் புகவிடுகைக்குப் பாங்காகும். இந்த அநுதாபமுமின்றிக்கே மேலும் மேலும் பாபங்களைக் கூடு பூரிப்பதிலேயே நோக்குடையனான பாவியேனுக்கு எம்பெருமான் க்ருபை செய்ய என்ன பற்றாசுண்டு? இனி நாம் அந்த க்ருபையை இழந்தேபோமித்தனையாகாதே யென்று கொண்டு வயிறு பிடிக்கிறார். .... (85)

**शरणवरणवागियं याऽद्य मे वरद! तदधिकं न किंचिन्मम।**
**सुलभमभिमतार्थदं साधनं तदयमवसरो दयायास्तव॥ ८६॥**

**சரணவரணவாகியம் யாத்ய மே வரத தததிகம் ந கிஞ்சிந் மம !**
**ஸுலபமபிமதார்த்ததம் ஸாதநம் தத்யமவஸரோ தயாயாஸ் தவ ॥ 86 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ! | வரதனே ! | மம ந | அடியேனுக்கு இல்லை. |
| அத்ய மே | இப்போது என்னுடைய | தத் | இப்படி அநந்யோபாயனாய் இருப்பதனால் |
| யா | யாதொரு | | |
| இயம் சரணவரணவாக் [அபூத்] | இந்த சரணாகதி வாக்கானது உண்டாயிற்றே | அயம் | இந்த ஸமயமானது |
| தததிகம் ஸுலபம் | அதற்கு மேற்பட்டதாய் ஸுகரமாய் | தவ | உன்னுடைய |
| அபிமதார்த்ததம் | அபேக்ஷிதபலப்ரதமான | தயாயா: அவஸர: | அருள் ப்ரஸரிப்பதற்கு வாய்த்த காலம். |
| கிஞ்சித் ஸாதநம் | யாதொரு ஸாதனமும் | | |

* * * நிரவதிகமான அபராதங்களைப் பண்ணி அநுதாபலேசமுமில்லாதிருந்தேனாகிலும் என் பக்கலிலே சரணவரணவாக் கொன்றுண்டிறே ; அதுதான் அபுத்தி பூர்விகையே யாகிலும் ஏதேனுமொரு வ்யாஜமாத்ரத்தையே போரப் பொலியப் பெருக்கிக் கனக்கக் கார்யம் செய்யுமவரான தேவரீருக்கு அது தன்னை ஒரு பற்றாகக் கொள்ள விரகுண்டே, அப்படியே கொண்டு இவ்வளவிலே க்ருபையைப் புகவிடப் பாரீர் என்கிறார்.

'சரணவரண வாக்குத்தானும் அபுத்திபூர்வகமென்றீர். அநுதாபலேசமுமில்லை யென்றீர். ஸுக்ருத ஸுகுணாதிகளுக்கு ப்ரஸக்தியே யில்லையென்றீர். இவ்வளவிலும் தயை பண்ண வேண்டுமென்று மாத்திரம் வடிம்பிடாநின்றீர். இது எங்ஙனேயாவது? நாம் தயை பண்ணும் போதைக்கு உம் பக்கலிலே ஏதேனுமொரு கைம்முதலுண்டாகவேணுமே; அது ஒன்று மின்றியே தயை பண்ணிறோமாகில் இந்த தயை ஸார்வத்ரிகமாக வேண்டிவருமே; உம்பக்கலிலே ஏதேனுமொரு கைம்முதலுண்டாகில் சொல்லிக்காணீர்' என்று பேரருளாளன் திருவுள்ளமாக; தேவரீர் ஸித்தோபாயமாயிருந்து வைத்து என் தலையில் சில உண்டோவென்று பார்க்கை சாலவழகியதாயிருந்ததி! என் பக்கலிலேயும் ஸாதனமென்று பேரிடலாவதொன்று காணக்கிடைக்கவேணுமென்று தேவரீருக்கு நிர்ப்பந்தமுண்டாகில், கீழ்ச்சொன்ன சரணவரண வாக்கு தன்னையே அவலம்பமாகக் கொள்ளலாமே. அதற்கு மேற்பட்டதொரு ஸாதனம் என்னளவிலே கிடையாது; யாத்ருச்சிகமாகத் தோன்றிய இந்த சரணவரண வாக்கையும் காற்கடைக் கொண்டு இதிலும் விஞ்சியதொரு ஸாதனம் என்னளவிலே யுண்டாகவேணுமென்று விரும்பிற்றாகில் அந்த விருப்பம் பழுதா யொழியுமத்தனை. பின்பு அருளுக்கு அவகாசம் கிடையாதே. 'ப்ராப்தமான ஸமயத்தையும் இழந்தோமே!' என்று தேவரீர் பச்சாத்தபிக்கவிறே புகுகிறீர்; அது வேண்டாகாணும், இந்த சரணவரண வாங்மாத்ரத்தையே அலப்யலாபமாகக்கொண்டு என்னை வலையுளகப்படுத்தப் பாரீர் என்கிறார். .... ... ... ... ... (86)

**विषयविषयिणी स्पृहा भूयसी तव तु चरणयोर्न साऽल्पापि मे।**
**वरद! ननु भरस्तवैव त्वयं यदुत तव पदस्पृहाजन्म मे ॥ ८७ ॥**

**விஷயவிஷயிணீ ஸ்ப்ருஹா பூயஸீ தவ து சரணயோர் ந ஸால்பாபி மே।**
**வரத நநு பரஸ் தவைவ த்வயம் யதுத தவ பதஸ்ப்ருஹாஜந்ம மே ॥ 87 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரத | ஓ வரதனே! | ஸா | அந்த ஆசையானது |
| மே | அடியேனுக்கு | அல்பாபி ந | சிறுதுமில்லை, |
| **விஷயவிஷயிணீ** | சப்தாதி விஷயங்களைப் பற்றிய | தவ பதஸ்ப்ருஹா ஜந்ம இதி யதுத | உன் திருவடிகளில் [எனக்கு] அன்பை யுண்டாக்குவ தென்பது யாதொன்றுண்டோ |
| **ஸ்ப்ருஹா** | ஆசையானது | அயம் | இதுவானது |
| **பூயஸீ** | மிகவும் அதிகமானது; | தவைவ | உனக்கே |
| **தவ** | உன்னுடைய | பரோ நநு | தலைச்சுமைகிடாய். |
| **சரணயோஸ்து** | திருவடிகளிலோ | | |

* * * பேரருளாளனுடைய திருவருள் தவிர வேறொரு உபாயமும் தமக்கில்லாமையை இவ்வளவும்வர வெளியிட்டான பின்பு த்வயத்திலுத்தர கண்டார்த்தமான கைங்கர்ய ப்ரார்த்தனையைப் பண்ணியருள விரும்பி, ருசிமுன்னாகச் செய்யும் கைங்கர்யமே ரஸிக்குமாகையாலும் அந்த ருசிதானும் எம்பெருமான் தலையாலே வரக்கடவதென்று அத்யவஸித்திருக்கையாலும் போஜனத்துக்கு க்ஷுத்துப்போலேயான அந்த ருசியை விளைத்தருள்வதும் அத்தலைக்கே பரமென்கிறார்.

[ஹே வரத! விஷயவிஷயிணீ ஸ்ப்ருஹா பூயஸீ] சப்தாதி விஷயங்களிலே எனக்கு விளைகின்ற விருப்பம் அபரிச்சிந்நமாயிரா நின்றதீ! அவ்விஷயங்கள் அபரிச்சிந்நமாயிருக்கிறப்போலே அவற்றைப் பற்றின ஆசையும் அபரிச்சிந்நமாயிரா நின்றதாய்த்து. 'கோவாயைவரென் மெய்குடியேறிக்கூறைசோறிவைதாவென்று குமைத்துப் போகார், நானவரைப் பொறுக்ககிலேன் புனிதா' என்கிறார் போலும். [தவ சரணயோஸ்து ஸா ஸ்ப்ருஹா அல்பாபி ந], தேவரீருடைய திருவடித்தாமரைகளிலே எள்ளளவு காதலுண்டாயினும் கனத்த பேறு பெறலாமாயிருக்க, அந்தோ! ஸ்ப்ருஹாலேசமு முண்டாகப் பெற்றிலேன்.

'விஷயக்ராமங்களிலே விருப்பம் மீதூர்ந்து செல்லாநின்றதாகில் என்னை நீர் செய்யச் சொல்லுகிறதென்? * உண்டியே உடையே உகந்தோடித் திரிவாரோடே நீருமொருவராய்த் திரிந்து போது போக்கும்; என்பாடே வருகைக்கு ப்ரயோஜனமென்?' என்று பேரருளாளன் திருவுள்ளமாக; இப்படி

அடியேனைக் கைவிடலாகாது; விஷய க்ராமங்களிலே விருப்பத்தை வேரறுத்து தேவரீரளவிலே அது பெருகும்படி செய்தருள வேண்டுவது தேவரீருக்கே பரமன்றோ? ஆகையாலே தேவரீருடைய பாதார விந்த விஷயகமானஸ்ப்ருஹையை தேவரீர் தாமே விளைந்தருள வேணுமென்கிறார். * காதல் கடல் புரைய விளைவித்தகாரமர்மேனியிறே.

மூன்றாவதடியின் முதலில் 'அயம்' என்றது (புல்லிங்கநிர்தேசம் பண்ணினது). —பர: என்ற விதேயபதத்தில் நோக்காலே. ... ... ... ... (87)

**इयमिह मतिरस्मदुज्जीवनी वरद! तव खलु प्रसादादृते।**
**शरणमिति वचोऽपि मे नोदियात् त्वमसि मयि ततः प्रसादोन्मुखः॥ ८८॥**

**இயமிஹ மதிரஸ்மதுஜ்ஜீவநீ வரத தவ கலு ப்ரஸாதாத்ருதே।**
**சரணமிதி வசோபி மே நோதியாத் த்வமஸி மயி தத: ப்ரஸாதோந்முக: । 88 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத | வரதனே! | த்வம் | நீ |
| மே | [விஷயாநுரக்தனான] எனக்கு | மயி | அடியேனளவில் |
| சரணம் இதி வசோபி | சரணமென்கிற வாங் மாத்ரமும் | ப்ரஸாத உந்முக: | அநுக்ரஹத்தில் ஊக்க முடையவனாய் |
| தவ ப்ரஸாதாத் ருதே | உனது அநுக்கிரஹந்தாலன்றி | அஸி | ஆகிநின்றாய்; |
| நோதியாத் கலு | உண்டாக மாட்டாதிறே; | [இதி] இயம் மதி: | என்கிற இந்த புத்தியானது |
| தத: | ஆகையினாலே [த்வதநுக்ரஹைக ஜந்யமான சரணவரணவாக் குண்டானதால்] | இஹ | இப்போது |
| | | அஸ்மதுஜ்ஜீவநீ | அடியோமுக்கு உஜ்ஜீவநத்துக் குறுப்பு. |

கீழ் ச்லோகத்திலே ப்ரார்த்தித்தபடியே தேவரீர் அடியேனுக்கு ஸ்வசரணாரவிந்த பரிசர்யா விஷய மான ருசியை விளை வியாதொழி யினும் அடியேன் உய்ந்து போக ஒரு விரகுண்டு என்கிறார்.

[ஹே வரத! மே தவ ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி நோதியாத்; தத: த்வம் மயி ப்ரஸா தோந்முகோஸி இதீயம் மதி: இஹ அஸ்மதுஜ்ஜீவநீ]. விஷயாந்தரமொழிய வேறொன்று மறியாத வெனக்கு தேவரீருடைய அநுக்ரஹமில்லாவிடில் 'வரத! சரணமித்யஹம் த்வாம் வ்ருணே' என்ற வாசக மும் வெளிவரமாட்டாதிறே. [தத:] பகவதநுக்ரஹைக ஹேதுகமான சரணவசஸ்ஸு அடியேன் பக்கலி லேயுண்டாயிருக்கக் காண்கையாலே யென்கை. [த்வம் மயி ப்ரஸாதோந்முகோஸி] கார்யத்தைக் கொண்டு காரணத்தை ஸித்தவத்கரிக்கவேண்டுமித்தனையிறே. என்னுடைய நினைவின்றிக்கே என் வாயில்] சரணமென்ற வசஸ்ஸு உண்டாகக் காண்கையாலே தேவரீர் அநுக்ரஹாபிமுகராயிருக்கிற தென்னுமிடம் நிர்ச்சிதம். [இயம் மதி: அஸ்மதுஜ்ஜீவநீ] பவதநுக்ரஹத்துக்கும் அடியேனுடைய சரணவசஸ் ஸுக்கும் கார்யகாரண பாவம் கொள்ளுகையாகிற இந்த அத்யவஸாயம் என் பக்கலிலே யுண்டான பின்பு இனியுஜ்ஜீவிக்கக் குறையுண்டோ?—சரணவசஸ்ஸு ஜநிக்கும்படி அநுக்ரஹித்தருளின தேவரீரே மேலுள்ளவற்றையும் அநுக்ரஹிந்தருளக்கடவீராயிருக்க நானிருந்து கரைய ப்ராப்தியுண்டோ வென்றபடி. 'ஏதாவதிம் கமயிது: பதவீம் தயாலோ:, சேஷாத்வலேச நயநே க இவாதி பார:' என்னுமாபோலே.

[ப்ரஸாதாத்ருதே] என்ற விடத்தில் 'ருதே' என்றது விநா என்றபடி. .... (88)

**वरद यदिह वस्तु वाञ्छाम्यहं तव चरणभावविरोधस्ततः।**
**यदि न भवति तत् प्रदेहि प्रभो! झटिति वितर पादमेवान्यथा॥ ८९॥**

**வரத யதிஹ வஸ்து வாஞ்சாம்யஹம் தவ சரணலபாவிரோதஸ் தத:।**
**யதி ந பவதி தத் ப்ரதேஹி ப்ரபோ ஜடிதி விதர பாதமேவாந்யதா ॥ 89 ॥**

| | | | |
|---|---|---|---|
| ஹே வரத ப்ரபோ | வரதராஜனே ! | ந பவதி யதி | உண்டாக மாட்டாதாகில் |
| அஹம் | அடியேன் | தத் | அந்த வஸ்துவை |
| இஹ | இங்கே | ப்ரதேஹி | தந்தருள் : |
| யத் வஸ்து | யாதொரு வஸ்துவை | அந்யதா | நான் ஒரு வஸ்துவை விரும்புமது உன்பதகமல ப்ராபதிக்கு ப்ரதி பந்தக மாகுமாகில் |
| வாஞ்சாமி | விரும்புகிறேனே | | |
| ததஃ | அந்த வஸ்துவாஞ்சையினல் | | |
| தவ சரண லபாவிரோதஃ | உனது திருவடிகளைப் பெறுவதற்கு ப்ரதிபந்தமானது | பாதமேவ | திருவடியே |
| | | ஜடிதி விதா | உடனே தந்தருள். |

* * * சோழராஜனுடைய கொடுமையினல் திருக்கண்களை யிழந்த ஆழ்வான் எம்பெருமானுருடைய நியமனத்தினல் திருக்கண் பெறுதற்காக இந்த ஸ்தவம் அருளிச்செய்கிறராகையாலே அந்த ப்ரார்த்தனைக்கு உபோத்காதமாயிராநின்றதாய்த்து இந்த ச்லோகம்.

'நீலமேகநிபம்' என்கிற ச்லோகமருளிச் செய்தபோதே அப்ராக்ருத திவ்ய சக்ஷுஸ்ஸை அநந்யஸாமான்யமாக அநுக்ரஹித்தருளப் பெற்ற விவர் தம் வாயாலே மாம்ஸசக்ஷுஸ்ஸைத் தா வென்று நேர்கொடுநேரே ப்ரார்த்திக்கமாட்டாமையாலே அந்த ப்ரார்த்தனையைத் திருவுள்ளத்திலே யடக்கி வ்யங்க்யமர்யாதையிலே பாசுரமிடுகிறர். [ஹே வரதப்ரபோ ! இஹ யத்வஸ்து அஹம் வாஞ்சாமி ததஃ [தேந வஸ்துநா] தவ சரணலபாவிரோதோ ந பவதி யதி, தத் வஸ்து ப்ரதேஹி ; அந்யதா [தேந வஸ்துநா தவ சரணலபாவிரோதோ பவேத் யதி] பாதமேவ விதர] வாரீர் பேரருளாளப் பெருமாளே ! அடியேன் யாதொரு விஷயத்தை இப்போது தேவரீர் பக்கலில் யாசியாநின்றேனே அவ்விஷயம் தேவரீருடைய திருவடித் தாமரைகளின் ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமாக முடியாதிருக்குமாகில் அவ்விஷயத்தை அடியேனுக்குத் தந்தருள வேணும். இங்ஙனன்றிக்கே அடியேன் ப்ரார்த்திக்கும் வஸ்து தேவரீருடைய பாதகமல ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமாகத் தலைக்கட்டுமாகில் அடியேனுடைய ப்ரார்த்தனையை மறுத்து சடக்கென அடியேனைத் திருவடி சேர்த்துக் கொள்ளவேணுமென்கிறர். இவர் தாம் ப்ரார்த்திக்கும் வஸ்து இன்ன தென்று விசிஷ்ய நிர்தேசியாதே யத்தச் சப்தங்களையிட்டுப் பாசுர மிடுகிறர் காணும் மாம்ஸசக்ஷுஸ்ஸாகிற க்ஷுத்ரப்ரயோஜனத்தில் விருப்பத்தைத் தம் திருவாயாலே வெளியிடக்கூசி.

'தச்ச தேஹி' என்றும் பாடமுண்டு. ... ... ... ... (89)

**तदपि किमपि हन्त दुर्वासनाशतविवशतया यदभ्यर्थये ।**
**तदतुलदय सार्व सर्वप्रद प्रवितर वरद क्षमांभोनिधे ! ॥ ९० ॥**

**ததபி கிமபி ஹந்த துர்வாஸநாசதவிவசதயா யதப்யர்த்தயே ।**
**ததுலதய ஸார்வ ஸர்வப்ரத ப்ரவிதர வரத । க்ஷமாம்போநிதே ॥ 90 ॥**

| | | | |
|---|---|---|---|
| அதுலதய | ஒப்பற்ற அருளை யுடையவனே ! | [அஹம்] | அடியேன் |
| க்ஷமாம்போநிதே | பொறுமைக் கடலே ! | துர்வாஸனநாசத விவசதயா | பல பல துர்வாஸனைகளுக்கு வசப் பட்டிருப்பதனல் |
| ஸார்வ | ஸர்வஜனஹிதனே ! | | |
| ஸர்வப்ரத | எல்லாவற்றையும் கொடுப்பவனே ! | யத் கிமபி | ஏதோ வொன்றை |
| வரத | [அது தோன்ற] வரதனென்ற திருநாமம் பூண்டவனே ! | அப்யர்த்தயே | ப்ரார்த்திக்கிறேன் ; |
| | | தத் ப்ரவிதர | அதைக் கொடுத்தருள். |
| ததபி | ஆனபோதிலும் | | |

* * * மாம்ஸசக்ஷுః ப்ராப்தியிலே தமக்கு விருப்பமில்லாமை தோற்ற வருளிச் செய்தார் கீழ். அது எம்பெருமானர் திருவுள்ளத்துக்குக் காலுஷ்யஹேதுவா யிருக்குமென்று அஞ்சி அந்த ப்ரார்த்தனையிலே அபேக்ஷை தோற்ற அருளிச் செய்கிறரிதில்,

[ததபி] ததாபி என்றபடி. அதாவது—ஔசித்யத்தை ஆராய்ந்து தேவரீர் திருவுள்ளமானபடி செய்வதென்று கீழ் ச்லோகத்திலே அடியேன் விஜ்ஞாபித்திருக்கச் செய்தேயும் என்கை. துர்வாஸநா சதவிவசதயா யத்கிமப்யப்யர்த்தயே] ஐஹிகத்தில் பண்ணிப் போந்த துர்வாஸநா தார்ட்யத்தாலே ப்ராப்தாப்ராப்த விவேகம் பண்ணாதே யாதொரு பேற்றை அடியேன் விரும்பா நின்றேன். [ஹே வரத தத் ப்ரவிதர] தேவரீர் அதுதன்னைத் தந்தருளவேணும். [அதுலதய] தேவரீர் பேரருளாளப் பெருமாளல் லீரோ ? [ஸார்வ] ஸர்வஜனங்களோடும் ஸம்பந்தம் அவிசிஷ்டமன்றோவுமக்கு. [ஸர்வப்ரத] ஸர்வஸ்வ தாதாவென்று ப்ரஸித்திபெற்றுள்ளவுமக்கு இத்தனையும் செய்ய வடுக்குமே. [ப்ரவிதர வரத] தயா நிதியாய் ஸர்வஜநஸம்பந்தியாய் ஸர்வஸ்வதாதாவாய் திருநாமத்தாலும் வரதனாய் விளங்குகின்ற தேவரீர் கொடுத்தே தீரவேண்டுமென்கிறார். [க்ஷமாம்போநிதே] அடியேன் இங்ஙனே நிர்பந்தித்துக் கேட்பது அபசாரமேயாகிலும் க்ஷமாஸாகரரானவுமக்கு க்ஷமிக்க ப்ராப்தியுண்டாயிருக்க, நான் கேட்கத் தட்டென் ? நீர் கொடுக்கத் தட்டென் ? என்கிறார். ... .... ... ... (90)

**प्रियमितरद्यथापि वा यद्यथा वितरसि वरद प्रभो त्वं हि मे ।**
**तदनुभवनमेव युक्तं हि मे त्वयि निहितभरोऽस्मि सोऽहं यतः ॥ ९१ ॥**

**ப்ரியமிதரத ததாபி வா யத் யதா விதரஸி வரத ப்ரபோ த்வம் ஹி மே।**
**தததுபவநமேவ யுக்தம் ஹி மே த்வயி நிஹிதபரோஸ்மி ஸோஹம் யதঃ ॥ 91 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரத ப்ரபோ | வரதராஜனே ! | விதரஸி | கொடுத்தருள்கிறாயோ |
| **அதாபி வா** | இப்படி யடியேன் ப்ரார்த்தித்த போதிலும் | [ததா] | அப்படியே |
| **த்வம்** | ஸ்வதந்த்ரனான நீ | தததுபவநமேவஹி | **அதை**யநுபவிப்பதேயன்றோ |
| ப்ரியம் | இஷ்டமானதோ | மே | பரதந்த்ரனான எனக்கு |
| **இதரத் வா** | **அனிஷ்ட**மானதோ [ஹிதமான தையோ] | யுக்தம் | தகுந்தது ; |
| யத் | யாதொன்றை | யதঃ | ஏனென்றால் |
| யதா | எப்படி | ஸோஹம் | அடியேன் |
| மே | என்க்கு | த்வயி | உன் பக்கலில் |
| | | நிஹிதபரோஸ்மி | பரஸமர்ப்பணம் பண்ணிக் கிடக்கி றேனிறே. |

* * * பகவதி ந்யஸ்தபரரான தம்முடைய ஸ்வரூபத்திற்கும் குலைதல் வாராதபடி பேசவேணுமிறே; அப்படிப் பேசுகிறாரிதில்.

தேவரீர் அடியேனுக்கு ப்ரியமானதைத் தந்தருளவுமாம்; அப்ரியமானதைத் தந்தருளவுமாம் ; நிரங்குசஸ்வதந்த்ரரான தேவரீரை வடிம்பிடுவதற்கு அடியேன் அதிகாரியல்லேனிறே. தேவரீரிடத்தில் ந்யஸ்தஸமஸ்தாத்மபரனான அடியேன் எவ்வளவுக்கு அதிகாரியென்னில், தேவரீருடைய திருவுள்ளத் தாலே ப்ரியமென்றோ ஹிதமென்றோ நினைத்துத் தந்தருளுமதை அநுபவிக்கு மத்தனையேயிறே எனக் குற்றதென்றாராயிற்று. ... ... ... ... (91)

**यथाऽसि यावानसि योऽसि यद्गुणः करीश ! यादृग्विभवो यदिङ्गितः ।**
**तथाविधं त्वाऽहमभक्तदुर्ग्रहं प्रपत्तिवाचैव निरीक्षितुं वृणे ॥ ९२ ॥**

**யதாஸி யாவாநஸி யோஸி யத்குணঃ கரீச யாத்ருக்விபவோ யதிங்கிதঃ।**
**ததாவிதம் த்வாஹமபக்ததுர்க்ரஹம் ப்ரபத்திவாசைவ நிரீக்ஷிதும் வ்ருணே ॥ 92 ॥**

| | | | |
|---|---|---|---|
| கரீச | ஹஸ்திகிரிநாதனே ! | யத்குணঃ | எந்த குணங்களுடையவனோ |
| த்வம் | நீ | யதா அஸி | யாதொரு ப்ரகாரத்தை யுடையவனோ |
| யோஸி | எவனாயிருக்கிறாயோ | யாவாந் அஸி | எவ்வளவனாயிருக்கிறாயோ |

| | | | |
|---|---|---|---|
| யாத்ருக் விபவோஸி | எப்படிப்பட்ட விபவத்தையுடையனுயிருக்கிருயோ | அபக்த துர்க்ரஹம் | பக்தர்களுக்கன்றி மற்றையோர்க்கு அரியனுன |
| | | த்வா | உன்னை |
| யதிங்கித: அஸி | எந்த வ்யாபாரத்தை யுடையவனு யிருக்கிருயோ, | ப்ரபத்திவாசைவ | சரண மென்கிற வார்த்தையால் |
| | | நிரீக்ஷிதும் | ஸாக்ஷாத்கரிக்க |
| ததாவிதம் | அப்படிப்பட்டவனுய் | அஹம் வ்ருணே | அடியேன் விரும்புகின்றேன். |

* * * த்வயத்தில் உத்தர கண்டத்திலுள்ள நமச்சப்தத்தின் அர்த்தாநுஸந்தானமாக பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூப ஸ்வரூபத்தைக் கீழ் தசகத்திலே ப்ரதிபாதித்தவநந்தரம் 'நாராயணுய' என்ற சதுர்த்தியின் அர்த்தமான கைங்கர்ய ப்ரார்த்தனையை இந்த தசகத்திலே செய்தருளி ஸ்தவத்தை நிகமிக்கிருர்.

அதில் இந்த ச்லோகத்தில்:—ஸவிபூதிகனுன வுன்னைக் குறையற ஸாக்ஷாத்கரிக்கவல்லேனும்படி அருள் செய்ய வேணுமென்கிருர். [ஹே கரீச! த்வம் யோஸி யத் குணோஸி யதாஸி யாவாநஸி யாத்ருக் விபவோஸி யதிங்கிதோஸி; ததாவிதம் அபக்த தூர்ச்ரஹம் த்வா அஹம் ப்ரபத்தி வாசைவ நிரீக்ஷிதும் வ்ருணே]—[யோஸி] 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' என்றும் 'ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ' என்றும் சுடர் மிகு சுருதிகள் சொல்லுகிறபடியே ஸத்யத்வ ஜ்ஞாநத்வ அநந்தத்வ ஆநந்தத்வ அமலத்வ ச்ரிய:பதித்வாதிகளாகிற யாவை சில ஸ்வரூப நிருபக குணங்களாலே நிருபிதனுயிராநின்ருயோ. [யத்குணோஸி] 'பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ருயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச' என்கிறபடியே ஜ்ஞாநசக்த்யாதிகளாகிற யாவை சில கல்யாண குணங்களோடே கூடியிரா நின்ருயோ. [யதாஸி] 'யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத் ப்ரயந்த்யபி ஸம்விசந்தி' இத்யாத்யுக் தமாய் ஜகஜ்ஜந்மாதிகாரணத்வாதிருபங்களான யாவை சில ப்ரகாரங்களை யுடையையாய் இராநின்ருயோ; [யாவாநஸி] 'அணோரணீயாந் மஹதோ மஹீயாந்' 'அந்தர்பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்த்தித:' இத்யாத்யுக்த—யாவத்பரிமாணவிசிஷ்டனுயிரா நின்ருயோ; [யாத்ருக் விபவோஸி]' பதிம் விச்வஸ்யாத்மேச்வரம் சாச்வதம் சிவமச்யுதம்' 'தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்' இத்யாத்யுக்த மான யாத்ருகைச்வர்யத்தோடே கூடியிரா நின்ருயோ; [யதிங்கிதோஸி] 'அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா' இத்யாத்யுக்த சேதநாசேதந நியமனுதி ரூபமான யாத்ருசவ்யாபாரத்தை யுடையையாயிரா நின்ருயோ. [ததாவிதம்] அந்த ஸ்வரூப குண ப்ரகார பரிமாண விபவ சேஷ்டித விசிஷ்டனுன வென்றபடி. [அபக்த துர்க்ரஹம்] 'பத்துடையடியவர்க்கெளியவன்' என்னுமிடத்தை வ்யதிரேகோக்தியாலே அருளிச்செய்கிறபடி. எத்தனை சாஸ்த்ர ஜ்ஞான மிருந்தாலும் பக்தி யில்லாத வன்று துர்க்ரஹனுயிறே எம்பெருமானிருப்பது: 'பக்த்யா சாஸ்த்ராத்வேத்மி ஜநார்த்தநம்' என்ருனிறே ஸஞ்சயன். [த்வா] இப்படிப்பட்டவுன்னை [ப்ரபத்தி வாசைவ நிரீக்ஷிதும் வ்ருணே] வாங்மாத்ரமான ப்ரபதனத்தாலேயே ஸாக்ஷாத்கரிக்க விரும்புகிறேன். உன்னுடைய ஸ்வரூபத்திலும் குணத்திலும் ப்ரகாரத்திலும் பரிமாணத்திலும் விபவத்திலும் சேஷ்டிதத்திலும் ஆக எல்லாவற்றிலும் சிறிதும் குறையாமே பரிபூர்த்தியாக வுன்னை ஸாக்ஷாத்கரிக்கப் பாரித்திருக்கிறேனென்கை. இவ்வளவு பாரிப்புக்கும் கைம்முதல் 'வரதமுருதயம் கதிம் த்வாம் வ்ருணே' என்னப்பட்ட வாசிக ப்ரபத்தியே காணென்கிருர். அடியேனுடைய ஆகிஞ்சந்யத்தையும் த்வதேகோபாயத்வத்தையும் அறுதியிட்டுச் சொன்ன வெனக்கு உன்னுடைய ஸ்வரூப குணுதிகளை நீயே கேவல க்ருபா மாத்ரத்தாலே ஸாக்ஷாத்கரிப்பித்தருள வேணு மென்று கருத்து.

'யதாஸி' என்பதற்கு 'ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்' 'ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷ: த்ருச்யதே' இத்யாத்யுக்த யாத்ருச விக்ரஹ விசிஷ்டனுயிராநின்ருயோ—என்றும் பொரு ளாகலாம். 'யதிங்கித:' என்ற விடத்திலே இங்கித சப்தார்த்தம் மத்ஸ்ய கூர்மாத்யவதாரசேஷ்டி தங்களாகவுமாம். வ்ருணே—இச்சாமீத்யர்த்த: ||

இந்த ச்லோகம் முதல் ஸமாஹிதை: என்னும் ச்லோகமளவாகவுள்ள தசகம் வம்சஸ்த்தவ்ருத்தம்.

... ... ... ... ... ... ... ... ... (92)

**अये दयालो वरद क्षमानिधे विशेषतो विश्वजनीन विश्वद ।**
**हितज्ञ सर्वज्ञ समग्रशक्तिक प्रसह्य मां प्रापय दास्यमेव ते ॥ ९३ ॥**

**அயே தயாளோ வரத க்ஷமாநிதே விசேஷதோ விச்வஜநீந விச்வத !**
**ஹிதஜ்ஞ ஸர்வஜ்ஞ ஸமக்ரசக்திக ப்ரஸஹ்ய மாம் ப்ராபய தாஸ்யமேவ தே ॥ 93 ॥**

| | | | |
|---|---|---|---|
| தயாளோ | பேரருளாளனே ! | ஸமக்ரசக்திக | பரிபூர்ண சக்தி யுடையவனே ! |
| க்ஷமாநிதே | பொறுமைக்கு நிதியே ! | அயே வரத | வரந்தரும் பெருமாளென்ற திரு நாமமுடையவனே ! |
| விசேஷதஃ | மிகவும் | | |
| விச்வஜநீந | ஸகல ஜனங்களுக்கும் ஹிதனே ! | மாம் தே தாஸ்யமேவ | அடியேனுக்கு உன்னடிமைத் திறத்தையே |
| விச்வத | எல்லாவற்றையும் தந்தருள்பவனே | | |
| ஹிதஜ்ஞ | [அடியோங்களுக்கு] ஹிதமானவற்றை யறியுமவனே ! | ப்ரஸஹ்ய | எப்படியாவது |
| ஸர்வஜ்ஞ | எல்லாவற்றையு மறிபவனே ! | ப்ராபய | ப்ராப்தமாக்கியருள். |

* * * கீழ் ச்லோகத்திலே 'நிரீக்ஷிதும் வ்ருணே' என்று ஸாக்ஷாத்கார மாத்ரத்தில்விருப்பத்தையருளிச் செய்தார். அவ்வளவிலே பர்யாப்தி பெறவொண்ணுமோ? 'கண்டேன் கமல மலர்ப் பாதம்' என்றால் அதற்கு அடுத்தபடியாக 'தொண்டே செய்தென்றும் தொழுது வழி யொழுக' என்கையிறே முறை. அப்படியே இவரும் ஸாக்ஷாத்காராநந்தர பாவியான கைங்கர்ய புருஷார்த்தத்தை ப்ரார்த்திக்கிறாரிந்த ச்லோகத்தில்.

[தயாளோ] பிறர் படும் துக்கத்தைக் கண்டு ஸஹித்திருக்கும் வன்மை தேவரீருக் குண்டாகிலன்றோ இன்னுமடியேனை துக்கியாகவே வைத்திருக்க வொண்ணும்; சரீரத்துக் குண்டாமது சரீரிக்காகிறாப்போலே நான் படும் துக்கம் தேவரீருடையதான பின்பு இனி ஆறியிருக்கிறதென்? என்கிறார். பரதுக்கதுக்கியிறே தயாளுவெனப்படுவான்.

[வரத] அடியேனுக்கு இததனையும் செய்யத் திருவுள்ளமில்லை யாகில் தேவரீருடைய வரதத்வம் என்னாய்த்து? மாம்பழவுண்ணி யென்னுமாபோலேயோ தேவரீர் வரதரென்று திருநாமம் வஹிப்பது?

[க்ஷமாநிதே] அடியேனுடைய பூர்வாகங்களையே நோக்கி நிக்ரஹிக்கத் திருவுள்ளமாகில் க்ஷமாகுணம் விலைச்செல்வது எங்கேயோ? 'கல்பகோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே' என்ற தீர்க்க நிக்ரஹத்தை அடியேனளவில் பலிப்பிக்கத் திருவுள்ளமாகில் பேரருளாளனென்றும் வரதனென்றும் பூண்ட திருநாமங்கள் சால அழகியதாய்த் தலைக்கட்டுமாகாதே! க்ஷமாகுணத்துக்கு ஜலாஞ்ஜலியாமத்தனையோ?

[விசேஷதோ விச்வஜநீந] ஸர்வ ஜனங்களுக்கும் ஹிதைஷியாயிருந்து வைத்து அடியேனொருத்தன் திறத்திலே அந்த ஹிதைஷித்வம் வேர் பறியுண்டதோ? இவற்றின் புறத்தாளென்றெண்ணோ? என்னுமாபோலே விச்வத்தில் பஹிர்பூதனோ அடியேன்? 'ஸ்வஜநஸ்ய சரக்ஷிதா' என்றது கழிந்தால் 'ரக்ஷிதா ஜீவலோகஸ்ய' என்ற ஊர்ப்பொதுவும் கழியவேணுமோ தான்! 'க்ஷமாநிதே விசேஷதஃ' என்னும்போது அகாரம் ப்ரச்லிஷ்டமாய்க் கிடக்கிறது காண் என்று ஓரடைவிலே அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்யக் கேட்டிருக்கை. அதாவது—'அவிசேஷதஃ' என்று பதச்சேதம் திருவுள்ளமானபடி. கத்யத்திலே 'அநாலோசித விசேஷா சேஷ லோகசரண்ய' என்ற அர்த்தம் போதிந்து கிடக்கிறபடி. அவிசேஷத:—இன்னாரினையாரென்று வாசி பாராதே. [வஸிஷ்ட சண்டால விபாகம் பாராதே] அனைவர்க்கும் இருந்ததே குடியாக ஹிதனானவனே! என்கை.

[விச்வத]—'எனக்கே தன்னைத் தந்த கற்பகம்' என்கிறபடியே புறம்புண்டானவற்றையடையக் கொடுத்துத் தம்மையும் கொடுப்பவரல்லீரோ?

[ஹிதஜ்ஞ] *உண்ணிலாவிய ஐவரால் குமைதீற்றி என்னை யுன் பாத பங்கயம் நண்ணிலா வகையே நலியப் பார்த்திருக்கையோ அடியேனுக்கு தேவரீர் அறிந்து வைத்த ஹிதம்.

[ஸர்வஜ்ஞ] இதெல்லாம் அடியேன் உணர்த்த உணரவேண்டும்படியோ தேவரீருடைய அறிவு இருப்பது. அடியேனுடைய ஆற்றாமையின் கனத்தாலே சொல்லிக்கொடு நின்றேனத்தனை போக்கி தேவரீரறியாததுண்டோ? * உட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து விளங்குகின்ற என்னார்த்தியை யறியீரோ? * உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிவீராயினும் பாசுரம் கேட்டவாறே திருவுள்ள முகக்குமென்றன்றோ அடியேன் பிதற்றுவது.

[ஸமக்ர சக்திக] தேவரீருக்கு சக்திவைகல்யமுண்டென்று அடியேன் அறிந்திருக்கவோ? இரும்பைப் பொன்னாக்க வல்லீரிறே. [தே தாஸ்யமேவ மாம் ப்ராபய.] ப்ரக்ருதி பாரவச்யத்தாலே அடியேனுக்கு க்ஷுத்ர பலாந்தரங்களிலே ருசியுண்டானாலும் அந்த ருசியைத் தொலைத்து தேவரீர் திறத்தில் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தையே பெறுவிக்கவேணுமென்றாராயிற்று. .... .... (93)

**स्वकैर्गुणैस्स्वैश्चरितैस्स्ववेदनात् भजन्ति ये त्वां त्वयि भक्तितोऽथवा ।**
**करीश तेषामपि तावकी दया तथात्वकृत् सैव तु मे बलं मतम् ॥ ९४ ॥**

**ஸ்வகைர் குணைஸ் ஸ்வைச் சரிதைஸ் ஸ்வவேதநாத்**
**பஜந்தி யே த்வாம் த்வயி பக்திதோத வா ।**
**கரீச தேஷாமபி தாவகீ தயா**
**ததாத்வக்ருத் ஸைவ து மே பலம் மதம் ॥ 94 ॥**

| | |
|---|---|
| கரீச | கரிகிரி நாதனே ! |
| யே | எந்த சேதனர்கள் |
| ஸ்வகைஃ குணைஃ | தம் குணங்களாலோ |
| ஸ்வைஃ சரிதைஃ | தம் கர்மயோகங்களாலோ |
| ஸ்வவேதநாத் | தம் ஞானயோகத்தாலோ |
| அதவா | அல்லது |
| த்வயி பக்திதஃ | உன்திறத்தில் பக்தியாலோ |
| த்வாம் | உன்னை |
| பஜந்தி | பஜிக்கிறார்களோ |
| தேஷாமபி | அவர்களுக்கும் |
| தாவகீ தயா | உன்னுடையதான தயை |
| ததாத்வக்ருத் | அந்த நித்யகைங்கர்ய நிலைமையை உண்டாக்கவற்று; |
| ஸைவ து தயா | அந்த தயையே யன்றோ |
| மே | அடியேனுக்கும் |
| பலம் | முக்யஸாதனமாக |
| மதம் | நிச்சிதம்; |

ஆகிஞ்சந்யமே பற்றாசாகப் பணைக்கிற தேவரீருடைய திருவருளல்லது வேறொரு புகலில்லை யென்று பலகாலும் விண்ணப்பம் செய்து வந்தாரிறே இவர் தாம். கைங்கர்யரூப பல ப்ரார்த்தநா தசையிலும் அந்த அத்யவஸாயந் தன்னையே திண்ணிதாக விண்ணப்பம் செய்யவேணுமிறே. அங்ஙனே விண்ணப்பம் செய்கிறாராய்த்து இந்த ச்லோகத்தால்.

[ஸ்வகைர் குணைஃ] 'ஆநுகூல்யஸ்ய ஸங்கல்பஃ ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்' இத்யாதிகளாய் ஆத்மநிக்ஷேப பர்யந்தங்களான குணங்களாலே; ப்ரபத்தி யோகத்தாலே யென்றபடி. அன்றிக்கே, 'மத்பக்தஜநவாத்ஸல்யம் பூஜாயாம் சாநுமோதநம்। மத்கதாச்ரவணே ஸக்திஃ ஸ்வர நேத்ராங்க விக்ரியா ॥ ஸ்வயமப்யர்ச்சநம் சைவ மதர்த்தே டம்பவர்ஜநம்। மமாநுஸ்மரணம் நித்யம் யச்ச மாம் நோபஜீவதி' என்று சொல்லப்பட்ட குணங்களாலே என்னவுமாம். [ஸ்வைச்சரிதைஃ] கர்மயோகத்தாலே யென்கை. 'கர்மயோகஸ்தபஸ்தீர்த்த தாந யஜ்ஞாதி ஸேவநம்' [கீதார்த்த ஸங்க்ரஹே] என்று கர்மயோகத்தில் அவாந்தர பிதைகள் பலவுண்டாகையாலே அத்தைப்பற்ற [சரிதைஃ] என்று பஹுவசன ப்ரயோகம் பண்ணிக்கிடக்கிறது. [ஸ்வவேதநாத்] 'ஜ்ஞாநயோகோ ஜிதக்ரோதைஃ பரிசுத்தாத்மநி ஸ்திதிஃ' என்கிறபடியே ஜிதமநஸ்கர்கள் நிரந்தர சிந்தன ரூபமாக பரிசுத்தாத்மத்யானத்திலே ஊன்றியிருக்கையாகிற ஜ்ஞாநயோகத்தாலே யென்றபடி; தேவரீரளவில் ஐகாந்திகமான ப்ரீதியோடே த்யானார்ச்சநப்ரணாமாதிகளிலே நிலைத்திருக்கையாகிற பக்தியோகத்தாலே யென்றபடி. [கரீச! த்வாம் யே பஜந்தி] கர்மஜ்ஞான பக்தி ப்ரபத்திகளென்கிற யோகங்களில் ஏதேனுமொன்றைப் பற்றி தேவரீரையணுகுவார்

சிலருண்டு. [தேஷாமபி] அவர்களுக்கும் [தாவகீ தயா ததாத்வ க்ருத்] அவரவர்கள் தம் தம் தலையாலே எத்தனை ஆனைத்தொழில்கள் செய்து போந்தாலும் 'ஸ ப்ரீதோலம் பலாய' என்கிறபடியே தேவரீர் திருவுள்ளமுகந்தருளினலல்லது பேறு கைபுகுருகைக்கு ப்ராப்தியில்லையென்னுமிடம் அடியேன் சொல்ல வேணுமோ? க்ஷண பங்குரங்களாயும் அசேதநங்களாயுமுள்ள க்ரியாகலாபங்கள் ஸ்வாதந்தர்யேண பலப்ரதாந சக்தியையுடையனவல்லவே. 'ஐயன் பாழியிலே நிற்கும் ஆனை குதிரைகளும் போர்க்கு உரித்தாமோ?' அந்த அசேதந க்ரியா கலாபங்கள் தேவரீருடைய திருவருளை எதிர்பாராதே பயன் பெறுவிக்க மாட்டாவான பின்பு [ஸைவ து மே பலம் மதம்] அத்திருவருளே அடியேனுக்கு பலமாகத் தட்டுண்டோ? அநந்யதாஸித்தமான உபாயம் ஸித்தமாயிருக்க அந்யதா ஸித்தமான ஸாத்யோபாயங்களிலே புரண்டு புழுதி படக்கை மிகையிறே. ... ... (94)

**यदि त्वभक्तोऽप्यगुणोऽपि निष्क्रियः निरुद्यमो निष्कृतदुष्कृतो न च ।**
**लभेय पादौ वरद स्फुटास्ततः क्षमादयाद्यास्तव मङ्गला गुणाः ॥ ९५ ॥**

**யதி த்வபக்தோப்யகுணோபி நிஷ்க்ரிய꞉ நிருத்யமோ நிஷ்க்ருததுஷ்க்ருதோ ந ச ।**
**லபேய பாதௌ வரத ஸ்புடாஸ் தத꞉ க்ஷமாதயாத்யாஸ் தவ மங்களா குணா꞉ ॥ 95 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரத | வரதனே! | தவ | தேவரீருடைய |
| அபக்தோபி | பக்தி சூன்யனயினும் | பாதௌ | திருவடிகளை |
| அகுணோபி | குண மற்றவனயினும் [ததங்கமான ஞானயோகமு மற்றவனயினும்] | லபேய யதி து | அடைவேனேயாகில் |
| நிஷ்க்ரியோபி | கர்மயோக சூன்யனயினும் | தத꞉ | அதனல் |
| நிருத்யமோபி | ஆநுகூல்யஸங்கல்பரஹிதனயினும் | க்ஷமாதயாத்யா꞉ | பொறுமை, தயை முதலிய |
| ந நிஷ்க்ருத துஷ்க்ருதோபி ச | ப்ராயச்சித்தத்தாலே ஒழிக்கப்படாத பாபங்களை யுடையவனயினும் | தவ மங்களா꞉ குணா꞉ | தேவரீருடைய திருக் கல்யாண குணங்கள் |
| அஹம் | அடியேன் | ஸ்புடா꞉ [பவேயு꞉] | ப்ரகாசமாகும். |

* * * அடியேனை விஷயீகரியாத வளவில் தேவரீருடைய குணங்களெல்லாம் அஸத்ஸமங்களாயொழியுமான பின்பு, தம் பேருக என்னை விஷயீகரித்தருளவேண்டுவது அவர்ஜநீயமென்கிறுர். அடியேனையே பார்க்குமன்று * க்ஷிபாமிக்கும் * ந க்ஷமாமிக்கும் விஷயமாக்க வமையும்; தேவரீரைப் பார்த்தால் என்னை விடும்படியாயிருந்ததோ? விட்டீராகில் உம்முடைய குணங்களுக்கெல்லாம் ஜலாஞ்ஜலியே யாமத்தனையிறே என்கிறுர்.

அடியேனுக்கு பக்தியோகமில்லை, ஜ்ஞானயோகமில்லை கர்மயோகமில்லை, ஆநுகூல்ய ஸங்கல்பமில்லை, ப்ராதிகூல்யவர்ஜநமில்லை, ஒன்றுமில்லை யென்பது ஸத்யம், இப்படியே தேவரீருக்கு க்ஷமையில்லை, தயையில்லை, வாத்ஸல்யமில்லை, ஒரு குணமுமில்லை யென்று சொல்லிவிடக் கூடுமாகில் பாவியேன் எங்ஙனே படுகொலைப் பட்டாலும் படலாமே; தேவரீர் படைத்திருக்கும் குணங்களுக்கு இரைதேடியிடாதே போந்ததாகில் 'ப்ரஹ்மம் நிர்குணம்' என்று பிதற்றின பேதையர்களைப் பெருமைப்படுத்திற்றுமத்தனை போக்கி ஜ்ஞானிகளை டவதரிப்பித்துப் பேசுவித்த பொய்யில் பாடல்களைப் பெருமைப்படுத்திற்றுக விரகில்லையே. உம்முடைய ஸத்தையேகிடீர் அழியப் புகுகிறது. என்னெருவனுடைய ஸத்தையை நோக்குமத்தாலே நீர் ஸத்தை பெறுவீராயிருக்க இழப்பதேன்? நீர் ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிகளெல்லாம் உம்முடைய ஸத்தையை நோக்கிக் கொள்ளுகைக்காமத்தனையிறே. அதற்காக நீர் பட்டபாடுகள் அறிவீறே. அப்பாடெல்லாம் பழுதாயொழியவோ பார்க்கிறது; ஒளியிழந்த மணியும் மணமிழந்த மலரும்போலே பின்னை உம்மை மதிப்பாருண்டோ? நிரூபகமில்லையென்னில் நிருப்யம் தானுண்டோ? மீனுக்குத் தண்ணீர் வார்த்தாற்போலே ஜ்ஞான க்ரியா பஜன ஸம்பத்ஸம்ருத்தர்களையே நீர் நோக்கிப் போந்தீராகில், பெரும்பாடுகள் பட்டு நிலை நிறுத்திக்கொண்ட க்ஷமாதயாதி குணங்களுக்கு விஷயந்தானெங்கே? விஷயம் வாய்த்த போதும் அவை ப்ரஸரித்ததில்லை

யென்னில் ககநாரவிந்த சசவிஷாணாதிகளைப் போலே அவை துச்சம் என்னவேணு மத்தனைபோக்கி அவற்றுக்கு ஸத்பாவம் சொல்லப்போகாதிறே. அவை யில்லையாம்போதைக்கு நீர் தாமில்லை யென்ற தாமே. ஆக, என் ஸத்தையை அழிக்கப் பார்த்தவிது உமக்கு ஸ்வஸத்தா நாசகமாய்த் தலைக்கட்டுமான பின்பு, கடுக வடியேனுக்கு புருஷார்த்தம் பெறுவிப்பதே பாங்கு என்கிறார்.

**हे वरद ! यद्यप्यहम् अभक्तः, अगुणः, निष्क्रियः, निरुद्यमश्च भवामि; निष्कृतदुष्कृतश्च न भवामि। तथापि तव पादौ लभेय यदि ततः क्षमादयाद्याः तव मङ्गला गुणाः स्फुटा भवेयुः** (95)
என்றும் யோஜிக்கலாம். ... ... ... ... ...

**विलोकनैर्विभ्रमणैरपि भ्रुवोः स्मितामृतैरिङ्गितमङ्गलैरपि ।**
**प्रचोदितस्ते वरद प्रहृष्टधीः कदा विधास्ये वरिवस्यनं तव ॥ ९६ ॥**

**விலோகனைர் விப்ரமணைரபி ப்ருவோ: ஸ்மிதாம்ருதைரிங்கிதமங்களைரபி ।**
**ப்ரசோதிதஸ் தே வரத ப்ரஹ்ருஷ்டதீ: கதா விதாஸ்யே வரிவஸ்யநம் தவ ॥ 96 ॥**

| | |
|---|---|
| வரத | வரதனே ! |
| தே விலோகனை: | உனது கடாக்ஷவீக்ஷணங்களாலும் |
| ப்ருவோ: | திருப்புருவங்களினுடைய |
| விப்ரமணைரபி | விலாஸங்களாலும் |
| ஸ்மிதாம்ருதை: | பரமபோக்யமான புன்முறுவலாலும் |
| இங்கிதமங்களைரபி | அழகான இங்கிதங்களாலும் |
| அஹம் ப்ரசோதித: | அடியேன் ப்ரேரிதனாய் [அத ஏவ] |
| ப்ரஹ்ருஷ்டதீ: | உவந்த உள்ளத்தனாய் |
| தவ | தேவரீருக்கு |
| வரிவஸ்யநம் | பரிசர்யையை |
| கதா விதாஸ்யே | எப்போது செய்யப் போகிறேன். |

* * * அத்தலையில் பேரருளன்றித் தமக்குப் புகலொன்று மில்லாமையை வெளியிட்ட வநந்தரம் கைங்கர்யத்திலே தமக்குண்டான த்வராதிசயத்தை ஆவிஷ்கரித்தருளுகிறார். 'கதா மாம் பகவாந் ஸ்வகீயயா அதிசீதலயா த்ருசாவலோக்ய ஸ்நிக்த கம்பீர மதுரயா கிரா பரிசர்யாயா மாஜ்ஞாபயிஷ்யதீதி பகவத் பரிசர்யாயாமாசாம் வர்த்தயித்வா' [ஸ்ரீ வைகுண்ட கத்யே] என்றருளிச் செய்தபடியே பரிசர்யை யிலாசையைப் பெருக்குகிறாராய்த்து.

'க்ரியதாமிதி மாம் வத' என்றும் 'ஏவ மற்றமரராட் செய்வார்' என்றும் சொல்லுகிறபடியே அத்தலை ஏவிக்கொள்ள வேணுமென்றிறே சாஸ்த்ரார்த்தமிருப்பது. 'அடிமை செய்யவேணும், எல்லா வடிமையும் செய்யவேணும், ஏவிக்கொள்ளவும் வேணும்' என்றிருக்கையிறே ப்ராப்தம். சோதிவாய் திறந்து நியமிப்பதோடு திருக்கண்ணோக்காலே நியமிப்பதோடு ப்ருவிப்ரமங்களாலே நியமிப்பதோடு வாசியற எல்லாம் உத்தேச்யமாயும் போகமாயுமிருக்குமிறே. ஆகையாலே, ஏதேனுமொருபடியாலே அடியேனை ஏவிப் பணிகொள்ளப்பெற்று, மகிழ்வது என்றோ என்கிறார்.

'தவ வரிவஸ்யநம் கதா விதாஸ்யே' என்பதை நைராச்யத்திலேயாக்கி, இனி நானிங்ஙனே அடிமை செய்வதென்றொரு பொருளுண்டோ? என்று ஆசையறுக்கிறாரென்று பொருள் சொன்னாரொருவர். அங்ஙனேயல்ல; 'என்றே யென்னை யுன் ஏரார் கோலத் திருந்தடிக்கீழ், நின்றே யாட்செய்ய நீ கொண்டருள நினைப்பதுதான்?' என்றாப்போலே அபேக்ஷிக்கிறாரென்றுதான் நிர்வஹிக்கும்படி. நைராச்யத்திலே தாத்பர்யமாக்குகைக்கு அவஸரமில்லையிறே.

'வரிவஸ்யா' என்றும் 'வரிவஸ்யநம்' என்றும் பணிவிடையைச் சொல்லுகிறது. ... (66)

**विविश्य विश्वेन्द्रियतर्षकर्षणीः मनस्स्थले नित्यनिखातनिश्चलाः ।**
**सुधासखीर्हस्तिगते सुशीतलाः गिरश्श्रवस्याः शृणुयाम तावकीः ॥ ९७ ॥**

**விவிச்ய விச்வேந்த்ரியதர்ஷகர்ஷணீ: மநஸ்ஸ்தலே நித்யநிகாதநிச்சலா: ।**
**ஸுதாஸகீர் ஹஸ்திகதே ஸுசீதலா: கிரச் ச்ரவஸ்யா: ச்ருணுயாம தாவகீ: ॥ 97 ॥**

| | |
|---|---|
| ஹே ஹஸ்திபதே | ஹஸ்திகிரிநாதனே ! |
| விவிச்ய | உட்புகுந்து |
| விச்வேந்த்ரிய தர்ஷ கர்ஷணீ: | ஸர்வேந்த்ரியங்களுடையவும் விடாயைத் தீர்ப்பவையாய் |
| மநஸ்ஸ்தலே | மனதில் |
| நித்யநிகாதநிச் சலா: | எப்போதும் நாட்டப்பட்டு ஸ்திர மானவையாய் |
| ஸுதாஸகீ: | அம்ருதம்போன்றனவாய் |
| ஸுசீதலா: | மிகக்குளிர்ந்தவையாய் |
| ச்ரவஸ்யா: | செவிக்கினியவையான |
| தாவகீ: | உன்னுடையவைகளான |
| கிர: | வாய் மொழிகளை |
| ச்ருணுயாம | செவியேற்கக்கடவோம். |

* * * 'தொண்டரோர்க்கருளிச் சோதிவாய் திறந்துன் தாமரைக் கண்களால் நோக்காய்' என்று ஆழ்வார் ப்ரார்த்தித்த அடைவிலே ப்ரார்த்தியாதே விலோகநதிமாத்ரத்தையே ப்ரார்த்தித்தாராய் நின்றார் கீழ். சோதிவாய் திறந்தொன்று சொல்லவேணுமென்றால் அர்ச்சாவதார ஸமாதியை அத்யந்தம் குலைத்த தாகுமாகையாலே அந்த ப்ரார்த்தனை ஆகாதென்று நினைத்தார்போலும் கீழ்; இனித்தான் பேருளாள னுடைய பரிமாற்றங்களை ஆராய்ந்தவாறே அது தன்னையும் நிர்விசங்கமாக ப்ரார்த்திக்கலாம்படியிறே யிருப்பது. திருக்கச்சி நம்பிகளோட்டைப் பரிமாற்றத்தை யாராய்ந்தார். அது 'அஸங்கேதமநாலாபம்' என்ற அர்ச்சாவதார மர்யாதை குலைந்திருக்கும்படியை யுணர்ந்தார். இனி நாம் ஸம்பாஷணம் தன்னையும் ப்ரார்த்திக்கக் குறையென்ன? என்று தம்மில் தாமே தேறி அது தன்னை ப்ரார்த்திக்கிறாராய்த்து இந்த ச்லோகத்தில்.

[ஹே ஹஸ்திபதே ! தாவகீ: கிர: ச்ருணுயாம] தேவரீர் சோதிவாய் திறந்து அருளிச்செய்யும் ஸ்ரீ ஸூக்திகளை அடியோங்கள் கேட்கப் பெறவேணும். அந்த ஸ்ரீஸூக்திகள் எப்படிப்பட்டவை யென்ன, விசேஷிக்கிறார்—விவிச்யேத்யாதியாலே. [விவிச்ய] தர்மபூதஜ்ஞாநம் புகுமிடங்களடங்கலும் புகுந்து என்றபடி. [விச்வேந்த்ரிய தர்ஷ கர்ஷணீ: ] ஸர்வேந்த்ரியங்களினுடையவும் விடாயைத் தீர்க்கவல்ல வையாய்.

[மநஸ்த்தலே நித்ய நிகாத நிச்சலா: ] ஹ்ருதய மத்யத்திலே நித்யப்ரதிஷ்டிதங்களா யிருக்கக் கடவவையாய். "எட்டனைப் பொழுதாகிலுமென்றும் என் மனத்தகலாதிருக்கும் புகழ்' என்னுமா போலே 'இதொரு ஸ்ரீஸூக்தியிருந்தபடியென்' என்று இடைவிடாது ஈடுபடலாம்படி ஹ்ருதயத்தி னுள்ளே பொதிந்துகிடக்கக்கடவ ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்யவேணு மென்றபடி. [ஸுதாஸகீ: ] போக்யதையிலே அம்ருத தாரையை யொத்திருக்கவேணும். [ஸுசீதலா:] * தாபத்ரயீமயதவாநல தஹ்யமாநனை அடியேனுடைய தாபங்களெல்லாம் தீருகைக் குறுப்பான குளிர்த்தி பொருந்தியிருக்க வேணும். [ச்ரவஸ்யா:] பகவதுக்திகள் தான் செவிக்கினிய செஞ்சொல்லாயிறே யிருப்பது. ச்ரவஸோ ஹிதம் ச்ரவஸ்ய மென்றாகக்கடவது. சரீராவயவாத்யத்' என்றிறே பாணிநீயம். ச்ரவஸ்ஸுக்கு ஹித மென்றது உபகாரக மென்றபடி. [தாவகீர்கிர:] கீழ்ச்சொன்ன குணங்களொன்று மில்லாதொழிந்தாலும் தேவரீருடையவை யென்னுமத்தாலே வருவதொரு மேன்மையுண்டிறே உக்திகளுக்கு. 'இங்கிதம் நிமிஷிதம்ச தாவகம் ரம்ய மத்புத மதி ப்ரியங்கரம்' [ஸுந்தர பாஹுஸ்தவே,] ததீயமென்னு மாகாரத் தாலேயிறே எல்லா முத்தேச்யமாவது. 'ச்ருணுயாம' என்றும் 'ச்ருணவாம' என்றும் பாடபேதமுண்டு ; தாத்பர்யபேதமில்லை. தம்மடியார்களையும் கூட்டிக்கொண்டு பஹுவசனப்ரயோகம் பண்ணுகிறார். 'இனியா முறைமை' போலே ஸுமந்த்ர, அக்ரூரப்ரப்ருதிகள் விபவாவதாரத்தில் பாரித்த பாரிப்பை அர்ச்சாவதாரத்திலே பாரிக்கிறார், 'ஆசயா யதி வா ராம: புநச்சப்தாபயேதிதி' என்று ஸுமந்த்ரரும் 'ஸமக்ருரேதி வக்ஷ்யதி' என்று அக்ரூரரும் மனோரதித்திருந்தார்களிறே. ... .... (97)

अशेषदेशाखिलकालयोगिनीषु अहं त्ववस्थास्वखिलास्वनन्यधीः ।
अशेषदास्यैकरतिस्तदाचरन् करीश वर्तेय सदा त्वदन्तिके ॥ ९८ ॥

**அசேஷதேசாகிலகாலயோகிநீஷு அஹம் த்வவஸ்தாஸ்வகிலாஸ்வநந்யதீ: ।**
**அசேஷதாஸ்யைகரதிஸ் ததாசரந் கரீச வர்த்தேய ஸதா த்வதந்திகே ॥ 98 ।**

| | | | |
|---|---|---|---|
| ஹே கரீச | கரிகிரிநாதனே ! | தத் | அந்த அசேஷதாஸ்யத்தை |
| அசேஷதேச அகில கால யோகிஷு | ஸர்வ தேச ஸர்வ காலங்களோடும் சேர்ந்த | அநந்யதீ: ஆசரந் ஸந் | வேறென்றில் புத்தி செலுத்தாதவனுகி அநுஷ்டிக்கிறவனுய் |
| அகிலாஸு அவஸ்தாஸு | ஸர்வாவஸ்தைகளிலும் | ஸதா | எப்போதும் |
| | | த்வதந்திகே | உனது ஸமீபத்தில் |
| அசேஷதாஸ்ய ஏகரதி: அஹம் | ஸர்வவிதகைங்கர்யங்களிலும் ஆராதகாதலையுடைய அடியேன் | வர்த்தேய | இருக்கக்கடவேன். |

* * * 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச்ச தே' என்கிறபடியே ஸர்வதேச ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கர்யைகரதியாய் * ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யப்பெறவேணுமென்கிறார். தர்மி ஒன்றே யாகையாலே விஷயம் எங்குமொக்க பூர்ணமான பின்பு ஒரு தேசவிசேஷத்தில் போனால் செய்யக்கடவ அடிமைகளெல்லாம் இந்நிலத்திலே செய்யலாம்படிக் கீடாகக் குறையற்றிருக்குமிறே திருவத்திமாமலையானது. இவர்க்குத்தான் இவ்வுடம்பு விரோதியன்றிக்கே அடிமை செய்கைக்குப் பாங்காயிருக்குமாகையாலும், அங்குப் போனாலும் 'ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ' இத்யாதிப்படியே குணாநுபவமே பண்ணவேண்டுகையாலே அந்த சீலாதி குணங்கள் தான் இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பது இங்கேயாகையாலும் 'நாமுமிங்கேயிருந்து நித்ய கைங்கர்யம் பண்ணுவோம்' என்று பாரிக்கிறார். பகவத்விஷயத்திலே அடிமை செய்ய வொருப்படுவார்க்கெல்லாம் உள்ள தொன்றுபிறே முன்பே பாரித்துக்கொண்டிழியுமது, 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்றிறே இளைய பெருமாள்படி.

[அசேஷ தேசாகில காலயோகிஷு அகிலாஸ்வவஸ்த்தாஸு] ஸர்வதேசங்களிலும் ஸர்வகாலங்களிலும் என்றபடி. அவஸ்தைகளாவன ஜாக்ராதிகள். [அநந்யதீ:] அந்ய பரனன்றிக்கே. * செருப்பு வைத்துத் திருவடி தொழுவாரைப் போலேயாக வொண்ணாதிறே. [தத் ஆசரந்] 'அசேஷ தாஸ்யை கரதி என்றதிலே ஏகதேசமான அசேஷதாஸ்யத்தைப் பராமர்சிக்கிறதாய்த்து தத்சப்தம். 'தவாசரந்' என்பது சிலர் பாடம். [ஸதா த்வதந்திகே வர்த்தேய,] பெருமாளும் பெரிய பிராட்டியுமாய் திரையை வளைத்துக்கொண்டிருந்தாலும் படிக்கம் குத்துவிளக்கு முதலியவை போலே அவ்வளவிலும் நின்று அந்தரங்க வ்ருத்திகளைப் பண்ண விரும்புகிறாய்த்து. ... ... ... (98)

**इमं जनं हन्त कदाऽभिषेक्ष्यति त्वदक्षिनद्योर्वरद श्रमापहा ।**
**अकृत्रिमप्रेमरसप्रवाहजा विसृत्वरी वीक्षणवीचिसन्ततिः ॥ ९९ ॥**

**இமம் ஜநம் ஹந்த கதாபிஷேக்ஷ்யதி த்வதக்ஷிநத்யோர் வரத ச்ரமாபஹா ।**
**அக்ருத்ரிம ப்ரேமரஸப்ரவாஹஜா விஸ்ருத்வரீ வீக்ஷணவீசிஸந்ததி: ॥ 99 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரத | பேரருளாளா ! | ச்ரமாபஹா | விடாய் தீர்க்கவல்ல |
| த்வதக்ஷிநத்யோ: | உனது திருக்கண்களாகிற நதிகளினுடைய | விஸ்ருத்வரீ | எங்கும் பரவக்கூடிய |
| | | வீக்ஷண வீசி ஸந்ததி: | கடாக்ஷமாகிற அலைகளின் வரிசையானது |
| அக்ருத்ரிமப்ரேம ரஸப்ரவாஹஜா | ஸ்வாபாவிகமான ப்ரீதியாகிற ரஸ ப்ரவாஹத்தில் நின்று முண்டாகக் கடவதாய் | இமம் ஜநம் | இந்த அடியேனை |
| [அத ஏவ] | | கதா அபிஷேக்ஷ்யதி ஹந்த | எப்போது மஞ்சனமாட்டப் போகின்றது ? |

* * * 'யச்ச ராமம் ந பச்யேத்து யம் ச ராமோ ந பச்யதி । நிந்திதஸ்ஸ வஸேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே' என்கிறபடியே எம்பெருமானை ஸேவிக்கப்பெறுதல் எம்பெருமானாலே கடாக்ஷிக்கப் பெறுதலாகிற ப்ராப்யத்வயமுண்டிறே. அது தன்னில், எம்பெருமானைத் தாம் ஸேவிக்கப்

பெறுவதிலும் காட்டில் எம்பெருமானாலே தாம் கடாக்ஷிக்கப்பெறுகை உத்தேச்ய தரமாயிருக்கையாலே அது தன்னை முந்துற முன்னம் இந்த ச்லோகத்தில் அர்த்திக்கிறார்.

[ஹே வரத ! த்வதக்ஷி நத்யோ: வீக்ஷணவீசி ஸந்ததி: இமம் ஜநம் கதாபிஷேக்ஷ்யதி?] தேவரீருடைய திருக்கண்களாகிற நதிகளில் நின்றும் வீக்ஷணங்களாகிற அலைவரிசைகள் பாவியேனை மஞ்சனமாட்டுவது என்றைக்கென்கிறார். [ச்ரமாபஹா அக்ருத்ரிமப்ரேமரஸப்ரவாஹஜா விஸ்ருத்வரீ] வீசி ஸந்ததியானது தன்னிலே படிந்தாருடைய விடாயையெல்லாம் தீர்க்கவற்றாயும் ப்ரவாஹத்தில் ப்ராதுர்ப்பவிப்பதாயும் விஸ்தார சீலமாயுமிருக்குமாபோலே கடாக்ஷதாரையும் தாபத்ரயநிவர்த்தநக்ஷமமாய் அவ்யாஜப்ரீதிரஸ ப்ரவாஹமடியாகப் பெருகுவதாய் ஆச்ரித ஜநமுள்ள விடமெங்கும் புக்கு வ்யாபிக்கக் கடவதாயிருக்கும்படியைச் சொல்லுகிறது.—கடாக்ஷாம்ருத ரஸாவஸேகத்தாலே அடியேனைக் கைங்கர்ய ஸாம்ராஜ்யாதிபதியாக ஆக்கியருளவேணுமென்று ப்ரார்த்தித்தபடி.

'அபிஷேக்ஷ்யதே' என்று சிலர் ஓதுவார்கள். ... ... ... (99)

सदातनत्वेऽपि तदातनत्ववत् नवीभवत्प्रेमरसप्रवाहया ।
निषेवितं त्वां सततोत्कया श्रिया करीश पश्येम परश्शतं समाः ॥ १०० ॥

ஸதாதநத்வேபி ததாதநத்வவத் நவீபவத்ப்ரேமரஸப்ரவாஹயா ।
நிஷேவிதம் த்வாம் ஸததோத்கயா ச்ரியா கரீச பச்யேம பரச்சதம் ஸமா: ॥ 100 ॥

| | | | |
|---|---|---|---|
| கரீச | கரிகிரிநாதனே ! | ஸதத உத்கயா | நித்யமாசை கொண்டிருக்கிற |
| ஸதாதநத்வேபி | நித்யபரிசிதமா யிருக்கச் செய்தேயும் | ச்ரியா | பிராட்டியாலே |
| ததாதநத்வவத் | அபூர்வமானாற்போல | நிஷேவிதம் | நித்யாநுபூதனாயிரா நின்ற |
| நவீபவத்ப்ரேம ரஸப்ரவா ஹயா | புதிது புதிதாக விளையா நிற்கிற ப்ரணய ரஸபரம்பரையையுடையவளாய் [அத ஏவ] | த்வாம் | உன்னை |
| | | பரச்சதம் ஸமா: | பல்லாண்டு பல்லாண்டாக |
| | | பச்யேம | ஸேவிக்கக் கடவோம். |

* * * 'யச்ச ராமம் ந பச்யேத்து' என்ற குறை தீரவிரும்புகிறாரிதில். [ஹே கரீச ! ச்ரியா நிஷேவிதம் த்வாம் பரச்சதம் ஸமா: பச்யேம] பிராட்டியும் தேவரீரும் சேர்த்தியாயிருக்கக் காணப்பெறுவேணுகில் 'சதாயுர்வை புருஷ:—வேத நூற் பிராயம் நூறு' என்ற மர்யாதையைக் குலைத்து நூற்றாண்டுக்கு மேற்பட இருந்தாகிலும் கண்டு களிப்பேனென்கிறார்.

[ஸதா தநத்வேபி] நித்யமாய்ச் செல்லா நிற்கச்செய்தேயும் [ததா தநத்வவத் நவீபவத் ப்ரேம ரஸ ப்ரவாஹயா] எம்பெருமானளவிலே பிராட்டியின் ப்ரணயரஸம் அவிச்சிந்நஸ்ரோதோரூபேண நித்யமாய்ச் செல்லா நிற்கச் செய்தேயும் 'அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதம்' என்னும்படியான விஷயமாகையாலே க்ஷணந்தோறு மிட்டுமாறினாப்போலே புதுக்கணித்திருக்குமாய்த்து. அவள்தான் திருமார்பிலே அவிநாபூதையாயிருந்துகொண்டு நித்யாநுபவம் பண்ணா நிற்கச் செய்தேயும் 'அகலகில்லேனிறையும்' என்பாளே; இதுதான் அகன்றிருந்து சொல்லுகிற வார்த்தையன்று. அகலுகைக்கு ப்ரஸக்தியுண்டாய்ச் சொல்லுகிற வார்த்தையுமன்று; 'ததா ததா நவம் நவம்' என்னும்படியான விஷயம்படுத்துகிற பாடிறேயிது. அநுபாவ்ய விஷயம் நவம் நவமானால் அநுபவமும் நவம் நவமாமே; அதடியாக அநுபவித்ருஜந ப்ரணயரஸமும் நவம் நவமாமிறே; அதைச் சொல்லுகிறதாய்த்திங்கு. ததாதநத்வே இவ ததாதநத்வவத்; அப்போதுண்டானாற்போலே என்கை. இங்ஙனன்றிக்கே ததாதநச் சாஸௌ த்வச்ச—ததாதநத்வ:—தஸ்மிந் இவ—ததாநத்வவத்; என்று பணித்தார் சிங்கப்பெருமாள். த்வ: என்கிறவிது ஸர்வநாமசப்தங்களிலொன்று; இதற்கு இதர: என்று பொருள். 'ப்ரஜாபதிம் த்வோ வேத ப்ரஜாபதிஸ்த்வம் வேத' [யஜுஷி । கா 7 ப்ர] என்ற விடத்தில் போல. ஏவம் ச, ததாதநத்வவத்—அப்போதுண்டான வேறொரு வஸ்துவில்போல என்றதாகிறது.

[ஸததோத்கயா] உதகசப்தம் உத்கண்டிதார்த்தகம். நித்யோத்ஸுகையான என்றபடி. 'பிரியேன்; பிரியில் தரியேன்' என்று அல்லும் பகலும் வாய்வெருவுமவளிறே. [ச்ரியா நிஷேவிதம் த்வாம்] இப்படிப்பட்ட பிராட்டியோடே நித்யஸம்ச்லிஷ்டரான தேவரீரை [பச்சதம் ஸமா: பச்யேம] நெடு நாளளவும் ஸேவிக்கக்கடவோ மென்கை. ஸமா:=த்விதீயா பஹுவசநம்;' காலாத்வநோரத்யந்த ஸம்யோகே த்விதீயா இதிபாணிநி:.

[பச்யேம] அபிநிவேசத்தில் தமக்குத் தோள்தீண்டிகளான தம்மடியாரையும் கூட்டிக் கொண்டமை தோன்ற பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறார். ... ... ... (100)

**समाहितैस्साधु सनन्दनादिभिः सुदुर्लभं भक्तजनैरदुर्लभम् ।**
**अचिन्त्यमत्यद्भुदमप्रतर्कणं वरप्रद त्वत्पदमाप्नुयां कथम् ॥ १०१ ॥**

**ஸமாஹிதைஸ் ஸாது ஸநந்தநாதிபி: ஸுதுர்லபம் பக்தஜநைரதுர்லபம் ।**
**அசிந்த்யமத்யத்புதமப்ரதர்க்கணம் வரப்ரத த்வத்பதமாப்நுயாம் கதம் ॥ 101 ॥**

| | | | |
|---|---|---|---|
| வரப்ரத | பேரருளாளனே! | அசிந்த்யம் | சிந்தைக்கும் விஷயமாகாததாய் |
| ஸாது | நன்றாக | அப்ரதர்க்கணம் | ஊஹத்துக்கும் அவிஷயமாய் |
| ஸமாஹிதை: | ஸமாதி நிஷ்டர்களான | | [அத ஏவ] |
| ஸநந்தநாதிபி: [அபி] | ஸநந்தன ஸநக ஸநத்ஸுஜாதாதி முனிவர்களாலும் | அத்யத்புதம் | மிகவு மாச்சர்யமான |
| ஸுதுர்லபம் | அடைய முடியாததாய் | த்வத்பதம் | உனது இருப்பிடமாகிய திருநாட்டை |
| பக்தஜநை: அதுர்லபம் | பத்துடையடியவர்களாலே எளிதில் அடைய முடிந்ததாய் | கதம் ஆப்நுயாம் | எப்படி [ஸ்வப்ரயத்நத்தினால்] அடைவேன்? |

* * * 'மநோரதாநாமதடா: ப்ரவாஹா:' என்கிறபடியே கரையழிந்து பெருகிச் செல்கிற தம்முடைய மநோரதப்ரவாஹ பரம்பரைகளை இங்ஙனே விண்ணப்பம் செய்தவளவிலும் 'கண்டேன் கமல மலர்ப்பாதம்' என்றும் 'உற்றேனுகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன்' என்றும் சொல்லிக் களிக்கும்படி பேரருளாளன் அருள்செய்யக் காணாமையாலே தமக்குண்டான அதிசங்கையைத் திருமுன்பே விண்ணப்பம் செய்கிறார். 'உன்னுடைச் சோதி வெள்ளத் தகம்பாலுன்னைக் கண்டு கொண்டிட்டு. என்னுடைய யாருயிரார் எங்ஙனே கொல் வந்தெய்துவரே?' என்றாப்போலே யருளிச் செய்கிறார்,

[ஸாதுஸமாஹிதை: [அபி] ஸநந்தநாதிபி: ஸுதுர்லபம்] தம் தலையிலே சில ஏறிட்டுக்கொண்டு ஸமிதை பாதி, ஸாவித்ரி பாதியாக முயல்வார்க்குக் கிட்டவரிது. அசேதநக்ரியாகலாபங்களையே உபாயமாகப் பற்றப்பற்ற * தத்விஷ்ணோ: பரமம் பதம் நெடுகுமாய்த்து. 'நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன் அடிக்கமலந் தன்னையயன்.'

[பக்தஜநைரதுர்பலம்] 'அச்யுதபதாம்புஜ யுக்மருக்ம வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே' என்னும்படி யிருப்பார்க்கு 'பையரவில் மாயன் பரமபதமுங்களுக்காம் கையிலங்கு நெல்லிக்கனி' என்னலாம்படி எளிதாயிருக்குமாய்த்து. நம்பிள்ளையின் சிறு முறி * நலமந்தமில்லாதோர் நாட்டிலும் விலைச்செல்லுமென்ற வார்த்தையை நினைப்பது.

[அசிந்த்யம்] சிந்தாபதமதிக்ராந்தமாயிறே பரமபதந்தானிருப்பது. எம்பெருமானாரும் கத்யத்திலே 'ப்ரஹ்மாதீநாம் வாங்மநஸாகோசரே ஸ்ரீமதிவைகுண்டே திவ்யலோகே....தேஷாமபி இயத்பரிமாணமியதைச்வர்ய மீத்ருசஸ்வபாவமிதி பரிச்சேத்துமயோக்யே' என்றருளிச் செய்தாரிறே. [அத்யத்புதம்] அத்யாச்சர்யமானதொரு ஸ்தான விசேஷ மென்னலாமத்தனை போக்கிப் பாசுரமிட வொண்ணாது காணும். [அப்ரதர்க்கர்ணம்] ஏவம் பூதத்வாத் எவம் ஸ்யாதேதத்' என்றாற் போன்ற தர்க்கத்துக்கும் அபூமியாய்த்து. அத ஏவ [அத்யத்புதம்] என்றிங்ஙனே யோஜிக்கவுமாம். இப்படிப்பட்டதான [த்வத்பதம்] தேவரீருடைய திவ்ய ஸ்தானத்தை. [கதமாப்நுயாம்] அகிஞ்சனனான அடியேன் எங்ஙனே ப்ராபிக்கவல்லேனென்கிறார்

'வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரி யார் பெய்கிற்பார் மற்று ?' என்கிற கணக்கிலே * இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தேணிவாங்கி அருள்கொடுத்திட்டடிய வரை யாட்கொள்ள வல்ல தேவரீரே அடியேனுடைய 'ஆகிஞ்சந்யாநந்யகதித்வாதிகளைத் திருவுள்ளம் பற்றி * நயாமி பரமாம் கதி மென்றபடியே கொடுபோகில் போகலாமத்தனை போக்கி, எலியெலும்பனன் நானே எப்படி ப்ராபிக்க வல்லேனென்கிறார். ... ... ... (101)

**रामानुजांघ्रिशरणोऽस्मि कुलप्रदीपः त्वासीत् स यामुनमुनेस्स च नाथवंश्यः ।**
**वंश्यः परांकुशमुनेस्स च सोऽपि देव्याः दासस्तवेति वरदास्मि तवेक्षणीयः ॥ १०२ ॥**

**ராமாநுஜாங்க்ரிசரணோஸ்மி குலப்ரதீப:**
**த்வாஸீத் ஸ யாமுநமுநேஸ் ஸ ச நாதவம்ச்ய:|**
**வம்ச்ய: பராங்குசமுநேஸ் ஸ ச ஸோபி தேவ்யா:**
**தாஸஸ் தவேதி வரதாஸ்மி தவேக்ஷணீய: || 102 ||**

| | |
|---|---|
| வரத | பேரருளாளனே ! |
| ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி | [அடியேன்] எம்பெருமானாருடைய திருவடிகளைச் சரணமாக அடைந்தவன் ; |
| ஸ து | அந்த எம்பெருமானாரோ |
| யாமுநமுநே: | ஆளவந்தாருடைய |
| குலப்ரதீப: | வித்யா வம்சத்திற்கணிவிளக்காக |
| ஆஸீத் | ஆனார்; |
| ஸ ச | அந்த ஆளவந்தார் தாமும் |
| நாதவம்ச்ய: | [வித்யாவம்சத்தாலும் குடல் துடக்காலும்] ஸ்ரீமந் நாதமுனிகளுடைய வம்சத்தவர் |
| ஸ ச | அந்த நாதமுனிகளும் |
| பராங்குசமுநே: | நம்மாழ்வாருடைய |
| வம்ச்ய: | வம்சத்தவர் ; |
| ஸோபி | அந்த ஆழ்வாரும் |
| தவ தேவ்யா: தாஸ: | உனது பிராட்டிக் கடியவர் ; |
| இதி | என்கிற இந்த பாரம்பர்யத்தாலே |
| தவ | தேவரீருக்கு [அடியேன்] |
| கடாக்ஷணீய: அஸ்மி | கடாக்ஷிக்கத் தகுந்தவனாகின்றேனிறே. |

* * * நிகமத்தில், தம்மைக் கடாக்ஷித்தருளவேண்டுவது பேரருளாளனுக்கு அவர்ஜநீயமென்னுமிடத்தை முதலிக்கிறார்.

[ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி] எனக்கு நிதியுண்டு' என்பாரைப்போலே சொல்லுகிறார்காணும். 'ராமாநுஜார்ய சரணோஸ்மி' என்றாய்த்து தத்வ தீபத்திலும் தீபப்ரகாசத்திலும் வாதிகேஸரி ஆதரித்தருளின பாடம். 'நான் ராமாநுஜார்யருடைய குலத்தையுடையேனாக நின்றேன்' என்றிறே தீபப்ரகாசத்திலே விவரித்தருளிற்று. "விப்ரர்க்கு கோத்ர 'சரண' ஸூத்ரகூடஸ்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள், ப்ரபந்நஜனகூடஸ்தர் பராங்குச பரகாலயதிவராதிகள்." என்றிறே ஆசார்யஹ்ருதயம். கோத்ரஸூத்ரசரணங்களெல்லாம் இராமாநுசனுடையார்க்கு வ்யாவ்ருத்தமாயிருக்குமாய்த்து.

இராமாநுசனுக்குண்டான ஏற்றந்தானென்னில் [ஸ து யாமுநமுநே: குலப்ரதீப ஆஸீத] அவர் தாம் பெரிய முதலியாருடைய குலத்துக்கோர் விளக்காய் விளங்கினார். இராமாநுசனுடைய குலம் சொட்டைக்குலமோ வென்னில் ; இங்கு குலமென்றும் வம்சமென்றுமுள்ள சப்தங்கள் அபத்யஸந்தானபாரம்பர்யத்தையிட்டு ப்ரயுக்தமல்ல ; விஜ்ஞானஸந்தானமாய்த்து விவக்ஷிதம். ஆகவே, 'தூய்நெறிசேர் எதிகட்கிறைவன் யமுனைத்துறைவனிணையடியாம் கதிபெற்றுடையன் இராமாநுசன்' என்றதாய்த்து.

[ஸச நாதவம்ச்ய: ] அந்த பெரிய முதலியார் தாமும் ஸ்ரீமந்நாதமுனிகளுடைய திருவம்சத்திலவர். இங்கு வம்ச சப்தத்தாலே 'பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா' என்னும்படிக்கீடான குடல் துடக்கைச் சொல்லலாமாயினும் கீழோடும் மேலோடும் சேரும்படி சொல்லவேணுமிறே. வித்யாஸம்பந்தமே முக்கியமாக விவக்ஷிதமென்னலாம்.

[ஸசபராங்குசமுநேர் வம்ச்யஃ] அந்த நாதமுனிகளும் * குருகையில் வந்த குலமுனிவனுடைய குலக்கொழுந்து. * ஆரப்பொழில் தென் குருகைப்பிரான் அமுதத் திருவாயிரத் தமிழின் இசையுணர்ந்தோர்கட்கு இனியவர் தம் சீரைப் பயின்றுய்யும் சீலங்கொள் நாதமுனியிறே.

[ஸோபி தேவ்யாஃ தாஸஃ] அவ்வாழ்வாராகிறார் உனக்குப் படுக்கைப்பற்று. * பங்கயத்தாள் திருவருளும் கொண்ட தொண்டரிறே. [இதி] இத்யஸ்மாத்தேதோஃ என்றபடி [ஹே வரத ! தவ ஈக்ஷணீயோஸ்மி] உன்னைப்பற்றினரை நீ கடாக்ஷித்தாலும் உபேக்ஷித்தாலும் கேள்வியில்லைகாண்; 'ஸித்திர் பவதி வாநேதி ஸம்சயோச்யுத ஸேவிநாம் । நஸம்சயோஸ்தி தத்பக்த பரிசர்யாரதாத்மநாம் ॥ என்றதெல்லாம் கடலோசையாக வொண்ணுதே அந்தஃபுரபரிகரத்தை நோக்காதிருக்கப் போமோ வுனக்கு. 'யஸ்யாவீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்' என்னும்படி யிருக்கிற வுனக்கு அவள் புருவம் நெறித்தவிடத்தே குடநீர் வார்க்கவேண்டி யிருந்ததே. பிராட்டியின் உகப்புக்காக ஆழ்வாரைக் கடாக்ஷித்தாய். ஆழ்வாருடைய உகப்புக்காக நாதமுனிகளைக் கடாக்ஷித்தாய். நாதமுனிகளுடைய உகப்புக்காக ஆளவந்தாரைக் கடாக்ஷித்தாய். ஆளவந்தாருடைய உகப்புக்காக எம்பெருமானாரைக் கடாக்ஷித்தாய், அவ்வெம்பெருமானாருடைய உகப்புக்காக அடியேனைக் கடாக்ஷித்துத் தீரவேணுமென்கிறார். 'ச்ருத்வாவரம் தததுபந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத !' என்றார் தேசிகன். இராமாநுசனுடைய அபிமானத்திலே ஒதுங்கிக்கிடக்கிற என்னைக் கடாக்ஷித்தருளாயென்று தலைக்கட்டினாராய்த்து. [இந்த ச்லோகம் வஸந்ததிலகவ்ருத்தம்.]

मन्त्ररत्नगर्भितार्थसारपूरमेदुरा कूरनाथदेशिकेन्द्रवक्त्रपद्मनिस्सृता ।
हस्तिशैलकल्पशाखिदिव्यकीर्तिसत्सुधा षट्पदार्थतत्त्वनिष्ठषट्पदैर्निपीयताम् ॥

श्रीवत्साङ्कगुरोर्गभीरहृदया सूक्तिः क्व भोः कुत्र भोः, क्षोदीयस्तु कदध्वसु प्रसृमरा स्वल्पीयसी मे मतिः ।
एवं सत्यपि हन्त हस्तिगिरिराड्योजयन् साहसे, स्वात्मीयामिह शक्तिपूर्तिमतुलां प्राचिख्यपन्मन्मुखात् ॥

पदार्थो निश्शंकं प्रकटित इहाभूत् प्रथमतः, परस्ताद्भावार्थो विशदललिताध्वन्यभिहितः ।
अवर्ज्याश्शास्त्रार्थाः प्रकरणविशेषेषु घटिताः, सतां पौरोभाग्यप्रसृतिरिह माभूद्गुणदशाम् ॥

इदमेव सतां विभूषणं यदहो दोषसमीचिकीर्षणम् ।
इदमेव नृणां विदूषणं यदहो केवलदोषभाषणम् ॥

इत्थं वादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यसङ्कलिता ।
श्रीवरदस्तवटीका विलसतु शरदश्शतं मुदे विदुषाम् ॥

*பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்*

*கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யரியற்றிய
பஞ்சஸ்தவ வ்யாக்யானத்தில் தத்வார்த்த சிந்தாமணி யென்னும்

*ஸ்ரீ வரதராஜஸ்தவ வ்யாக்யானம் முற்றிற்று.*

॥ श्रीरस्तु ॥